# சீதாப்பாட்டியின் சபதம்

பாக்கியம் ராமசாமி



பூம்புகார் பதிப்பகம்
127 (ப. எண். 63), பிரகாசம் சாலை (பிராட்வே)
சென்னை - 600 108.
தொலைபேசி : 25267543

# என்னுரை

குமுதத்தில் இந்த நாவலைத் தொடர்கதையாக எழுத எனக்கு ஊக்கமும் உற்சாகமும் தந்து எழுத்துலகில் எனக்கு வழிகாட்டி அருளிய என் மதிப்புக்குரிய குமுதம் ஆசிரியர் அவர்களுக்கு என் மனப்பூர்வமான நன்றி உரித்தாகிறது.

இந்த நாவலை அழகிய வடிவிலே அச்சிட்டு வெளியிட்டுள்ள பூம்புகார் பதிப்பகத்தாருக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

பாக்கியம் ராமசாமி

# பதிப்புரை

சேலம் மாவட்டம் ஜலகண்டபுரத்தைச் சேர்ந்த ஜ.ரா சுந்தரேசன் 1-6-1932-ல் பிறந்தவர். குமுதம் பத்திரிகையில் 37 ஆண்டுகள் உதவி ஆசிரியராகவும், பின்னர் துணை ஆசிரியராகவும் பணிபுரிந்தவர். இவரது சொந்தப் பெயரிலும், புனைப் பெயர்களிலும் ஐநூறுக்கு மேற்பட்ட கதைகள் எழுதியுள்ளார். பல புனைப் பெயர்களில் ஒன்று, பாக்கியம் ராமசாமி. நகைச்சுவைக் கதைகளுக்கு மட்டுமே அந்தப் புனைப் பெயரைப் பயன்படுத்துகிறார்.

அப்புசாமி - சீதாப்பாட்டி கதாபாத்திரங்களைச் சிருஷ்டித்தவர். தமிழ் எழுத்தாளர் சங்கம் நடத்திய சிறுகதைப் போட்டியிலும், இலக்கிய சிந்தனை, திருச்சி தமிழ் எழுத்தாளர் சங்கம் ஆகியவை நடத்திய போட்டி களிலும் இவர் கதைகள் பரிசுகள் பெற்றிருக்கின்றன.

தமது சொந்தப் பெயரில் இவர் எழுதிய பிற நாவல்கள் முள்ளின் காதல், பாசாங்கு, கதம்பாவின் எதிரி, மனஸ், நெருங்கி நெருங்கி வருகிறாள், பொன்னின் புன்னகை ஆகியவைகளும் இன்னும் பிற நாவல்களும் அடங்கும்.

பாக்கியம் ராமசாமி அவர்களின் அப்புசாமி - சீதாப்பாட்டி கதாபாத்திரங்களின் நகைச்சுவை கதைகள் அனைத்தையும் தொடர்ந்து பூம்புகார் பதிப்பகம் பெருமையுடன் வெளியிட்டுவருகிறது. அந்த வரிசையில் இப்போது தங்கள் கரங்களில் "சீதாப்பாட்டியின் சபதம்" தவழ்கிறது. படித்து இன்புற, மனம் விட்டுச் சிரித்திட அன்புடன் வேண்டுகிறோம்.

– பூம்புகார் பதிப்பகத்தார்.

# சீதாப்பாட்டியின் சபதம்

## 1

டெலிபோன் அழைப்புக்காகச் சீதாப்பாட்டி காத்திருந்தாள். எந்த நிமிடமும் பா. மு. கழகக் காரியதரிசி அகல்யா சந்தானம் பாட்டியைக் கூப்பிடலாம். ஒரு முக்கியமான வி.ஐ.பி.யின் மனைவியைச் சீதாப்பாட்டி கழகச் சம்பந்தமாகப் போய் பார்க்க வேண்டியிருந்தது. அகல்யா சந்தானம் புறப்பட்டு நேரே அந்த முக்கியப் பிரமுகர் வீட்டுக்கு வந்து விடுவதென்றும், கிளம்புமுன் தனக்கு ஒரு ரிங் கொடுத்தால் தானும் அங்கு நேராகப் புறப்பட்டு வந்துவிடுவதாகவும் ஏற்பாடு

எதிர்பார்த்த டெலிபோன் மணி அடித்தது. டிரெஸ்ஸிங்டேபிள் முன்னால் நெற்றிக் குங்குமத்தை அப்போதுதான் டச் அப் செய்து கொள்ள எழுந்த பாட்டி திரும்பி டெலிபோனை எடுப்பதற்குள் -

அப்புசாமி இடுப்பில் கட்டிய அரையே அரைக்கால் துண்டு, ப்ளஸ் ஒரு கிழிசலுடன் குளிக்கிற அறையிலிருந்து விழுந்தடித்துக் கொண்டு ஓடி வந்தார்.

"எனக்காகத் தானிருக்கும்... எனக்காகத்தானிருக்கும் ரசகுண்டு கூப்பிடறேன்னான்..." என்று, பால்காரர்கள் ரோடில் விரட்டுவிடுகிற எருமை மாடு எதிர்பாராமல் வந்து டாஷ் அடிக்குமே அதுமாதிரி, சீதாப்பாட்டியை ஒரு மோது மோதியவாறு டெலிபோனை எடுத்துக் கொண்டார்.

டெலிபோன் கால் ஒருகாலும் தன் கணவருக்கு இருக்காது, தானாகப் பேசி மூக்கை உடைத்துக் கொண்டு தன்னிடம் தரட்டும் என்று சீதாப்பாட்டி சில விநாடிகள் அலட்சியமாக இருந்தாள். ஆனால் அப்புசாமி நிஜமாகவே பேசத் தொடங்கிவிட்டார். உள்ளூர் காலாக இருந்தும்கூட அண்டார்டிகாவுக்கு பேசுவதுபோல அலறினார்.

"ரசமா! அடடே.. அப்படியா? அடப்பாவமே! புடிச்சா? பூட்டகேஸ்தானா? என்னது? பாலைக் கக்கிடுச்சா! அடடே! அழுறானா? அடடே! அச்சச்சோ! அடக் கண்ணராவியே! ஜுரமோ... அப்புறம்.. வர்றேன்.. இதோ புறப்பட்டு வந்துடறேன். ... தைரியம் சொல்லு அவனுக்கு... பாவம்..."

சீதாப்பாட்டி சாடையாகக் கையை ஆட்டி, "வாட் இஸ் த மாட்டர்?" என்றாள். அப்புசாமி டெலிபோனை வைத்துவிட்டு, "சீதே! சீதே! நான் உடனே கிளம்பியாகணும்... ஐயோ... எனக்கு என்ன பண்றதுன்னு தெரியலே.. குளிக்கக்கூட நேரம் இருக்காது போலிருக்கே.. பீமா மயக்கமாவே ஆயிட்டானாம்... ரசம் கதறினான் டெலிபோனில்..." என்று துடித்தார்.

பிறகு அவசர அவசரமாக அப்புசாமி வேட்டியைக் கட்டிக்கொண்டார். ஜிப்பாவைத் திருப்பிப் போட்டு, அப்புறம் சரியாகப்போட்டு, "சீதே ரொம்ப மன்னிச்சுக்கோ. ரேஷன் கடையிலே போய் இன்னைக்கிச் சர்க்கரை வாங்கிட்டு வர முடியாத நிலையில் இருக்கிறேன்..." என்றார்.

சீதாப்பாட்டிக்கு அப்புசாமியின் இந்தத் திடீர் அவசரமும், ரசகுண்டு கூப்பிடுவதும் - 'ஏதோ ஸம்திங் ஃபிஷ்ஷி' என்று தோன்றியது.

"வாட் இஸ் த மாட்டர்... பீமாவுக்கு என்ன?" என்றாள்.

"நீங்க கோபிச்சுக்கவில்லையா? யூஷுவலா உங்களை யாராவது கிரேன்னு சொன்னால் உங்களுக்குக் கோபம் வருமே. . . " என்றாள் சீதாப்பாட்டி குறும்புச் சிரிப்புடன்.

அப்புசாமிக்கு அவள் சொன்னதும் புரியவில்லை.

"நான் புறப்படறேன் சீதே. ஹிஹி!" என்றார்.

சுறுசுறுப்பாக அவர் கிரிக்கெட் மேல் ஆர்வம் காட்டி விளையாடுவதில் அவளுக்கு ஒரு வகையில் திருப்திதான். ஆனாலும் நண்டுவாக்கிளி கேஸ் மாதிரி ஏதாவது மறுபடி கொண்டு வந்துவிட்டால் என்ன பண்ணுவது என்று அவரது ஆர்வத்துக்கு அணைபோட நினைத்தாள்.

"மறுபடியும் குப்பைமேடுதானே? ஐ டோன்ட் அலௌ இட்"

நுங்கம்பாக்கம் ஏரிப் பகுதியில் கட்டிடங்கள் வந்து விட்டதால், அருகிலிருந்த குப்பை மேட்டையே மைதானமாகக் கொண்டு அப்புசாமியின் குழுவினர் விளையாடிக் கொண்டிருந்தனர். டமில் காவஸ்கர் என்று தன்னை அழைத்துக் கொண்டு சின்னப் பொடிப் பயல் ஒருத்தன் அப்புசாமி அடித்த பந்தைக் குப்பையில் கைவிட்டுத்தேடப்போய், ஒரு குட்டி நண்டுவாக்கிளி அவன் கையைப் பதம் பார்த்து பையனுக்கு வாயிலும் மூக்கிலும் நுரை கக்கிட, அவனுடைய அம்மா இங்கே பாட்டிக்கிட்டே வந்து லபோ லபோ. . என்று கத்தி ஏகப்பட்ட விபரீதமாகி, நல்லகாலம் பிழைத்தான்.

"சே சே!" என்றார் அப்புசாமி, "நாங்க ஏன் அங்கே ஆடறோம் மறுபடி. . ?"

அப்புசாமியைப் பார்க்கப் பாவமாயிருந்தது சீதாப் பாட்டிக்கு. "ஒரு கண்டிஷன்," என்றாள். "அன்றைக்கு நடந்த மாதிரி ஏதாவது விபரீதம் நடந்துவிடாது என்று காரண்டி

கொடுப்பீர்களா?" என்று ஒரு கண்டிஷன் கிளாஸ் போட்டான்.

"ஷ்யூர்!" என்றார் அப்புசாமி நன்றிப் பெருக்குடன். "எவ்வளவு வேண்டுமானாலும் கரண்டி கரண்டியா இவ்விடம் கியாரண்டி தரப்படும். கியாரண்டியா சொல்வேன், எனக்கு ஒரு தொந்தரவோ அல்லது என்னால் மற்றவர்களுக்கு ஒரு தொந்தரவோ வராது வரவே வராது. இப்ப நில்லே. ஜாம் ஜாமென்று ஓர் அழகான பங்களாவின் காம்பவுண்டுக்குள் ஆடப்போகிறோமாக்கும். ரசகுண்டுவுக்கு ரொம்பத் தெரிஞ்ச வக்கீல் சாராம் - இங்கே தான்... நம்ப பேட்டையிலேதான். வக்கீல் வராகசாமி. உனக்குக்கூடத் தெரிந்திருக்குமே!"

"ஓ, அவரா?" என்றாள் சீதாப்பாட்டி "ரொம்ப ரிசர்வ்ட் டைப்பாச்சே! ஷல் ஐ டு ஒன் திங்? நான் வேணுமானால் போனால் போறதுன்னு உங்க டீமுக்காகப் பர்மிஷன் கேட்டுப் பார்க்கட்டுமா டெலிபோனில்?"

அப்புசாமிக்கு பாட்டிமேல் நம்பிக்கை இல்லை. நல்லவள் மாதிரி இப்படிப் பேசிவிட்டு, அப்புறம் இவளே வக்கீல்கிட்டே இங்கிலீஷ்லே தந்திரமாக, இவங்களுக்கு இடம் கொடுக்காதீங்கன்னு சொன்னாலும் சொல்லி விடுவாள் என்று அவருக்குத் தோன்றியது.

"பாவம்! உனக்கேன் சிரமம். நாங்களே பார்த்துக் கறோம்," என்று கிளம்பிவிட்டார்.

பொடிக் காராபூந்தி பொடிக் காராபூந்தியாக ஏழெட்டு வாண்டுகள், வலது கை இடது கையான ரசகுண்டு, பீமாராவ் ஆகியவர்களைக் கொண்ட, அப்புசாமியின் கிரிக்கெட் குழுவினர் தெருமுனையில் மைதான ரிசல்ட்டை எதிர்பார்த்து ஆவலுடன் நின்று கொண்டிருந்தனர். வராகசாமியின் வீட்டுக்குள் சென்று

திரும்பிய அப்புசாமியின் தளர்ந்த நடை அவர் வரும் பின்னே ரிசல்ட் வரும் முன்னே என்ற முடிவைச் சொல்லி விட்டது.

வராகசாமி 'வள்' 'வள்' சாமியாக எரிந்து விழுந்து நிராகரித்து விட்டார்.

மைதானம் தேடும் முயற்சியைக் கைவிடாமல் வேறு பல இடங்களிலும் அலைந்து கொண்டிருந்தார்கள். புளியங்கொட்டை என்கிற ரவி என்கிற விக்கெட் கீப்பர் பொடியன் ஒரு நல்ல செய்தியை அப்புசாமியின் கொழுக் கட்டைக் காதில் போட்டு வைத்தான். அவன் வீட்டுக்குப் பக்கத்தில்-நுங்கம்பாக்கம் தாண்டி கோடம்பாக்கம் போகிற வழியில், மெயின் ரோடிலிருந்து பிரிந்து உள்ளே போகிற ஒரு ரோட்டில் - ஒதுக்குப்புறமான மைதானம் கேள்வி கேட்பாரற்று வட்ட வடிவமாக அட்ட அழகாக இருப்பதாகவும், தான் டியூஷனுக்குப் போய் வருகிறபோ தெல்லாம் பார்ப்பதாகவும் தகவல் கொடுத்தான்.

அப்புசாமி மகிழ்ச்சி மிகுதியால் அவனை இடுப்பில் தூக்கி வைத்துக் கொண்டு விட்டார். அப்புசாமியின் கிரிக்கெட் குழுவினர் உடனடியாகப் புறப்பட்டுச் சென்று புளியங்கொட்டை கூறிய மைதானத்தைப் பரிசிலித்தனர்.

"தாத்தா. பிட்ச் எப்படிப் பார்த்திங்களா? பிட்ச்சி வாங்குது!"

"முதல்லே இந்தச் செடி கொடி, கொடுக்காபுளி வேலி இதையெல்லாம் வெட்டணும்டா சுத்தமா," என்றார் அப்புசாமி. "ஆளுக்கொரு கத்தியோ பிளேடோ கொண்டு வந்து."

"ஐயையோ! என்றான் ரசம். "கொடுக்காப்புளி நிழல் தான் நம்ம பெவிலியன். அவுட்டாற பாட்ஸ்மன் போய் உட்கார இடம் வேண்டாம்? அதுவுமில்லாமல் அந்த வேலி

இருக்கிறதாலே அந்தக் கட்டிடத்துக்குப் பின்பக்க ஜன்னலும் மறைஞ்சிருக்கு கட்டிடத்திலிருந்து யாராவது வீட்டுக்காரங்க பார்த்தாக்கூட நம்பளைத் தெரியாது."

"ஐஸா கில்லாடிடா நீ," என்று பாராட்டினார் அப்புசாமி.

அந்தக் குறிப்பிட்ட மைதானம் பா. மு. கழகத்துக்குச் சொந்தமான இடம் என்பது அப்புசாமிக்கோ, அவருடைய கிரிக்கெட் குழுவினருக்கோ துளியும் தெரியாது. நகரில் ஸௌத் மெட்ராஸில் பா. மு. க. வின் இன்னொரு கிளை ஆரம்பிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் எப்போதோ காலிமனை வாங்கிப் போட்டாகி விட்டது. ஆனால் கழகத்தில் போதுமான நிதி வசதி ஏற்படாததால் கட்டிடம் எழும்பாமல் இருந்தது. ஆனாலும் பெயரளவுக்கு ஒரு சிறிய அஸ்பெஸ்டாஸ் கொட்டகை அங்கே இருக்கத்தான் இருந்தது. அதை ஒட்டி விஸ்தாரமான பொட்டல் மைதானம்.

ஒரு பெரிய தட்டி, டென்னிஸ் கோர்ட்டை மறைக்கக் கட்டுவதுபோல் கொட்டகைக்கும் மைதானத்துக்கும் தடுப்புச் சுவராக விளங்கிக் கொண்டிருந்தது.

அந்தக் கிளைக் காரியாலயத்துக்கு எப்போதாவது தான் பா. மு. கழகத்தினர் வந்து போவார்கள். சீதாப்பாட்டி மனசுக்குள் ஒரு அருமையான திட்டம் வைத்திருந்தாள்.

சகுந்தலா வரதன் என்று பூந்தமல்லி ஹைரோடில் பிரபலமான ஒரு லட்சாதிபதியான டாக்டரம்மாளை அவள் சந்திக்க நேர்ந்தது.

வாரிசில்லாமல் இருப்பதால் தன் சொத்துக்கள் அனைத்தையும், தன் பங்களா உட்பட, ஒரு தர்ம ஸ்தாபனத்துக்குத் தந்துவிடப் போவதாக டாக்டரம்மாவின்

பேச்சிலிருந்து சீதாப்பாட்டி அறிந்தது முதல், அவள் மூளை தீவிரமாக வேலை செய்தது.

அந்தத் தர்மத்திலே ஒரு பகுதி. ஆஸ்ட்டர் ஆல் ஒரு டு லெக்ஸ்... அந்த அம்மாள் கிராண்ட் பண்ணினா னானால் - இனைக் கட்டிடம் ஆனந்தமாக எழுந்துவிடும்.

பா. மு. கழகத்தில் எல்லோரும் நீண்ட நாளாக எதிர் பார்த்த அந்த முக்கியமான தினம் அன்றைக்கு வந்தே விட்டது.

எண்பது வயது வெள்ளை நாரை போன்ற மெல்லிசான சகுந்தலா வரதனைச் சீதாப்பாட்டி மெதுவே கையைப் பிடித்துக் கழகத்துக்கு ஒரு வழியாகக் கூட்டி வந்துவிட்டாள். பக்குவமாக பட்ஜெட் விஷயத்தை வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவது போல் ஏற்றிக் கொண்டிருந்தாள்.

எல்லா அம்சங்களும் சாதகமாகவே இருந்தன. அங்கத்தினர் முகங்கள் அனைத்திலும் ஒரே மகிழ்ச்சி.

"அவுட்! அவுட்! கிரெய்க் அவுட்! எல் பி டபிள்யூ!" அலறினான் பந்தைப் போட்ட 'பேடி' கிட்டாதான்.

"சரிதான் போடா! பேடி, கோடி, மோடி, தோடி! நான் ஒண்ணும் அவுட்டில்லே!" என்றார் அப்புசாமி.

"ரெண்டு காலையும் வெச்சு நல்லா மறைச்சுட்டிருந் தீங்க. அழுவிணி! அழுவிணி!" பேடி பரிதாபமாகக் கெஞ்சினான்.

அப்புசாமி அலட்சியமாக, "சரிதான் போடுடா. எல் பி டபிள்யூ, பெரிய எல் பி டபிள்யூ, அது எந்த எக்ஸ் ஒய் இஜெட் டபிள்யூவாயிருந்தாலும் அந்தக் கட்டை விழுந்தாத்தான் கணக்கு!" என்றார்.

"அப்ப எல்பி டபிள்யூ?" என்றான் பேடி, அவன் டீமில் புதிதாக சேர்ந்த பையன். 'ஆட்ட கால ரூல்ஸ்

காப்டன் அப்புசாமியுடைய இஷ்டம் போல் மாறும் என்பது அவனுக்குப் பாவம் தெரியாது. ''தாத்தா அவுட்டில்லையா அம்பயர்! ஹௌ இஸ் இட்?'' என்றான் அவன் விடாமல். 'அம்பயர்' என்று சொல்லப்பட்ட ரூயிங்கம் மென்று கொண்டிருந்த உறுப்பினர் கொடுக்காபுளி நிழலிருந்து எழுந்து வந்தான். அப்புசாமி அவனைப் பார்த்துக் கண்ணடித்தார். கையால் மூன்று விரலைக்காட்டினார். அம்ப்யர் உடனே: "நான் சரியாய் பார்க்கலியே?" என்று சொல்லி விட்டான். அப்புசாமி அவனிடம் ரகசியமாக 'கமர்கெட் மூணு' என்று சாடை காட்டியதை யாரும் பார்க்கவில்லை.

ஆகவே அப்புசாமி தொடர்ந்து ஆடினார். விக்கெட்டைப் பரிபூர்ணமாக மறைத்துக் கொண்டு, கையால் தட்டி விட்டு, சில சமயம் ஃபுட்பால் மாதிரி காலிலேயே. இன்னவிதம் என்றில்லை. அட்டகாசமாக அப்புசாமி ஆடிக்கொண்டிருந்தார். சில சமயம் தானே உயர அடித்துவிட்டுத் தானே பிடிக்கவும் செய்தார். மட்டை அவர் செலவில் வாங்கினதால் அவரை அவுட் என்று சொன்னால் பேட்டைத் தாமறுத்துவிடுவார் என்று டீமில் எல்லோருக்கும் பயம் உண்டு. ஆகவே பீமராவும் ரசகுண்டுவும் அவர் இஷ்டத்துக்கு ஆட விட்டு விடுவார்கள். அப்படியே எவனாவது காட்ச் பிடித்தால் கூட அப்புசாமி தனது 'வீட்டோ' பவரைச செலுத்தி, "அவன் எங்கேடா புடிச்சான். தலையிலே பட்டுப் போச்சி, ஹைஹ! அவுட்டாறதுக்கு வேறு இளிச்சவாயனைப் பாருங்க," என்று அழிச்சாட்டியம் பண்ணி விடுவார்.

"டேய்! பேடி! நீ சொகமில்லைடா. ரசம்! நீ வாங்கிப் போடுடா! ஒரு பவுண்டரி அடிக்கணும்." தேன்கிண்ணத்தில் 'விரும்பிக் கேட்டவை' மாதிரி கேட்டும் ஆர்டர் கொடுத்தும் பந்து வீசச்சொல்லி இஷ்டத்துக்கு விளாசினார். ரசகுண்டு தாத்தாவுக்கு வாகாக பந்து

போட்டான். ஒவ்வொரு பந்துக்கும் ஒரு பவுண்டரியாக அடித்துத் தள்ளினார். கைதட்டல்! சீட்டி ஓசை! கடைசியாக ஒரு பந்து அவரை மயக்குவது போல வந்தது. விளாசினார் ஒரு விளாசு... ஸிக்ஸர்!

அப்புசாமி அடித்த ஸிக்ஸர், தில்லை வெளியில் கலந்துவிட்ட நந்தனார் ஜோதியைப் போலத் திரும்பியே வராமல் போகவும், காப்டன் என்கிற முறையில் இரண்டு பிளேயர்களை அனுப்பி வைத்தார் பந்தைத் தேடிக் கொணர.

அவர்கள் பந்தைத் தேடினார்கள் பந்து தட்டியை ஒரு பொத்தல் போட்டுக் கொண்டு மறுபக்கம் கட்டிடத்துக்குள் போய்விட்டது என்பதைத் தெரிந்து கொண்டார்கள். அதே சந்து வழியாகப் பந்து எங்கே விழுந்திருக்கும் என்று கண்ணோட்டம் விட்டவர்களுக்கு அங்கே கண்ட காட்சி அடுத்த கணம் வயிற்றைக் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைத்தது.

"தாத்தா! தாத்தா! ஐயோ... ஐயோ! ஆ! வயித்தைப் பிடிச்சிக்குது தாத்தா சிரிப்பு!" என்று வயிற்றை எக்கிக் கொண்டு ஒருத்தன் சிரித்தான்.

"டேய்! சொல்லித் தொலைச்சிட்டுச் சிரியுங்க ளேண்டா!"

"ஐயோ ஐயோ! கொக்கு மாதிரி ஒரு பொம்பிளை. அவள் கையிலிருந்த காப்பியெல்லாம் அவள் மேலே ஒரே அபிஷேகம்! அதோடயா... ஹய்யோ! ஹய்யோ!"

"என்னடாது! ஒரே டாமாஷா இருக்கு. என்ன ஆச்சு அங்கே?"

"பந்து அந்தப் பொம்பளை கையிலிருந்த காப்பியை மட்டுமில்லை... மூக்குக் கண்ணாடியையும் தட்டி விட்டிட்டுது போலிருக்குது! மூக்குக்கண்ணாடி இல்லேன்னா அம்பேல் போலிருக்குது அந்தப் பொம்பிளை.

குருடி மாதிரி தடவு தடவுன்னு... நீங்க அடிச்ச பந்து அவங்க காப்பியைத் தட்டிவிட்டுக் கண்ணாடியைத் தட்டிவிட்டு, ஒரே டமால்ஷ் தாத்தா..."

அப்புசாமி பெருமிதத்துடன், "பின்னே ஐயாவோட ஸிக்ஸர்னா சும்மாவா?" என்றார்.

ரசகுண்டு தக்க சமயத்தில் ஒரு விஷயத்தை ஞாபகப் படுத்தினான். "ஸிக்ஸர் சரி தாத்தா... பந்து கட்டடத்துக் குள்ளேயிருக்குதே... போய் எடுத்துட்டு வரவேண்டாமா?"

"சரி, போய் வாங்கிட்டு வந்திடு."

ரசகுண்டு தலையைச் சொறிந்தான். "உங்களாட்டம் பெரியவங்களாப் போனத்தான் தருவாங்க தாத்தா. எங்களை விரட்டிடுவானுங்க..."

அப்புசாமி அலட்சியமாகச் சிரித்தார், "சரியான சிறு காராபூந்திங்கடா... பந்து நம்மது... கேட்கிற விதத்தில் கேட்டால் தர்றாங்க... ஸாரி சொல்லிட்டாத் தீர்ந்தது. இப்படி ஒரு மைதானத்துக்குப் பக்கத்திலே வந்து கொட்டகை கட்டிக்கிட்டது அவுங்க பேரிலும் தப்புத்தானே?"

அப்புசாமி மட்டையை கையில் இடுக்கிக் கொண்டு மைதானத்தைச் சுற்றிப்போய் அந்தக் கட்டடத்தின் வாசல் பக்கம் நுழைந்தார். வெளியே யாரும் இல்லை... பந்து எங்காவது விழுந்திருக்கிறதா என்று தேடினார்.

கீழேயெல்லாம் காணோம். ஒருகால் மாடியில் உள் ரூமில் விழுந்திருக்குமோ என்று தயக்கத்துடன் மாடிக்குச் சென்று அறைக் கதவைத் திறந்தார்.

குப்பென்று அவர் முகம் வெளிறியது.

சீதாப்பாட்டி! பா. மு. க. கிழவிகள்! வெள்ளையாகக் கொக்குப் போல ஒரு அம்மாள் - மேலெல்லாம் காப்பிக் கறையுடன், பக்கத்தில் பீங்கான் கோப்பை உடைந்து -

"பா. . . பா. . . பந் . . . பந் பந் . . ." அப்புசாமியின் முழுசாக மூன்று எழுத்தை உச்சரிக்க முடியவில்லை.

அணைக்க மறந்த ஹீட்டரின் சிவப்புக் கம்பி போல சீதாப்பாட்டியின் கண்கள் செக்கச் செவேலென்று ஆயின, அப்புசாமியைப் பார்த்ததும்.

அவளுக்கு அங்கே மட்டையுடன் வந்தவர் தன் கணவராகத் தெரியவில்லை.

கழகத்துக்கு வந்திருக்கக் கூடிய இரண்டு லட்ச ரூபாயை அநியாயமாகத் தட்டிப் பறித்து விட்ட கிராதகன் மாதிரி தோன்றினார்.



## 2

"சீதே!" என்றார் அப்புசாமி பரிதாபமாகக் கெஞ்சியவாறு "வேண்டாம்! சீதே, வேண்டாம்! நான் பண்ணினது தப்புதான். ஆனால் நீ கொடுக்கிற தண்டனை ரொம்ப ரொம்ப ரொம்பப் பெரிசு. ஐயோ... வேண்டாம். வேண்டாம் "அப்புசாமி துணியினால் வாயைப்பொத்திக் கொண்டு கேவினார். "சீதே! இனி ஒரு தரம் அப்படிச் செய்யமாட்டேன்... நூறு தோப்புக் கரணம் வேணும்னாப் போட்டுடறேன். மன்னிச்சிடு! வேண்டாம். கிரோஸினை ஊற்றாதே ஊற்றாதே! நெருப்பு வைக்கிறதுக்கு முன்னாலேயே என் உடம்பு எரியற மாதிரி இருக்கே!" அப்புசாமி மண்டியிட்டு அலறினார். கெஞ்சினார். ஆனால் சீதாப்பாட்டியின் முகத்தில் கொஞ்சம்கூட இரக்கமோ பச்சாதாப உணர்வோ இல்லை. நெருப்புக் குச்சியை சர்ரென்று கிழித்து விட்டாள்.

அடுத்த கணம் ஜ்வாலைக் கொழுந்துகள் குப்பென்று பரவ, மறுவினாடி அப்புசாமி, "ஐயையோ! ஐயையோ எரிகிறதே! எரிகிறதே!" என்று துடித்தார். ஆயிரம் சிவாஜி கணேசன்களைப் போலத் துடித்தார். நிலத்தில் விழுந்து நெளிந்து புரண்டு, குப்புறத் திரும்பி, இப்புறத் திரும்பி, அப்புறத் திரும்பி, எப்பப்புறமோ எப்படி எப்படியோ திரும்பிக் கதறினார். தீக்கங்குகள் ஈவிரக்கமின்றி நடனம் புரிந்து கொண்டிருந்தன. சீதாப்பாட்டி கல் மனசுடன் அந்தக் காட்சியை நிதானமாகப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

ஒரு வழியாக கிரிக்கெட் மட்டை, ஸ்டம்புகள், பந்து அனைத்தும் சாம்பலாயின. அப்புசாமியின் கண்ணெதிரில் அவரது டீமின் சொத்துக்கள் சாம்பலாயின.

கிரிக்கெட் சாம்பலை அப்புசாமி துளியூண்டு கையிலெடுத்துப் பார்த்துவிட்டுக் குலுங்கிக் குலுங்கி அழுதார். "சீதே! அநியாயமா வெச்சுக் கொளுத்திட்டியேடி! சம்பலாப் பூடுச்சே! அடிப்பாவி! இனிமேல் எந்த 'பேட்'டை வெச்சிட்டு நான் கோல் போடுவேன். . . ." என்றவர் துக்கத்தினால் ஏற்பட்ட அச்சுப் பிழையை அவசரமாகத் திருத்தி கொண்டு, "எப்படி நான் இனிமேல் அடிப்பேன்! ரன் எடுப்பேன்! ரசகுண்டு வந்து, 'தாத்தா, என் பேட் எங்கே'ன்னா நான் என்னன்னு பதில் சொல்லுவேன். ஐயோ விக்கெட்டே! மூணுபேரும் ஒண்ணாப் போயிட்டீங்களே..." ஐயோ! குச்சி குச்சியா அழகாயிருந்தீங்களே. . ." அப்புசாமி வாயில் அடித்துக்கொண்டு விசித்திரமான சோக ஒலியை எழுப்பினார்.

சீதாப்பாட்டி புறக்கடை வாசற்படிக்கருகில் நின்று கொண்டிருந்தவள், "கெட் அப் ஐ ஸே. அந்தச் சாம்பலை யெல்லாம் வாரிக் கொட்டிவிட்டு உள்ளேபோய் அடுத்த வேலையைப் பாருங்கள். . ." என்றாள் கடுகடுப்புடன். அப்புசாமிக்கு வியர்த்தது. ஆனால் உஷ்ணத்தால் அத்தனை தப்பான முனையில் கொளுத்தப்பட்ட மிளகாய்ப் பட்டாஸ் மாதிரி சீறிக்கொண்டு விருட்டென்று எழுந்து மனைவியிடம் வந்து மூச்சு இரைக்க இரைக்க நின்றார்.

நெஞ்சில் பட்டுப்பட்டென்று எழெட்டு தரம் கிங்காங் மாதிரி அறைந்து கொண்டார். "சீதே! ஏ சீதே! உன் கழகத்தோட ஓட்டைக் கப்புகள் இரண்டை எங்க பந்து உடைச்சிட்டுதுன்னு. . . எங்க டீமுடைய சொத்து பூராவையும் கொளுத்திட்டே! அதைக்கூட மன்னிச்சுடுறேன். . . மாதிரி அப்புசாமிக்கு அந்தச் சாம்பலை வாரிக் கொட்டிட்டு வான்னு அதிகாரமாச் சொல்றே பார்?

அதை நான் மன்னிக்க முடியாது ... மனுஷியில்லேடி நீ பேய்! நீ பூசிக்கிறது மஞ்சளில்லேடி ... ரத்தம்டி ரத்தம் வயிறு எப்படி எரிகிறது தெரியுமா?"

சீதாப்பாட்டியும் பொருமினாள்.

"உங்களுக்கு இப்போ நான் கொடுத்திருக்கிற இந்தப் பனிஷ்மெண்ட் ரொம்பச் சாதாரணமானது - நீங்க பண்ணியிருக்கிற டேமேஜுக்கு ... இன்னும் என்னென்னவோ பண்ணியிருக்கணும்."

கழகக் கட்டிடத்துக்குப் பெரிய அளவில் ஒரு நன் கொடையை சகுந்தலா வரதனென்ற பணக்கார பெரும் மூதாட்டியிடமிருந்து செதுக்கி விடலாமென்று சீதாப்பாட்டி பெருமுயற்சி எடுத்துக்கொண்டது, அப்புசாமி அடித்த பந்தினால் அநியாயமாக வீணாகிவிட்டது. பந்து வந்து அடித்து, கையிலிருந்த கோப்பையைச் சிதற அடித்ததும் அந்த அம்மாளுடைய மூடே போய்விட்டது. நிலைமையை சமாளிக்க உடனே எல்லா உறுப்பினரும் விழுந்தடித்துக் கொண்டு அந்த அம்மையாரிடம் சென்று ஆயிரம் ஸாரிகள், இரண்டாயிரம் 'த்ஸொ த்ஸொ' சொல்லிக்கொண்டு ஒருத்தி துடைத்துவிட, ஒருத்திக்கு நாலுபேர் எங்காவது கண்ணாடிச் சிதறல் பட்டுவிட்டதோ என்று அக்கறையாகப் பார்க்க, சீதாப்பாட்டி நொடிக்கு நொடி தன் வருத்தத்தைத் தெரிவித்தவாறிருக்க அந்த அம்மாள் விருட்டென்று எழுந்தவள், எழுந்தவளே. போனவள் போனவளே. குறைந்தபட்சம் ஒரு பதினையாயிரம் ரூபாயாவது நன்கொடையாகக் கழகம் எதிர்பார்த்தது. எடுத்த செக் புத்தகத்தை விருட்டென்று கைப் பையில் போட்டுக் கொண்டு ஒரு பைசாகூடத் தராமல் போயே விட்டாள்.

அவள் போனது பணநஷ்டமல்ல; சீதாப்பாட்டிக்கு மானநஷ்டமாகவும் ஆகிவிட்டது. எல்லா அங்கத்தினர்களும் சீதாப்பாட்டியை ஒரு மாதிரியாகப்

பார்த்தார்கள் - பிரசிடெண்ட் கொஞ்சம் ஜாக்கிரதையா இருந்திருந்து அவர் கணவரை இங்கே வந்து விளையாட அனுமதியாதிருந்தால் இப்படிப்பட்ட அசம்பாவிதமும் நஷ்டமும் நேர்ந்திருக்காது என்று அவர்கள் பார்வையால் குற்றம் சாட்டியது சீதாப்பாட்டிக்குக் குறுகுறுத்தது.

நடந்த சம்பவத்தை நினைக்க நினைக்க, அப்புசாமியைப் பார்க்கப் பார்க்க, சீதாப்பாட்டிக்கு ஆத்திரமாக வந்தது.

பாட்டியின் சிந்தனையை அப்புசாமி குரல் கலைத்தது.

"சாம்பலாவே பூடுச்சே! ஆத்தான்னா வருமா? அப்பான்னா வருமா?" கதறினார் அவர்.

பாட்டி உறுமினாள்.

"எங்களுக்கு அட்லீஸ்ட் பதினையாயிரம் ரூபாய் லாஸ்."

அப்புசாமி ஆத்திரத்துடன், கேவலம் ஒரு பித்ஸாத் பதினையாயிரம் ரூபாய்க்கு எங்க பேட்டை நீ கொளுத்திடறதா? என்டி சீதே?" என்றார்.

"என்ன சொன்னீர்கள்? இன்னொரு தரம் சொல்லுங்கள்! பித்ஸாத் பதினையாயிரமா? மைகாட்! ஃபிப்டீன் தௌஸண்ட் ருபீஸ் உங்களுக்கு பித்ஸாத்தா! ஆமாம். நீங்க பெரிய டாட்டா. ஈவன் அந்த டாட்டா கூடப் பணத்தைப் பணமா மதிக்கிறதிலேதான் டாட்டாவாக இருக்க முடிகிறது. அண்டர்ஸ்டாண்ட்?"

அப்புசாமியிருந்த நிலையில் அதை ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. "இன்னும் பதினையாயிரம் தடவை சொல்வேன். பித்ஸாத் பித்ஸாத்! பித்ஸாத்! பதினையாயிரம் என்ன, லட்ச ரூபாய்கூட எனக்குத் தூசி!"

சீதாப்பாட்டி இளக்காரமாகச் சிரித்தாள். "ஆமாம். அந்தக் கால் தூசிக்குத்தான் நீங்க கால் கடுக்க நின்று தலையைச் சொறிவீர்களே. என்கிட்டேயே வந்து சொல்கிறீர்களே... சம்பாதிக்கிறவர்களுந்தான் பணத்தின் வால்யூ தெரியும்."

"என்னைத் தண்டபிண்டம்னு சொல்றே?"

"எக்ஸாக்டா அப்படி நான் சொல்லலை. சம்பாதிக்கத் துப்பு இல்லாத வெறும் சவடால் பேர்வழி என்கிறேன்."

"சீதே! நான் நினைச்சேன்னா இந்தக் கையாலே எத்தனை ஆயிரம் வேணும்னாச் சம்பாதித்து அந்தக் கையாலே செலவு பண்ணுவேன். தெரிந்து கொள்."

"தட்ஸ் த ஸ்பிரிட்!" என்றாள் சீதாப்பாட்டி. நீங்க சம்பாதிக்க கூடியவர் என்று எனக்கு தெரியுமே. உங்களுக்குப் பதினையாயிரம் ஒரு தூசி... நீங்க அப்படி ஒரு வேளை சம்பாதித்தால் எங்களுடைய ஏழைக் கழகத்துக்கு உங்களால் ஏற்பட்ட அந்த நஷ்டத் தொகை பித்லாத் பதினையாயிரத்தைத் தூக்கி நீங்க சொன்ன மாதிரி தலையைச் சுற்றி எறிஞ்சுடுவீங்க இல்லையா?"

அப்புசாமிக்கு ரோஷம் தலைக்கேறியது "என்னாடி... கிண்டல் பண்றியா? என்னாலே துட்டு சம்பாதிக்க முடியாது என்கிறியா?"

"எங்கே, ஆண் பிள்ளையாயிருந்தால் சம்பாதித்துக் காட்டுங்கள் பார்க்கலாம்..."

அப்புசாமிக்கு மீசைப் பிரதேசம் துடித்தது.

"சம்பாதிக்கக் காட்டினால் நீ என்ன செய்வே?" அப்புசாமி கூவினார்.

"உங்க காலிலே விழுந்து நமஸ்காரம் பண்றேன்."

"செக்கே!" என்றார் அப்புசாமி. "அந்தக் காதி யெல்லாம் எங்கிட்டே அடிக்காதே நீ! இந்த ரூமுக்குள்ளே என்ன இருக்கு?"

"பின்னே?"

"உங்க செழவிங்க கழகம் இருக்கே செழவிங்க கழகம்? அத்தனை செழவிங்க எதிரிலும் நான் வந்து ஜம்னு நிப்பேன். நீ எல்லார் எதிரிலும் என் காலிலே விழுந்து நமஸ்காரம் பண்ணணும் ... ஒரு தடவை இல்லை மூன்று தடவை. ... பந்தயம்?"

"அக்ஸெப்டட்!" என்றாள் சீதாப்பாட்டி. "அது சரி. அப்படி நீங்கள் சம்பாதிக்காவிட்டால்?"

அப்புசாமி உணர்ச்சிவசப் பட்டு, "ஒற்றைக் காதை அறுத்துக்கறேண்டி!" என்றார்.

"நிஜமாக?"

"சத்தியமா ... எங்கப்பனாணை காதை அறுத்துக்க றேண்டி!" என்றார்.

சீதாப்பாட்டி "ஐ ஸே... எதுக்கு உங்க அப்பாவை யெல்லாம் இழுக்கிறீங்க?" என்றாள் முகத்தைச் சுளித்து.

"அப்பன் என்ன, தாத்தன் ... பாட்டன் ... எல்லாப் பேரையும் இழுப்பேன் ... அவுங்கள்ளாம் என், அப்பன் என் தாத்தன் ... காதும் என் காது ... நான் சொன்னா சொன்னதுதான்... பதினைந்தாயிரம் சம்பாதிக்காவிட்டால் அறுத்துக்கறேண்டி ஒரு காதை! அறுத்துக்கறேன்!"

"நேரமாகிறது. சீக்கிரம் சம்பாதிக்கப் போங்க."

அவர் ரோஷமாகச் சொன்னார். "போறேன் போறேன். நான் சம்பாதிக்கத்தான் போகிறேன்."

அப்புசாமி தன் அந்தரங்க நண்பர்களுடனும் கிரிக்கெட் குழுவினருடனும் ஒரே சோக மயமாக

மைதானத்தில் உட்கார்ந்திருந்தார் - ரசகுண்டு துக்கம் விசாரிப்பவனைப் போல, "தாத்தா, நான் ஒருத்தன் எதுக்கு இருக்கிறேன். ஏதாவது மடத்தனமாச் சவால்விடறதுக்கு முன்னால் என்கிட்டே கேட்டுக்கறதில்லையா?" என்றான்.

அப்புசாமி காதைத் தடவிக்கொண்டார். பிறகு சன காத்துடன், "ஏண்டா... நிஜமாவே என்னாலே பைசா சம்பாதிக்க முடியாது என்கிறியா? டேய்! நான் அரேபியாவுக்கெல்லாம் போய்ச் சம்பாதிச்சவண்டா!" என்றார்.

"அதுதான் கழுதை ஊர்வலம் ஆச்சே! அந்த வயித் தெரிச்சலை என் தாத்தா கிளப்பறீங்க?

"அப்போ நீ என்ன சொல்றே?" என்றார் கலவரத்துடன், "காதை அறுத்துக்கறாப்பலேயே ஆயிடும் என்கிறியா?"

"அறுந்து தொலையுது விடுங்க!"

"டேய்! டேய்! கழுதை! காது என்னுதுடா! காது இல்லாமல் என்னைப் பார்க்க நல்லா இருக்காதுடா!"

"இனிமேல் உங்களுக்கு எதுக்குத் தாத்தா அழகு! யாராவது இன்னொரு பாட்டி வந்து உங்களைக் கல்யாணம் பண்ணிக்கவாப் போறா? ஆமாம், ரெண்டு காதை அறுத்துக்கறதாப் போட்டீங்களா, ஒத்தைக் காதையா?"

"ஒத்தைக் காதுதாண்டா."

"பாதி புத்திசாலி தாத்தா நீங்க!" என்று பாராட்டிய ரசகுண்டு, "ஒரு காதுன்னா பரவாயில்லே. நீங்க காது இருக்கிற பக்கமாகவே ரோடிலே திரும்பி நடந்தீங்கன்னா எதிரே வர்றவங்களுக்கு உங்களுக்குக் காது இல்லாதது தெரியாது."

"ஏண்டா... நடக்க முடியுமா அப்படி?" என்றார் அப்புசாமி பரிதாபமாக... "அதைவிட ரூபாய் சம்பாதிச்

சிடலாம்டா. என் தங்க ராசயில்லே. . சொல்லுடா ஏதாவது யோசனை. . ."

''தாத்தா, சும்மா வளவளன்னு என்கிட்டே பேசாதீங்க" என்றான் ராசகுண்டு காரமாக "காலையிலிருந்து ஒரு சிங்கிள் மக்குக்கூட வழியில்லை. . ஒரு சிங்கள் அடிச்சாத்தான் மூளை வேலை செய்யும் போலிருக்கு"

அப்புசாமி கவலையோடு பீமாராவைப் பார்த்தார். அவன் கொஞ்சம்கூடக் கவலையில்லாமல் பேடியுடனும், கவாஸ்கருடனும் ஆடு புலி விளையாடிக் கொண் டிருந்தான்.

"தாத்தா!" என்று ஒரு பொடிக் காராபூந்தி அப்புசாமியிடம் வந்து நின்றான்.

"என்னடா?" என்றார் அப்புசாமி. 'நீ சொல்லுடா கண்ணு. பதினைந்தாயிரம் ரூபாய் சம்பாதிக்கணும். . ."

"தாத்தா?" என்றான் பையன் விறைப்பாக. "நான் லேக் டீமுலே சேர்ந்துக்கப்போறேன் தாத்தா. நாளைலேருந்து."

"ஏண்டா?" என்றார் அப்புசாமி.

''பின்னே இங்கே பேட்டு இல்லை. பந்தும் இல்லை. . ."

அப்புசாமி பெருமூச்சுவிட்டார். "வாங்கலாம்டா கண்ணா! சீதேப் பாவி கொளுத்திட்டாள். அதுக்கும் முதல்லே தாத்தா காதைக் காப்பாற்றியாகணும்.... பயலே, இங்கே வாடா சொல்றேன்,'' என்று அவனை நைச்சியமாகக் கூப்பட்டுப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு கேட்டார். "உங்க அப்பா எப்படிப் பணம் சம்பாதிக்கிறார்?"

பையன் "ஊஹூம். . . நான் சொல்லமாட்டேன்," என்றான்.

அப்புசாமிக்கு ஒரு மாபெரும் ரகசியமே அந்தப் பையனிடம் ஒளிந்திருப்பதாகத் தெரிந்தது "சொல்லுடா.. பரவாயில்லே. சொல்லு."

"வந்து... தெனமும் காய் வாங்கிட்டு வர அப்பாதான் போவார். அப்படியே நைஸா பத்து பைசா, ஐந்து பைசா எடுத்திடுவார்... சில சமயம் என் சட்டைப் பையிலேருந்து ஐந்து பைசா மூணு பைசா திருடிடுவார்!"

"தாத்தா!" என்றான் ரசகுண்டு, "அந்தப் பொடியனுக் கெல்லாம் என்ன தாத்தா தெரியும்?"

அவர்களுக்கு முன்னால் லேக் டிமைச் சேர்ந்த இரண்டு பொடிசுகள் ஒரு கிரிக்கேட் பேட்டை வைத்துக் கொண்டு சுவாரசியமாக ஏதோ பேரம் பண்ணியவாறு போய்க் கொண்டிருந்தார்கள்.

"டேய் ப்ளீஸ்டா! மேலே ஒரு ரூபா தர்ரேண்டா... டேய்! டேய்! ப்ளீஸ் ப்ளீஸ்டா! மாற்றிக்கலாம்டா!"

"போடா, காஜி அடிக்கப் பார்க்கிறியா?"

"டேடே! ப்ராமிஸ்டா! மேலே ரெண்டு ரூபா தர்ரேண்டா..."

"ரெண்டு ரூபாய்க்கு எவன் தருவான். வெறுமே கண்ணாலே வேணாக் காட்டறேன்... பார்த்துட்டுப்போ...

பார்த்தியா... வெங்கட்ராகவனே கையெழுத்துப் போட்டுக் கொடுத்த பேட்! மேலே பத்து ரூபா தருவியா? மாற்றிக்கலாம்!"

ரசகுண்டு அப்புசாமியைக் கை குலுக்கினான்.

"தாத்தா! ஒரு ஐடியா!"



3

அரை பிளேடு அருணாசலம் மோவாயைச் சொறிந்து கொண்டான் ஒரு பிளேடு ஷேவிங்குக்கு உரிய அளவுக்குச் சொர சொரவென்று தாடி முகத்தில் மண்டிக் கிடந்தது. கையில் நீளமான ஒரு தடித்த காகிதம் இருந்தது. மூர்மார்க்கெட்டில் பிளேடு போட்டு வசமாகப் போலீஸ் காரர் ஒருத்தரிடம் மாட்டிக் கொண்டு முட்டியை அவர் சுத்தமாகத் தட்டிவிட்டதால் சற்றே வித்தியாசமான நடை பழகியவாறு வீட்டுக்குள் உலவிக் கொண்டிருந்தான். ஜெயிலிலிருந்து விடுதலை ஆகி நாற்பத்தெட்டு மணிநேரம் தான் ஆகியிருந்தது. "அடே சயிதே! இனி மேல் சில்லறைத் தனமான வெவகாரத்துலேயெல்லாம் சிக்கிக்கினு முட்டியை வீங்க வெச்சிக்காதேடா நாயே!" என்று, அவனுடைய குருநாதர் முக்கால் பிளேடு சிங்காரம் ஜெயிலிலேயிருந்து சைக்கிள் ரிக்ஷாவிலே வருகிறபோது 'ரோசனை' கூறியதை நினைத்துக் கொண்டான்.

யோசனை சொன்னதோடு முக்கால் பிளேடு சிங்காரம் வழியையும் காட்டியிருந்தான். "நைனா! நீ செரியான ஆளைப் புடிச்சிட்டியானாப் போதும், பத்து நாளானாலும் செரி, வேலை ஸிம்பிள், துட்டு எக்கச்சக்கம். பேசாமகௌப்பிக்கினு பாம்பே பூடுவோம் ஒரு மாசம்! அப்படியே கோவா போய் ஒரு ஸவுண்டு அடிச்சிகிட்டு மெதுவா வரலாம்."

அரை பிளேடு அவன் கொடுத்த வெற்று செக் தாள் ஒன்றையும் அதில் போடப்படவேண்டிய கையெழுத்து

மாதிரியையும் வாங்கிப் பத்திரமாக வைத்துக்கொண்டான். 'ஒயுங்கா ஒரு கஸ்மாலம் கெடச்சிதுன்னா ஒரு கையெழுத்தைப் போட வெச்சிட்டா ஐம்பதாயிரமோ... ஐந்து லட்சமோ தட்டிக்கினு நிம்மதியாப் பூடலாம். அஞ்சுக்கும் பத்துக்கும் அரை பிளேடு வேலையைக் காட்டி வாத்தியாருங்ககிட்டே மாட்டிக்கினு சாவ வேண்டிய தில்லே. இவ்வளவு பெரிய ஊரிலே அது மாதிரி வேலை தெரிஞ்சி வெச்சிக்கிற கில்லாடி கிடைக்காமலா போயிடுவான்?"

பீடியைப் பற்ற வைத்துக் கொண்டு புறப்பட்டான்.

அப்புசாமி தன் நண்பர்களுடன் ஒரு வெட்டு வெட்டிக் கொண்டிருந்தார் ஓட்டல் ஒன்றில்.

பீமாராவ் இரண்டு மசாலா தோசை தின்றுவிட்டுப் பக்கத்திலிருந்த மேஜையில் ஒருத்தர் சாப்பிட்டுக் கொண்டிருந்த இடியாப்பத்தை நாவில் நீர் சொட்டப் பார்த்தவாறு, "தாத்தா! ஒந்து இடியாப்ப ஆர்டா கொடுதனே!" என்று பர்மிஷன் கேட்டான்.

அப்புசாமி நிராகரித்தார். "கிடையாது கிடையாது நீ ஒண்ணுமே செய்யலே. உனக்கு ரெண்டு மசாலா தோசை அழுதாச்சு!"

"ஏனு தாத்தா பேப்பரெல்லாம் கட்மாடி கொடுத்தேனே. அது வேலை இல்லையா!" என்றான் பீமா பரிதாபமாக.

அவனுக்குப் பக்கத்தில் சாம்பார் மகாசமுத்திரத்தில் போண்டாக்களை முழுக ‌அடிப்பதிலே கண்ணும் கருத்துமாயிருந்த ரசகுண்டு, "தாத்தா! ஸ்பெஷல் டீ ஐயாவுக்கு!" என்று அடுத்த ஆர்டரை அதிகாரமாகத் தெரிவித்தான்.

"டேய்! என்னடா நினைச்சுகிட்டீங்க. மொத்த வரும்படியே மூணு ரூபாய் பதிமூணு பைசாதான். ஸ்பெஷல் டீயெல்லாம் கட்டுப் பிடியாகாது!"

"என்னா தாத்தா, ஐடியா நான்தானே கொடுத்தேன். ஒரு ஸ்பெஷல் டீ ஆர்டர் கொடுக்கக் கூடாதா!"

"அடேய் பசங்களா!" என்றார் அப்புசாமி. "கையொட்டி ஒட்டிய எழுதினவன் நான்தாண்டா! நான் நாற்பது பைசாவிலே நாஷ்டாவை முடிச்சிக்கிட்டேன். நீங்க இன்னாடா பேஜார் பண்றீங்க... வேணுமானால் போகிறப்போ பிளாட்பார ஆயாகிட்டே கமகமன்னு மசால் வடை ஆளுக்கு ஒண்ணு வாங்கிக்கலாம். கம்பெனிக்குக் கட்டுப்படி ஆகணுமில்லியா? நம்ம கம்பெனி நல்லா வரட்டும். மூணு வேளைக்கும் நாலு நாலு மசாலா தோசையும், மசாலா டீயும் வாங்கி ஊத்தறேன்!"

பிரபல ஆட்டக்காரர்கள் கையெழுத்துப் போட்டுத் தரும் கிரிக்கெட் மட்டைக்கு நல்ல கிராக்கி உண்டு என்ற விஷயம், இரண்டு பையன்கள் பேரம் செய்து கொண்டு போனதைக் கவனித்த ரசகுண்டுவுக்கு ஒரு ஐடியாவை ஏற்படுத்த, அந்த ஐடியாவை அப்புசாமியிடம் அவன் அரங்கேற்ற, காது போய் விடுமோ என்ற கவலைக் கடலில் மூழ்கிக் கொண்டிருந்த அவர் அதைச் சிக்கெனப் பற்றிக் கொள்ள 'குழந்தே ரசம்! நீ கொழந்தே இல்லேடா. என்னைக் காப்பாற்றின தெய்வம்டா... என் அன்பான என் ரசமே. என் குண்டே, நீ கருணா சாகரன்டா... நான் வெறும் டீயைத் தர்ரேன். நீ ஐடியாவைத் தர்ரேடா" என்று நாதழுதழுக்க, பாலகிருஷ்ண சாஸ்திரிகள் பாணியில் குரல் கரகரக்க உணர்ச்சிப் பெருக்கில் குட்டி அழுகையே அழுதுவிட்டார்.

முதலில் மலிவு விலையில் மூர்மார்க்கெட்டிலிருந்து ஏதாவது அடாஸ் கிரிக்கெட் மட்டைகள் வாங்கி வந்து அதில் பிரபல ஆட்டக்காரர்கள் மாதிரி பொய்க் கையெழுத்துப் போட்டு குறிப்பிட்ட ஆட்டக்காரர்களே போட்டதாக்கும் என்று அந்த மட்டைகளை நல்ல விலைக்கு விற்பது என்று தீர்மானித்தார்கள்.

ஆனால் பொருளாதார நிலை ஒரு தென்னை மட்டை வாங்கக்கூட இடம் தராததால் பிடித்த காட்சைத் திரை விட்ட மாதிரி உடனடியாக அந்த ஐடியா கைவிடப் பட்டது. ரசகுண்டு தன் மூளையை மேலும் கசக்கிக் கொண்டான். அப்புசாமி, நாலு சிமிட்டாப் பொடியை மண்டைக்குள் ராக்கெட் வேகத்தில் இழுத்துக் கொண்டு மௌனத் ஆர்கன் வாசிக்கிற மாதிரி மூக்கைக் கைக் குட்டையால் நாலுதரம் மீட்டிக் கொண்டார்.

மாற்று ஐடியா பிறந்து விட்டது. கிரிக்கெட் மட்டையில் கையெழுத்திடுவதற்குப் பதில் சாதாரணக் காகிதத்தில் ஆட்டோகிராஃப் போட்டால் தீர்ந்தது.

ரசகுண்டு முதலில் அலட்சியமாக 'இது ஒரு பெரிய காரியமா தாத்தா? நான் போடறேன்' என்று போட்டுப் பார்த்தான். அவனால் முடியவில்லை. பீமாராவ் எழுதிப் பார்த்தான். காப்பி நோட் எழுதுகிற மாதிரி கொட்டை கொட்டையாக அவன் எழுதியதுமே ரசகுண்டு, "பீமா! போதும் போதும்... நீ ஒரு கையெழுத்துப் போடறதுக்கு ஒரு சினிமா போஸ்டர் அளவுக்குப் பேப்பர் வேணும் போலிருக்கு!" என்று நிறுத்திவிட்டான்.

அப்புசாமிக்குத் தானே ஏன் முயலக்கூடாது என்று தோன்றியது. முயன்றார். ரசகுண்டு ஆனந்த மிகுதியில் துள்ளினான்.

"தாத்தா... உங்களுக்கு நல்லா வருது தாத்தா," என்றான்.

அப்புசாமி வீட்டிலுள்ள சகல காகிதங்களையும் கிழித்துக் கிழித்து இரண்டு மூன்று நாள் பயிற்சி செய்து கொண்டார்.

சீதாவின் வழவழப்பான லெட்டர் ஹெட் பேப்பரிலும் கையிலும் வைத்துவிட்டார். வீடு பூரா ஒரே குப்பை. எந்தக் காகிதத்தையும் கிழித்துக் கையெழுத்து

பழகிக் கொண்டிருந்தார். "ஹாய்! வாட் த ஹெல் யூ ஆர் டூயிங்!" என்று பாதி எரிச்சலும் பாதி ஆச்சரியமுமாய்க் கேட்ட சீதாப்பாட்டியிடம் அப்புசாமி சாமர்த்தியமாக, "ஹி ஹி! ஒன்னுமில்லே! ஸ்ரீ ராமஜெயம் எழுதறேன்! அந்த ராமஜெயம்தான் என்னைச் சம்பாதிக்க வைக்கப் போகுது. . . ." என்று மழுப்பி விட்டார்.

ஆட்டோ கிராஃப்புகள்' தயாரானதும் ரசகுண்டு முதலில் அதைப் பரீட்சார்த்த முறையில் போணி செய்ய முடிகிறதா என்று சில பயல்களிடம் வெள்ளோட்டம் விட்டுப் பார்த்தான். கிரிக்கெட் போர்டில் அப்புசாமித் தாத்தாவின் ஒன்று விட்ட மூன்று விட்ட தம்பி ஒருத்தர் இருப்பதாகவும் அவர் வாங்கித்தா முடியுமாக்கும் என்றும் ஒரு செய்தியைப் பரப்பிவிட்டான். வீட்டில் சீதேப் பாட்டியின் கழுகு பார்வைக்கு இலக்காகி கையெழுத்துத் தயார் செய்வதைவிட, கையெழுத்து தொழிற்சாலைக்கு ரசகுண்டுவின் வீடே சிறந்த இடமாகத் தேர்ந்தெடுக்கப் பட்டது. அவனுடைய மனைவி ருக்மணி பிறந்தகம் போயிருந்தது நண்பர்கள் குழாத்துக்குப் பொன்னான வாய்ப்பை ஏற்படுத்தியது.

அப்புசாமிக் குழுவினரின் மோசடி வியாபாரம் மெதுவே வேர் பிடிக்கத் தொடங்கிக் கொண்டிருந்தது.

கவாஸ்கர், பேடி, சந்திரசேகர், பிரசன்னா ஆகிய கிரிக்கெட் வீரர்களின் கையெழுத்தைப் போலவே அப்புசாமி இரண்டு மூன்று ராத்திரி பூரா முதுகை ஒடித்துக் கொண்டு ஒரு இருபது கையெழுத்துக்கள் தயார் செய்து விட்டார்.

ரசகுண்டுவுக்குத் தெரிந்த கிரிக்கெட் ரசிகப் பொடியர்களுக்கு பிரபல ஆட்டக்காரர்களின் ஆட்டோ கிராஃப் பத்து பைசாவுக்கும் பதினைந்து பைசாவுக்கும் கிடைப்பது ஒரு பெரிய அதிருஷ்டமாக இருந்தது. சிலர் ரசகுண்டுவைக் காக்கா பிடித்தனர். சிலர் கெஞ்சினர்

"ப்ளீஸ்... ரசகுண்டு சார்... ஒரே ஒரு கவாஸ்கர் ஆட்டோ கிராஃப் வாங்கித்தாங்க சார்!" என்பார்கள்.

ரசகுண்டு உடனே தந்து விட மாட்டான். "என்னாலே முடியாது. தாத்தாகிட்டே சொல்லி வாங்கணும். தாத்தா எப்படியும் நாளைக்குக் கிரிக்கெட் போர்டிலே அவருக்குப் தெரிந்த பிரண்டைப் பார்க்கப் போவார்... வாங்கித் தரச் சொல்றேன்..." என்று சொல்லிவிட்டு மறுநாள் இருபது பைசா வாங்கிக் கொண்டு கையெழுத்துச் சீட்டைத் தருவான்.

அன்று அப்புசாமிக்கு ஓய்வு வேண்டும் போலிருந்தது. கையில் வேறு கொஞ்சம் கணிசச் சில்லறை சேர்ந்திருந்தது. ரசமும் பீமாவும் டிபனுக்குப் பிடுங்கினர்.

நண்பர்களுடன் டிபன் சாப்பிட்டுவிட்டு ரசகுண்டு வுடனும் பீமாவுடனும் அளவளாவிக் கொண்டிருந்தார். பால் பாட்டிலுடன் சென்று கொண்டிருந்த ஒரு பையன் தயக்கத்துடன் ரசகுண்டுவை, "அண்ணா, ரச அண்ணா!" என்றான்.

"என்டா பயலே!" என்றான் ரசம்.

"ஒரே ஒரு கவாஸ்கர் கையெழுத்து வேணும் அண்ணா! என் பிரண்டு பெங்களூரிலிருந்து வந்திருக்கிறான்.

ரசகுண்டு அப்புசாமியின் முகத்தைப் பார்த்தான் - ஸ்டாக் ஏதாவது கையிருப்பில் இருக்கிறதா என்று. அப்புசாமி புரிந்துகொண்டு உதட்டைப் பிதுக்கினார்.

பையனோ கையில் ஒரு ரூபாயை வைத்துக் கொண்டு தவித்தவாறிருந்தான். ரசகுண்டுவுக்குச் சபலமாயிருந்தது.

"உடனே எப்படி கவாஸ்கரைப் பார்க்க முடியும்? மாட்ச் விளையாடிட்டிருப்பாரே! நாளைக்குத்தான் தாத்தாவால் முடியும்?"

"ஐயோ. பிரண்டு ராத்திரியே ஊருக்குப் போகிறான் தாத்தா!"

ரசகுண்டு அப்புசாமியைப் பார்த்துக் கண்ணடித் தான். ஆர்டரை உடனே ஏற்றுச் செய்து தரமுடியுமா என்று.

அப்புசாமிக்கு சபலமாயிருந்தது.

"சரி, சரி ரூபாயை இப்போ அட்வான்ஸா தந்துட்டுப் போகச் சொல்லு; சாய்ந்தரமா வரச்சொல்லு" என்று சம்மதித்தார்.

மாலை ஏழு மணிக்கு ரசகுண்டு அந்தப் பையனுக்காகக் காத்துக் கொண்டிருந்தான். உள்ளே அப்புசாமி போலிக் கவாஸ்கர் கையெழுத்தைக் கண்ணை நெட்டிக் கொண்டு காப்பி செய்து கொண்டிருந்தார்.

விடுவிடுவென்று ரசகுண்டை நோக்கி வந்தார் ஒருத்தர். நீள மூக்கு, ஒல்லி, வாயில் வெற்றிலை புகையிலை, கண்ணிலே கூட வெற்றிலை பாக்கு போட்டுக் கொள்வாரோ என்று எண்ணிப் கொண்டான் ரசகுண்டு. அவர் கண்ணிலும் அவ்வளவு சிவப்பு.

ரசகுண்டு மிகுந்த மரியாதையுடன், 'சாருக்கு யாரைப் பார்க்கணும்?" என்று விசாரித்தான்.

"உங்க பாட்டனை" என்று வள்ளென்று விழுந்த அவருக்கு மூசுமூசென்று மூச்சு இரைத்தது. "யார்ராவன், அப்புசாமித் தாத்தாவாம்?"

ரசகுண்டுவுக்கு அப்போதுதான் தெரிய ஆரம்பித்தது - தாத்தாவுக்கு இன்னாவோ டேஞ்சர் என்று.

"ஹிஹி! தாத்தாவா? எந்தத் தாத்தாவைச் சொல்றீங்க? ஏன் தாத்தா? யாரு தாத்தா? என்றான் குழம்பியவனாக.

"இதுவாடா கவாஸ்கர் கையெழுத்து? மோசடி வேலையாடா பண்றீங்க?" ஒரு காகிதத்தைக் காட்டினார் வந்தவர். ரசகுண்டுவுக்குப் பகீரென்றது.

ரசகுண்டுவையும் பீமாராவையும் ஒரு தள்ளுத் தள்ளிக் கொண்டு மோசடி ஸ்தலத்துக்கே அந்த ஆள் பிரவேசித்து விட்டார். அப்புசாமி அரைகுறையாக அப்போதுதான் பாதி கவாஸ்கர் கையெழுத்தைப் போட்டிருந்தார்.

கலப்படக்காரனுடைய கலவர விழியோடு அப்புசாமி விழிக்க வந்தவர், அவர் கையிலுள்ள தாளைப் பறித்து, "ஓ... எய்யா மோசடித் தாத்தா! நீ தான் கவாஸ்கரா! நேரே ஸ்டேடியத்திலிருந்து வாரீயோ?" என்று அப்புசாமியின் ஜிப்பாவைப்பிடித்து விட்டார். "எய்யா, எருமைக்கடாவுக்கு ஆகிற மாதிரி வயதாகிறது - சின்னப் பசங்களையெல்லாம் ஏமாத்திட்டா இருக்கிறீர்? பையன் கிட்டே எக்ஸ்டிரா பால் வாங்கிக்கிட்டு வரதுக்காக ஒரு ரூபா பத்து பைசா கொடுத்தனுப்பினால் அவன் ஏதோ நாலு கையெழுத்துக் கிறுக்கலை வாங்கிக்கிட்டு வந்து நிற்கிறான். முந்தா நாள் என் சின்னப் பையனிடம் இப்படித்தான் அரை ரூபாய் வாங்கிக்கிட்டு ஏதோ நாலு கிறுக்கலைத் தந்து அனுப்பிச்சிருக்கே? எய்யா, ரிடைரான பிறகு ஒழுங்காப் பிழைப்பு இல்லென்னா ரோடு ரோடா சாணி பொறுக்கறது, ஊரும் சுத்தமானதாக இருக்கும். அதற்குத்தான் இன்றைக்கு தந்திரமா என் பையனை அனுப்பித்து உங்களைக் கையும் மெய்யுமாப் பிடிச்சேன்."

அவர் ஜிப்பாவில் கை போட்டதும் அப்புசாமிக்குக் கெட்ட கோபம் வந்துவிட்டது. "எடுய்யா கையை" என்றார், அத்தோடு "பீமா!" என்று குரல் கொடுத்தார்.

பீமாராவ் கைச்சட்டையை மடக்கி விட்டுக்கொண்டு அந்த ஆளிடம் நெருங்கினான்.

அடுத்த நிமிஷம் எதிர்பாராத சம்பவம் ஒன்று நடந்து விட்டது. "ஏண்டா! இந்தக் கராத்தே பாலன் கிட்டே வந்தா கையை மடிச்சுக் காட்றே?"

வந்த ஆள் என்ன செய்தாரோ? பீமாராவ் அடுத்த வினாடி தொப்பையைப் பிடித்துக்கொண்டு, "ஹய்யோ! ஹய்யோ! நான் செத்தோயிட்டேன்! செத்தோயிட்டேன்!" என்று கீழே மல்லாந்து விழுந்து ஒரு பிரசவக்காரன் மாதிரி துடிக்க ஆரம்பித்துவிட்டான்.

ரசகுண்டு இதற்குள் தெருவில் போய் லபோ லபோ என்று கத்தி நாலைந்து பேரைக் கூட்டி வந்துவிட்டான்.

அப்புசாமிக்குத் தெம்பு வந்துவிட்டது. "யோவ்! இன்னாயா பெரிய மன்சன் நீ? எப்படிய்யா என் ஜிப்பா மேலே கை போட்டே!" என்று தன்னைக் கூட்டம் ஆதரிக்கிறதா என்று பரிதாபமாகப் பார்த்தார்.

"செய்ததைச் செய்துட்டுத் திமிர் வேறயா?" என்று கர்ஜித்தவாறு வந்த ஆள் கராத்தே வெட்டு ஒன்றை அப்புசாமியின் தோளை நோக்கி இறக்கினார். அந்த அடி மட்டும் இறங்கியிருந்தால் அப்புசாமியின் தோள் கண்டவர் தோளே கண்டிருக்க முடியாத மாதிரி ஆகியிருக்கும்.

அதற்குள் வலுவான கரம் ஒன்று அந்தக் கராத்தேக் காரரின் கையைத் தடுத்து நிறுத்தியது.

அரைபிளேடு அருணாசலம்!

"அடே அரே பிளேடு!" என்று அப்புசாமி தன்னைத் தடுத்தாட்க்கொண்ட அரை பிளேடைக் கட்டிக் கொண்டு விட்டார். அரை பிளேடு வந்த அடுத்த ஐந்தாவது நிமிடம் கராத்தே வீரர் கப்சிப்பென்றாகி, "உங்களையெல்லாம் கவனிக்கிற விதத்தில் கவனிச்சுக்கிறேன்," என்று வாபஸாகி விட்டார்.

அரைபிளேடை அப்புசாமி அணைத்துக்கொண்டு உள்ளே கூட்டிப்போய் க்ஷேமம் லாபங்களை விசாரித்தார். அவன் பல க்ஷேம் நஷ்டங்களைச் சொல்லிவிட்டு, "இன்னா சார்! நீ இன்னும் பழைய பேஜார்லேதானா கிரே? ரொம்பா இந்தப் பக்கமா வந்தேன் இன்னாடா கலாபைல்னு பார்த்தா நீ கிரே. நம்ம தோஸ்தாச்சேன்னு உள்ளே கபால்னு பூந்தேன்... இன்னாவோ கையெயுத்து கிய்யெயுத்துன்னு பேசிகிட்டாங்களே. இன்னாது கையெயுத்து?"

அப்புசாமி "ஹஹஹ!" என்று சிரித்தார். "அட வந்து... வந்து ஒண்ணுமில்லே... இன்னாவோ ஒரு கையெழுத்துப் போட்டுட்டேனாங்காட்டியும் கவாஸ்கர்னு குதிக்கிறான் வந்து!"

அரை பிளேடு மோவாயைத் தடவிக் கொண்டான். "கமால்கரா? யார் அந்த வாத்யாரு? அது கையெயுத்தை நீ போட்டுட்டா இவனுக்கென்ன பூடுச்சி! சரி... சரி... போங்க அல்லாம்..." என்று வாசல் கும்பலைக் கலைத்து அனுப்பி வைத்தான்.

அப்புசாமியால் நீண்ட நேரம் தன் வியாபாரத்தை அரை பிளேடிடமிருந்து மறைக்க முடியவில்லை. மனைவியிடம் தான் பதினையாயிரம் ரூபாய்ப் பந்தய ஊழலில் மாட்டிக்கொண்டு சவால் விட்டிருப்பதைப் பற்றி அவனிடம் அங்கலாய்த்துக் கொண்டார்.

அப்புசாமியை அரை பிளேடு மறுநாள் வந்து சந்திப்பதாகச் சொல்லி விடை பெற்றுக்கொண்டான்.

மறுநாள்.

அப்புசாமியிடம் அரை பிளேடு கொஞ்ச நேரம் (மூர்) மார்க்கெட் நிலவரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு, "வாத்தியாரே! எனக்கு ரொம்பப் புடிச்ச ஒரு கிரிக்கெட்டு

ஆட்டக்காரரு கிறார்! அவரு கையெழுத்துதான் எனக்கு வேணும். . . மாதிரிக் கையெழுத்துக் கூடக் கொண்டாந் திருக்கேன். நீ ஒரு நாலு போட்டுக்குடேன்," என்றான்.

"அட! உனக்குக் கூடக் கிரிக்கெட்டிலே இஷ்டமா? எந்தப் பிளேயர் ஆட்டோகிராப் வேணும் உனக்கு?" என்றார் அப்புசாமி "கெவாஸ்கரா. . . பேடியா. . . சந்திரசேகரா. . . படேலா!"

"அவுரு பேரு மணவாள முதலியார்!"

"இன்னாது? மணவாள முதலியாரா? அப்படி ஒரு ஆட்டக்காரரே இல்லையே. . ." அப்புசாமி வியந்தார்.



# 4

"அடி இன்னாடி ராக்கம்மா பல்லாக்கு நெளப்பு. டிண்டீங்டி... டிண்டீங்டி... டிய்ங்ங்... அடி என் ராக்கு... அடி என் மூக்கு... அடி என் பேக்கு! மாணிக்கச் செவப்பு... மச்சானைப் பாத்தீங்களா? ஹொய்ய்... மச்சானைப் பாத்தீங்களா?..."

அப்புசாமி பாத்ரூமுக்குள் புகுந்துகொண்டு டொம் டொம் என்று பிளாஸ்டிக் பக்கெட்டைத் தட்டியவாறு பழைய பாட்டையும் புதிய டியூனையும் கலந்தடித்துத் தானே பின்னணியாளராகவும், தானே பாடகராகவும் உற்சாகமாக ஒலி பரப்பிக் கொண்டிருந்தார்.

சீதாப்பாட்டியைப் பார்க்க அந்தச் சமயம் பார்த்துத் தானா டில்லியிலிருந்து ஒரு யோகாசனக் கிழவி வந்து சேர வேண்டும்?

பா. மு. கழகத்தின் யோகாசன வகுப்பு ஏதும் ஆரம்பிக்கும் உத்தேசம் இல்லை என்பதையும், ஒரு கால் அப்படி ஆரம்பித்தால் கட்டாயமாக அந்த அம்மாளையே யோகா இன்ஸ்ட்ரக்டராகப் போட்டுக் கொள்வதாகவும் பாட்டி சமாளிப்பதற்குள் பாத்ரூமிலிருந்து நூறாயிரம் டொம் டொம்கள், பல்லாக்குகள்... மூக்குத்திகள், மலை வாழைப் பழங்கள் - மச்சான்கள்!

வந்த விசிட்டரை அனுப்பிவிட்டுச் சீதாப்பாட்டி பாத்ரூம் அருகே கோபத்துடன் சென்றாள். கதவை லொட் லொட்டென்று பின் விரலால் இரண்டு தட்டுத்

தட்டினாள். மனைவி தன் பாட்டைக் கதவுக்கு அந்தண்டை இருந்து கேட்கிறாள் என்பது தெரிந்ததும் அவருக்குக் குஷி அதிகமாகி விட்டது.

ரிகார்டை மாற்றிவிட்டார். 'மல்லிகை ... என் மன்னன் மயங்கும்... பொன்னான... மலரல்லவோ வோ வோ... ஓட்றா ஓட்றா... ஓட்றா... நான் ஓடிக் கொண்டேயிருப்பேன்...

சீதாப்பாட்டி கதவை ஓங்கி ஒரு தட்டுத் தட்டி, "வோன்ட்யூ ஸ்டாப் யுவர் காட்டுக்கூச்சல்? பாத்ரூம்லே புகுந்துகொண்டு தினமும் இப்படிக் கத்தறது என்றால் நீங்க குளிக்காமலே இருக்கலாம்" என்றாள் கோபமாக.

"அடி! சீதே, உனக்குக் கோபம் ஆகாதடி..." என்றவாறு கதவை அப்புசாமி திறந்துகொண்டு வெளியே வந்தார்.

"மை குட்னஸ்!" சீதாப்பாட்டிக்குத் தூக்கிவாரிப் போட்டது அவர் தலையைப் பார்த்ததும்.

வெள்ளை வெளேர் என்று கொக்குத் தலையாக இருந்தது கன்னங்கரேல் காக்காய்த் தலையாகியிருந்தது.

"ஈஹி!" என்று அப்புசாமி மோகன முறுவல் செய்தார். "இன்னா கண்ணு அப்படிப் பார்க்கிறே!" என்று பாட்டியின் மோவாயைத் தொட முயன்றார். சீதாப்பாட்டி சட்டென்று பின்னுக்குத் தள்ளிக் கொண்டாள். அவள் முகம் கடுகடுப்பாகியது. "உங்களை யார் டை பண்ணிக்கச் சொன்னது? ஐயோ சகிக்கவில்லை. ஹாரிபிள்! ஹாரிபிள்! கெட் அவுட் அஃப் மை சைட் ஃபஸ்ட்!" என்று கூவினாள்.

"ஏய்! மனசைத் தொட்டுச் சொல்லு!" என்றார் அப்புசாமி இடது கண்ணை ஓர் அடி அடித்து. 'ஐயா பாத்ரூம் கண்ணாடியிலே இவ்வளவு நேரம் பார்த்து ரசித்துட்டுத் தானே வர்ரேன். படா ஷோக்கா இருக்குது என் தலை.

நீ கூடப் போட்டுக்கோ ஏதே இவ்வளவு கெயவியா யிருக்கியே!" என்றவர் சீப்பை எடுத்துக் கொண்டு கண்ணாடிமுன் நின்று வாரிக் கொள்ளத் தொடங்கிவிட்டார்.

"அடடே! மறந்தே பூடுச்சே!" என்றவர் விருட்டென்று தன் அறைக்குச் சென்று கமகம வாசனைத் தைல பாட்டிலை எடுத்து வந்து கையில் ஊற்றி விசில் அடித்தவாறே தலைக்குத் தேய்த்துக் கொண்டார். புதிய ஸ்னோ பாட்டிலை எடுத்து வந்து விரலால் சுண்ணாம்பு கிளறுகிற மாதிரி அதைக் கிளறிக் கொஞ்சம் ஆள் காட்டி விரலில் எடுத்துக் கொண்டு சீதாப்பாட்டியிடம்," யூ நோ இதுதான் ஸ்னோ. உனக்கு நோ நோ!" என்று விரலை நொட்டிக் காட்டி ஜோக் அடித்தார்.

சீதாப்பாட்டிக்கு அவரது நடவடிக்கைகள் வரிசையாக அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி தந்தன.

"அஞ்சாறு ரூபாய்க்கு மணிமாலை. . . அது என் கழுத்துக்குப் பொருத்தமடி . . அடி ராக்கம்மா. . . அடி சீதம்மா. . ." என்றவாறு அப்புசாமி ஒரு மணிமாலையையும் கழுத்தில் அணிந்து கொண்டார். "படா ஜோரா கீதில்லே?"

சீதாப்பாட்டி திகைப்புடன், "மை காட்! உங்களுக்கு வாட் ஹாப்பன்ட்? இதெல்லாம் வாங்க உங்களுக்கு ஏது பைசா? ஒரே துள்ளு துள்ளறீங்க? கண்ணராவியாகத் தலையைக் சுறுப்புப்பணிக் கொண்டு . . ஹௌ டிட் யூ கெட் ஆல் திஸ் திங்க்ஸ்? கரீம்பாய் கடையில் நம்ம அக்கௌண்ட்டில் உங்களுக்கு எதுவும் தரக்கூடாது என்று ஸ்டாண்டிங் இன்ஸ்ட்ரக்ஷன்ஸ் கொடுத் திருந்தேனே."

"போடி!" என்று அப்புசாமி அலட்சியமாக ஜிப்பாப் பையைக் கிலுங் கிலுங் என்று குலுக்கிக் காட்டினார். அரைபினேடு அவர் செய்வதாக இருக்கும் வேலைக்கு

அட்வான்ஸாகக் கொஞ்சம் பணம் கொடுத்திருந்தான். "ஐயாவுக்கு ஏண்டி உன் பித்லாப் பணம்? சம்பாதிக்கி றேன்னு சவால் விட்டேனில்லையா? ஆரம்பித்து விட்டேன் சம்பாதிக்க."

"ஐ ஸீ." என்று சீதாப்பாட்டிக்கு அப்போதுதான் ஞாபகம் வந்தது - அப்புசாமி தன்னிடம் சபதம் என்று போட்டிருப்பதும், பதிலுக்குத் தானும் அவரிடம் ஒரு சபதம் போட்டிருப்பதும். அதை அவள் அடியோடு மறந்தே போய்விட்டிருந்தாள் - வழக்கமாக கணவருக்கு வரும் சவால் வியாதிதான் என்று நிஜமாகவே சம்பாதிக்க ஆரம்பித்து விட்டாரா என்ன? வெள்ளைத் தலையைக் கருப்பாக்கிக் கொள்கிறார். திடுமென்று கையில் தாராளமாகப் பணம் நடமாடுகிறது. சீதாப்பாட்டியை இன்னொரு விஷயம் கவலைப்பட வைத்தது. சம்பாதிக்கிறேன் என்று ஏதாவது குறுக்கு வழியில் இறங்கித் தொலைந்து விட்டாரா என்ன? அதைத் தெரிந்து கொள்வதற்காக அப்புசாமியைப் பார்த்து ஒரு டிப்ளமடிக் புன்னகை புரிந்தாள் சீதாப்பாட்டி.

"ரியலி! உங்கள் தலை இப்போது வொன்டர்ஃபுல்லாத் தானிருக்கிறது! என்ன டை யூஸ் பண்ணினீர்கள்? கையெல்லாம் ஸ்டெய்ன் பண்ணிக் கொள்ளாமல் பர்ஃபெக்டாகப் போட்டுக் கொண்டிருக்கிறீர்களே. . ."

மனைவி ஐஸ் வைத்ததும் அப்புசாமி உருகி விட்டார். "நெஜமாகவே நல்லாயிருக்கா சீதே?"

"ரியலி யு லுக் வெரி சார்மிங்! ஏன் இத்தனை நாள் இது உங்களுக்கு ஸ்டிரைக் ஆகாமல் போச்சு?" என்றாள்.

"ஸ்டிரைக் ஆகியிருந்தாலும் துட்டு வேணுமே துட்டு? அரை பிளேடு இப்பத்தானே அட்வான்ஸ் தந்திருக்கிறான்" வாய் தவறி உளறி விட்டார்.

சீதாப்பாட்டி திடுக்கிட்டாள். "என்ன சொன்னீர்கள்? அரைபிளேடா? தட் நொடோரியஸ் ரௌடி! மறுபடியும் அவன் ஃப்ரெண்ட்ஷிப்பைப் பிடித்துக் கொண்டு விட்டீர்களா?"

அப்புசாமி சமாளித்தார் "சே சே! அந்தப் பயல் எனக்குப் பழைய பாக்கி முப்பது ரூபாய் தரணும் சீதே..."

சீதாப்பாட்டியின் புருவங்கள் நெளிந்தன. அவள் உள்மனம் கூறியது. "என்னவோ அண்டர் கிரவுண்ட் வேலை நடத்திக் கொண்டிருக்கிறார். அதை இன்வெஸ்டிகேட் பண்ண வேண்டியது முதல் கடமை."

அரைபிளேடு அலுத்துக் கொண்டான்; அவன் சொன்ன 'மணவாள முதலியார்' கையெழுத்தை அப்புசாமி பல தடவை போட்டுக் காட்டினார். ஆனால் சரியாக இருப்பதாக அவன் ஒப்புக்கொள்ளவில்லை.

"இன்னா வாத்யாரே. கொம்பு இஸ்துகினு போகுது. பீச்சாங் கைலே இந்த எயுத்து சாஞ்சிகீது. அதோ அந்த எயுத்தை உன் கைலே வாங்கியிருக்கே. 'ள' வெளிக் கைலேல்ல கீது?" என்று ஒவ்வொன்றையும் நிராகரித்து டைரக்ஷன் கொடுத்துக் கொண்டிருந்தான்.

அப்புசாமிக்குக் கை வலித்தது. நீண்ட நேரம் குனிந்து கொண்டு இருந்ததில் வாயுப்பிடிப்பு. முதுகுத்தண்டில் சறுக்கு மரம் விளையாடியது. "உஸ்ஸ்... இன்னமா கண்ணு பெண்டு வாங்கறே? ஊர் பேர் தெரியாத எந்த ஆட்டக்காரன் பேரையோ கொண்டுவந்து கொடுத்து கஸ்ரத் வாங்கிறியே பிளேடு? நம்மாலே முடியாது... அம்பேல்!"

அரைபிளேடு தட்டிக்கொடுத்தான் "இன்னா வாத்தியாரே, இதுக்குள்ளார உனக்கு; நாக்கு தள்ளுது; நுரைக்கறே? கத்தக் கெழபாடாகீறே? தினமும் பஷாலாப்

பால் அடிக்கனும், இம்மாம் கெழ பாடாப் பூட்டியே? அப்புறம் பொன்சாதி மேலாய்லெ குத்தாம முத்தமா குடுப்பா?" என்றான்.

அப்புசாமியின் முதுகுத் தண்டு ஜிங்கென்று நிமிர்ந்தது.

"அடே அரே! என்னைப் பார்த்தா கிழவனாட்டம் இருக்கு! அபாண்டமாச் சொல்லாதேடா. பாவி அநியாயமாப் பூடுவெ!" என்றார்.

சிரித்தான் அரைபிளேடு.

"இன்னா வாத்தியாரே பின்னே. . நீ பெரிய எம்ஜியாராங் காட்டியும்; நாய்க்கு இரைக்கிறமாதிரி இளைக்குது; நாலு தரம் நாலு கிறுக்கு கிறுக்கறதுக்குள்ள?"

"அடே அரே!" அவருக்குத்தந்த 'கிழ விபூஷண' பட்டத்தைப் பெருமையோடு அவரால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. "நானாடா கெழபாடு? மைதானத்திலே நின்னு மணிக்கணக்கிலே காத்தாடி வுடணுமா இப்போ வுட்டுக் காட்டறேண்டா. சவாலங்கிடி கிரிகிரி! சைதாப் பேட்டை வடகறி! வர்ரியா டீலுக்கு!" என்றார்.

ரசகுண்டு சட்டென்று அப்புசாமியைத் தடுத்தாட் கொண்டான். "தாத்தா! ஆறுவது சினம். ஆறாதது காது. டீல்கில்னு வுடாதீங்க. ஏற்கனவே உங்க ஒற்றைக் காதைப் பாட்டிக்கிட்டே அடகு வெச்சிருக்கீங்க. தேர்தல் வாக்குறுதி மாதிரி சவாலுங்களைக் கொடுத்துகிட்டே போகாதீங்க."

அரைபிளேடு சிரித்தான் அலட்சியமாக. "உங்க தாத்தாவுக்கு ரோசம் மட்டும் வருது சொரேல்னு. மாஞ்சா இல்லியே இங்கே? வெறும் மாவுல்லே கீது? நாலுவாட்டி கையெழுத்துப் போட்டுப் பார்க்கறதுக்குள்ளாற டயர்ட்

ஆயிடறாரு! முனியாண்டிக்குப் போய் முக்கால் பிளேட்டு பிரியாணி அடிக்கச் சொல்லு."

ரசகுண்டு, தாத்தாவுக்குப் பரிந்து கொண்டு சொன்னான்.

"அரைபிளேடு சார், தாத்தா எங்க டீமுக்கே காப்டன்! எத்தனை ஓட்டம் ஓடியிருக்கார்! அவருக்கே நீங்க ஸ்பெஷலா கவனிச்சிங்கன்னா குஷியா வேலை செய்வார். வெறும் வாயை மெல்லச் சொன்னால் தாத்தாவுக்குக் கஷ்ட மாயிருக்காதா?"

அரைபிளேடு அப்போதே புறப்பட்டுப் போய் பிஸினஸ்லைக்காகச் சிலபல பர்ஸ்களைச் சுறுசுறுப்பாக அடித்துக் கொண்டு வந்து அப்புசாமி கையில் முப்பது ரூபாயை வைத்தான். "வாத்யாரே! நல்லா ஜல்ஸாவா இரு நாளைக்கு சொம்மா ஜில்னு வந்து ஜோராக் கையெழுத்துப் போட்டுக் குடு!" என்று அவரை ஆனந்தமார்க்கத்துக்கு வழியைக் காட்டிவிட்டுப் போய்விட்டான்.

அப்புசாமி, ரசத்துக்கும் பீமாவுக்கும் ஆளுக்கு இரண்டரை ரூபாய் கொடுத்துவிட்டு மீதி ரூபாயில் புகுந்து விளையாடத் தொடங்கிவிட்டார். 'கெழபாடு கிழபாடு' என்று அரைபிளேடு அவரை விமரிசித்தது அவருக்குச் சொரேலென்று உறைத்தது. தலைக்கு அவசியம் கறுப்பு தேவை என்று டை அடிக்க முடிவு செய்தார். ஆ! கருகரு தலையே! உன் பேர்தான் அப்புசாமியா? ஹேர் ஆயில், ஸெட், ஸ்னோ, பவுடர்!

அரைபிளேடு அவருடைய வரவை ஆவலுடன் எதிர் பார்த்து ரசகுண்டுவின் வீட்டருகே காத்திருந்தான்.

அப்புசாமி கருகருவென்ற தலையுடன் சுறுசுறு மைனராக உற்சாகமாக வந்தார். "யோவ்! கில்லாடிய்யா நீ!

மாப்பிள்ளை மாதிரி சொமா ஜம்முனு இருக்கியே? இப்படித்தான் இருக்கணும்!'' என்று அவரைப் பாராட்டினான். பீமாவும் ரசமும் பிரமித்துவிட்டார்கள், அப்புசாமியின் தலையை பார்த்து.

புதிய தெம்பும் உற்சாகமுமாக அப்புசாமி ஜிப்பாக் கையை மடக்கி விட்டுக் கொண்டு கையெழுத்துப் பணியில் இறங்கினார்.

"அந்த ஆள் பேர் இன்னா சொன்னே? மலைவாழை மொதலியாரா?" அரைபிளேடிடம் அப்புசாமி சந்தேகம் கேட்டார்.

"இன்னா தொரே! கையிலே சீட்டே கொடுத்தேனே. மணவாள முதலியார் தொரே?"

''ஓ! மறந்து போயிட்டேன், ஆமாம். சீட்டு கொடுத்தியே." என்ற அப்புசாமி ஜிப்பாப் பைக்குள் கையை விட்டுத் துழாவினார்.

"இதில்தான் போட்டுக்கிட்டேன். எங்கோ அது தாரை வார்ந்து பூடிச்சி!" என்ற அப்புசாமி நாலாபுறமும் தேட ஆரம்பித்தார். அரைபிளேட் பதறிப்போய் விட்டான். ''இன்னா துரை! எங்கே துரை அந்த சீட்டு, அந்த ஆளுடைய அசல் கையெழுத்து?"

"டேய் ரசம்!" என்றார் அப்புசாமி சாதாரணமாக, "வாசற்படி கீசற்படி, தெரு, கிருவிலே விழுந்திருக்குதா பாரு! வழியிலே பொடியைத் துடைக்கக் கைக் குட்டை எடுத்தேன். . . . அப்போ தெருவிலே விழுந்திருக்குமோ?"

"ஐயோ! குடியைக் கெடுத்திட்டியே வாத்தியாரே! அந்தச் சீட்டை வைச்சுக்கிட்டே உன்னாலே செரியாப் போட முடியலை. நீ இப்போ எதைப் பார்த்துப் போடுவே? சொலபமாகக் கிடைக்கக் கூடிய கையெழுத்தா அது?

வந்தப்போ எந்த இடத்திலே உன் மூக்கைத் துடைச்சிக்கினே... சொல்லுய்யா" அப்புசாமிக்குத் தான் பொடி போட்டுக் கொண்டு மூக்கைத் துடைத்துக் கொண்ட ஸ்தலத்துக்கு இவ்வளவு ஸ்தல வரலாறு வரப் போகிறது என்று முன்கூட்டித் தெரிந்திருந்தால் அந்த இடத்தை ஞாபகம் வைத்துக் கொண்டிருந்திருப்பார்.

இப்போது, 'வந்து வந்து... அந்தப் பீடாக்கடை' சினிமா போஸ்டர்கூட ஒட்டியிருக்குமே... ஆங்! தபால் பெட்டி இருக்குமே... " என்று தகவலைத் துண்டும் துணுக்குமாகத்தான் தர முடிந்தது.

அரைபிளேடு அந்த இடங்களிலெல்லாம் தேடினான்; கிடைக்கவில்லை.

"வாத்தியாரே! நீ இன்னா செய்வியோ! என் காகிதத்தை என்கைலே கொடுத்திடு. ஆமாம்... ரூவா முப்பது வேறு அட்வான்ஸாத் தண்டக் கருமாந்திரம் அழுதேன். நீ ஏய்யா மூக்கையும் மொச்சக் கொட்டையையும் துடைக்கிறே?"

"டே அரை! தெரியாமல் தொலைத்துட்டேன்டா. அந்த கையெழுத்து இழவு அவ்வளவு முக்கியமா? அட முன்னே பின்னே இருந்தா என்னப்பா... என் கியாபகத்திலே ஜோராப் போட்டுத்தரேன். வெச்சுக்கோ... "

"தேவையில்லை, நீ இன்னா பண்ணுவியோ! எனக்கு அந்தக் கையெழுத்துக் காகிதம் வந்தாகணும் இப்போ... " பெல்ட்டைச் சரி செய்து கொண்டான் அரைபிளேடு.

அப்புசாமி பரிதாபமாக அவனிடம் கெஞ்சினார். "பிளேடு! அந்த ஆட்டக்காரன் எங்கே தங்கியிருக்கான் சொல்லு. நேருக்கா நானே போய் மறுபடி ஒரு கையெழுத்து வாங்கி வந்து தந்திடறேன்... "

தயங்கியவாறு அப்புசாமியும் ரசகுண்டுவும் முன் ஹாலை அடைந்தனர்.

ஹாலில் ஒரு மேஜை மீதிருந்த புகைப்படத்தைப் பார்த்ததும் அப்புசாமி திடுக்கிட்டார். அப்புசாமி மட்டுமல்ல, அரை பிளேடும் அப்புசாமியை வியப்புடன் பார்க்க, அரை பிளேடை அப்புசாமி வியப்புடன் பார்க்க, இருவரும் புகைப்படத்தை வியப்புடன் பார்க்க, அந்த புகைப்படம் இருவரையும் வியப்புடன் பார்க்க...



# 5

“அட சொம்மா வந்து உட்காருங்கறேன். செய்ங், எவ்வளாவ் சொகமா இருக்குது அனுபவி சொய்ங்குறு புள்ளே. பின்னே எதுக்குத்தான் எஜமானுங்களாக இருக்கிறவங்க வெளியூருக்குப் போறாங்க. .. அவங்க இல்லாதபோது உள்ளூரிலே நாம அனுபவிக்கணும். . .”

வேலைக்கார முனியப்பன், வேலைக்காரி இருசக்காவைத் தன் அருகே வந்து சோபாவில் அமர்ந்து கொள்ளும்படி வேண்டுகோள் விடுக்க, அவள் வெட்கமும் கூச்சமுமாக, “வேணாம் மச்சான். .. கூசுது அய்யே!” என்று மனோரமா நெளிச்சல் நெளிந்தாள்.

அவளைத்தான் அவன் கல்யாணம் செய்து கொள்வதாக இருந்தது. அதனால் சந்தர்ப்பம் கிடைக்கிற போதெல்லாம், அந்த பங்களாவில் இலை மறைவு, காய் மறைவு, செடி மறைவு, மர மறைவு, ஸ்கிரீன் மறைவு, கதவு மறைவு என்று அவனுடன் சரச சல்லாப உல்லாசம் செய்வது வழக்கம்.

“இந்தா புள்ளே! போய்! அந்தக் குருளுளுப் பெட்டியைத் தொறந்து ஜில்லுனு ரெண்டு கிரஸ் எடுத்துட்டுவா. . . ஸ்டிரா போட்டு எடுத்துட்டு வா. . . .”

“அய்யய்யோ, நான் மாட்டேன். சமையல்கார ஐயாவு பொல்லாதது. . . எண்ணி வெச்சிருக்கும். . .”

“அட பைத்தியம்! அவுரு குடுமி என்னாண்டை! எஜமானுடைய மாடி ரூம்லே டெலிவிசன் பொட்டி

யிருக்கில்லே? சமையல்காரரு தன் வூட்டு முக்கால் டஜன் குஞ்சு குளுவான், பொண்சாதி அல்லாத்தையும் கூட்டியாந்து, தன் வூட்டு டெலிவிசன் மாதிரி அதைப் போட்டுக் காட்டிக்கிட்டிருக்கார். அந்தோட அல்லாருக்கும் அலுவா, போன்டா, காப்பி பலகாரம் வேறு. எனக்குக்கூடக் குடுத்தாரு... உனக்கும் கட்டி வைச்சிருப்பார். டேய் முனியப்பா... எஜமான் வந்தால் வத்தி வெச்சுடாதேன்னு கெஞ்சி கேட்டுட்டிருக்கார்."

"மச்சான்" என்றாள் இருசக்கா கொஞ்சலாக. "கொஞ்சம் பவுடர் வேணும் மச்சான். வூட்டிலே இல்லவே இல்லை."

"பவுடர்தானே? அப்படிக் கேளு புள்ளே? இந்தப் பங்களா பூரா இப்போ நம்முது. எங்கே வேணாப் போகலாம் எங்கே வேணா வரலாம். எப்படி வேணா உட்காரலாம், எதை வேணா உபயோகப்படுத்தலாம். வா எழுந்திருச்சு டிரெஸ்ஸிங் டேபுளுக்கு வா புள்ளே... நானே என் கையாலே போட்டுவுடறேன்..."

இருசக்காவை இடுப்பில் கை கொடுத்து டிரெஸ்ஸிங் மேஜைக் கண்ணாடியருகே கூட்டிச் சென்றான்.

கண்ணாடியருகே சென்றதும் "மச்சான்!" என்றாள் இருசக்கா படபடப்புடன். முகம் கெரோஸின் போட்டு நனைக்காத சின்னாளம்பட்டிப் புடவை மாதிரி சரேலென்று வெளிற, உடம்பு இஞ்சின் ஆஃப் செய்யப்படாத டப்பாக் கார் மாதிரி நடுங்க, கை நிலைக் கண்ணாடியைக் காட்ட, அதை அவன் பார்க்க -

"ஐயோ! இருசு!" என்று அடுத்த கணம் அவன் முகமும் அதிர்ச்சியால் வெளிற -

விருட்டென்று இருவரும் விழுந்தடித்து, இடறி அடித்து இன்னும் பல தினுசாக அடித்துக் கொண்டு அடுத்த அறைக்கு ஓடினர்.

"ஐயோ மச்சான், நான் அப்பவே வேணாம்னு அடிச்சிட்டேன். உன்னால இப்போ எனக்கும் வேலை போகப் போகுது..."

தலையிலடித்துக் கொண்டான் முனியப்பன். "பாதி பீடியை வேறு சோபாவில் வெச்சுட்டு வந்திட்டேன். இருக! சாயந்திரம் ஆறு மணிக்குத்தானே எஜமான் வாரதாகப் போனிலே கூடச் சொன்னார். இந்தச் செவிட்டுச் சமையல்கார ஐயாவு அரையும் குறையுமாகக் காதிலே வாங்கிக்கிட்டு நம்மை இப்படிக் காலை வாரி விட்டுடுதே..."

"ஐயோ இவுருதானே நம்மளைக் காட்டியும் படா டேஞ்சர்லே இருக்கார்! மாடியிலே குடும்பத்தையே கூட்டி யாந்து படம் காட்டிக்கிட்டு இருக்காரின்னியே! பின் வழியே அல்லாரையும் போகச் சொல்லிட்டு ஓடி யாய்யா...! பாவம் சம்சாரி மனுசன். வேலை போனா பொயிக்க முடியாது."

"அட இஸ்கி!" என்றார் அப்புசாமி அந்தப் புகை படத்தைப் பார்த்து மகிழ்ச்சி தாளாதவராக. படத்தைக் கையில் எடுத்துப் பார்த்தார். வெள்ளி பிரேமில் பளபள வென்று விஸ்தாரமான வெல்வெட் பின்னணியில் ஜிலு ஜிலுவென்று அவரது புகைப்படம் மேஜைமீது காட்சி அளித்துக் கொண்டிருந்தது. டீக்கான டிரெஸ். கழுத்தில் டை, ஷூட்!

"அடேங்கப்பா! பிளேடு. ஐயாவோட போட்டோ இன்னா கம்பீரமா இருக்குது பார்த்தியா?" என்றார்.

அரைபிளேடு பிரமித்துப் போனவனாக மோவாயை வரக் வரக்கென்று சொரிந்து கொண்டான். "அதானே! இல்லாடியா கிறே வாத்தியாரே? ஆமாம், உன் போட்டோ இங்கே எப்படி வந்திச்சு? ஒன் வூட்டுலேயே அந்தக் கெயவி ஒன் படத்தை மாட்டாமல் கயட்டிக் கடாசிப்பூடுவா?

இவ்வளா பெரிய பணக்காரன் வூட்டு மேஜை மேலே போட்டோ போட்டு வெச்சிகறமாதிரி நீ இன்னா அவ்வளவு பெரிய மன்சனான்றேன்."

"எய்யா அறை!" என்றார் அப்புசாமி சற்றே காரமாக. "நான் என்னை அறியாமலேயே ஏதாவது பெரிய அறிவாளியா இருக்கேனோ இன்னாவோ? இல்லாட்டி போட்டா வைப்பானாய்யா?"

"என் போட்டோவைக் கூடத்தான் போஷ்டாபீஸ் ஓட்டல் கீட்டல்லே பிரேம் போட்டு வெச்சிருக்கானுங்க. நான் உடனே பெரிய மன்ஸன்னு ஜம்பம் அடிச்சிகிறதா?"

"யோவ்!" என்றார் அப்புசாமி கோபமாக. உன் போஷ்டாபீஷ் படம் வெள்ளி பிரமிலேயாய்யா கீது? இந்த மாதிரி மொத்து மொத்துனு வெல்வெட் துணியிலே போட்டுக் கண்ணாடி போட்டு பங்களாவிலேயா கீது? பெரிசாச் சொல்றியே?"

அடிக்குரலில் தணிவாக இரண்டுபேரும் வாதப்பிரதி வாதம் செய்து கொண்டிருக்கும் போதே கையிரண்டையும் மிகுந்த மரியாதையுடன் கட்டியவாறு உடம்பு நடுங்கியவாறு "... எ... எ... எஜமான்... இந்த வேலைக்கார நாயியை மா... மா... மன்னிச்சிடுங்க... நீங்க வந்திருக்கிறது தெரியாமல்... " என்றான்.

அப்புசாமிக்கு ஒரு கணம் - ஒரு கணம் பலகணம் - ஒன்றும் விளங்கவில்லை. தன்னிடம் இந்த வேலைக்காரன் வந்து இப்படிக் கை கட்டி வாய் புதைந்து மன்னிப்புக் கேட்க வேண்டிய முகாந்திரம் யாது?

அவருடைய மூளை சுறுசுறுவென்று வேலை செய்து டக்கென்று ஊகித்துவிட்டது. 'ஓ! தன் எஜமானரால் வெள்ளி போட்டோ பிரேம் அளவுக்கு அந்தஸ்து தரப் பட்டு வந்திருக்கும் போது, அவரைக் கவனியாமல்

தான் உள்ளே இருந்து விட்டோமே என்று மன்னிப்புக் கோருகிறானோ! மறப்போம்; மன்னிப்போம்...

அப்புசாமி பெரிய மனிதத் தோரணையோடு அங்கிருந்த சோபாவில் உட்கார்ந்து கொண்டார். "சரி. சரி. அதனால் என்ன? பரவாயில்லே..."

சமையல்கார ஐயாவு தன் பங்குக்கு எஜமானருக்கு மிகவும் பிடித்த ஃப்ரூட் ஜூஸை உடனடியாக மிக்ஸியில் தயாரித்து, ஒரு பெரிய டம்ளரில் டிரேயில் வைத்துக் கொண்டு போனார்.

"எஜமான்... ஹிஹி... ஹி! மன்னிச்சுக்குங்க..." என்றவாறு ஜில்லென்று பழரச டம்ளரை அப்புசாமி அருகே கொண்டு சென்று 'பாவை விளக்குன்' மாதிரி டிரேயைக் கையில் வைத்துக் கொண்டு நின்றார்.

அப்புசாமி அரை பிளேடைப் பார்த்தவாறே பழரச டம்பளரை எடுத்துக் கொண்டார். அவர் கண் பேசியது, 'பார்த்தியா அரை' என் மதிப்பை!"

சமையல்காரரிடம் "இவருக்கும் கொண்டுவாங்க," என்று உத்தரவிட்டு அரை பிளேடுக்கும் ஆர்டர் வழங்கியவர் "புரியுதாய்யா என் அந்தஸ்து?" என்றார் பிளேடிடம்.

"இவ்வளாவ் பெரிய மன்ஸனா நீ? பிரியலேய்யா, பிரியலே."

"நான் பிரிச்சுவுடறேன் கேளு! நான் இந்த அரேபியா கிரேபியா போயிட்டு வந்தேனில்லையா? அங்கே பெரிய தளபதியாவே இருந்தேனில்லையா? என் வீரதீரத்தை மெச்சிப் பார்மாசிப் பதக்கமெல்லாம் கொடுத்தாங்க இல்லே? ஒருகால் இந்தப் பங்காளாக்காரன் அங்கே அரபியாவிலே இன்னாவாவது பிஸினஸ் பண்ணறவானாக இருந்து, என் வீரத்தை அங்கே கண்டு அசந்துபோன

ஆளாயிருக்காலாம். இல்லே . . . யார் கண்டதுடா அரே? ஒருவேளை முன்னே நான் ஆப்ரிக்கக் கறுப்பச்சி இளவரசி இடலியோடு சுத்திகினு இருந்தாபோ அவன் எத்தினியோ பெரிய மன்ஷாளகிட்டே என்னை அறிமுகம் பண்ணிவுட்டா . . இவருதான் பெரிய அறிவாளி. . அப்படி இப்படீ'ன்னு அதுலேகிதுலே மாட்டின கிராக்கியோ இன்னாவோ? இன்னா கஸ்மாலமாயிருந்தா இன்னா? ஐயாவுக்கு இங்கே ரொம்ப ரொம்ப மருவாதி!"

"அதெல்லாம் செரி நைனா? ஒண்ணியே ஒண்ணு கோஸபடிகிதே?"

"இன்னா?"

"ஏன் வாத்யாரே, ஒன்தலை மண்டை வெள்ளை வெளேர்ணு தானே இருக்கும். படத்துலே பாரு. கன்னங்கரேல்னுகீது. நீ இப்போதானே சாயம் தடவிகினே? இப்போது இருக்கிற தலை மாதிரியே படத்திலே கீதே. . அது இன்னானுதான் ரோஷிக்கிறேன்."

"அட மண்டு! சரியான மழுங்க பிளேடா இருக்கியே?" என்று அப்புசாமி சிரித்தார். அரைபிளேடைக் கொஞ்சம் புத்திசாலி என்று அவர் நடுநடுவே நினைத்துண்டு. இவ்வளவு மடையனாக இருக்கிறானே என்று அவருக்கு ஆச்சரியம் தாளவில்லை. "அடே பிளேடு! இப்போ வாத்தியாரு ரசிகர்கள்ளாமிருக்காங்கல்லே? அவுங்க அவுங்க வாத்தியார் படத்தை இன்னா ஷோக்கா அலங்காரம் பண்றானுங்க. என் ரசிகரு அப்படிப் பூந்து வெள்ளாடியிருக்கிறாரு என் போட்டோவிலே." எனக்கு டை கட்டி, முழுக்கை சட்டை போட்டுவுட்டு, தலைக்கு மையடிச்சு என்னை அழகு பண்ணிப் பார்க்கிறதுலே அவருக்கு ஒரு சந்தோசம்! . . பிரியுதா?"

சமையல்காரர் இன்னொரு லோட்டாவில் கூல்டிரிங் கொண்டு வந்தார். அதை வாங்கி அரைபிளேடு

அனாயாசமாகக் குடித்துவிட்டு அப்புசாமி காதில், "ஏய்யா, வயிறு ஒரே கபகபங்குது. துன்னறமாதிரி எதுனாக் கொண்டாரச் சொல்லுய்யா..." என்றான்.

அப்புசாமி, "ஏம்பா... சூடா எதானும் கொண்டுவாரக் கூடாது!" என்றார்.

விதி அங்கேதான் சிரித்தது.

அப்புசாமி 'சூடா' என்று குறிப்பிட்டது சமையல்காரரின் காதில் 'ஜூடோ' என்று விழுந்து வைத்தது. அவருக்குக் காது சாதாரண நாளிலேயே சரியாய்க் கேட்காது. குளிர் நாளில் கேட்கவே வேண்டாம்.

கமகமவென்ற சூடான டிபனை அப்புசாமியின் மூக்கு எதிர்பார்த்துக் கொண்டிருந்த நேரத்தில் "கிர்கிர்..." என்று ஒரு விதமான குறட்டை ஒலிபோல அவர் காதில் விழுந்தது. அவர் அங்குமிங்கும் பார்ப்பதற்குள் அதே மாதிரி இன்னொரு கிர்கிர்... திரும்பினார்.

வேலைக்காரன் இடுப்பு உயரத்துக்கு ஒரு பயங்கர அல்ஷேசன் நாயைப் பிடித்துக்கொண்டு வந்து நிற்கிறான்.

இவ்வளவு க்ளோஸப்பில் அதைக் கொண்டு வந்துகாட்ட அது என்ன எதாவது கவர்ச்சியான சினிமா ஸ்டாரா?

"ஜூடோவைக் கூட்டியாரச் சொன்னீங்களாமே எஜமான்... இன்னும் குளிப்பாட்டலீங்க..." என்றான். தயங்கியவாறு.

"ஜூடோ! ஹிஹி!" என்றார் அப்புசாமி. "நான், நான் வந்து ஜூடோ..." என்று அவர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே ஜூடோ அப்புசாமியை ஒரு கிராஸ்வோர்டு பஸிலைப் பார்ப்பதுபோல மேலிருந்து கீழாக ஏழெட்டுத்தரம், இடமிருந்து வலமாக பத்துப்

பன்னிரண்டு தரம் பார்த்து மோப்பம் பிடிப்பதுபோல மூக்கை விடைத்தவாறு பார்த்தது.

அப்புசாமிக்குத் தன் தெருவிலுள்ள சொறி நாய், சோம்பை நாய், குச்சு நாய் போன்ற ஜனரஞ்சகமான நாய்கள்தான் பழக்கம். அவற்றை அவர் ஒரு கனிவுடன் பார்த்து எதாவது பொறை கிறை வாங்கிப் போட்டு அவற்றோடு சமாதான சகவாழ்வு ஒப்பந்தம் நடத்திக் கொண்டு தன் தெருவில் எந்த இருட்டிலும் பயமின்றிச் சஞ்சரித்து வந்தார்.

இம்மாதிரி இடுப்புயர பிரைவேட் நாயை அவர் இவ்வளவு குளோஸப்பில் சந்தித்ததில்லை.

அதுவும் அந்த நாய் 'கோஷிஷ்' ஜாதி போலிருக்கிறது. வாயைத் திறந்து ஒரே ஒரு குரைகூடக் குரைக்காமல் கண்ணாலேயே அவரோடு பேசத் தொடங்கிவிட்டது. "எய்யா யோவ்! நீ யாருய்யா? ஜம்முனு தொறந்த வீட்டிலே நாய் நுழையற மாதிரி நொழுஞ்சதுமில்லாமல் சோபாவிலே வேறு உட்கார்ந்துகிட்டு கூல்டிரிங்கா குடிக்கிறே கூல்ட்ரிங்? எங்க எஜமான் வாசனை தெரியலே. என்னவோ ராங் உன்னை நான் கவனிச்சிக்கிறேன் - அதுயார் உன்கூட ஒரு பொறுக்கிப்பய, எண்டா டேய்! என்னடா உங்க மனசுலே நெனப்பு 'லூட் அடிக்கலாம்னு வந்திருக்கீங்களா! ஏன் மிஸ்டர், தொடையிலே எத்தனை கிலோ சதை அதிகமா இருக்குது?"

அப்புசாமி பயந்து நடுங்கியவாறு, "நானாய்யா சொன்னேன்? அவனாக கூட்டியாந்திருக்கான்," என்றான்.

"இதோ இப்போ உடனே குளிப்பாட்டிக் கூட்டியாந்துடறேன் எஜமான். . ." என்று வேலைக்காரன் கிளம்பினான்.

அப்புசாமிக்குத் தான் மேலும் அந்த ஹாலில் இருந்து மேற்படி கோஷிஷ்ஸ்ரீயைச் சந்திப்பது அவ்வளவு

உசிதமில்லை என்று தோன்றிவிட்டதால், "பிளேடு, நாம வேணும்னா அப்படியா மெதுவா ஜகா வாங்கித் தோட்டத்துப் பக்கம் போய் ஓரம் கட்டலாம்னு தோணுது. நாய் அவ்வளவு நல்லதாத் தெரியலை" என்றார்.

அழகாகவும் கவனமாகவும் சீராகவும் வெட்டி விடப் பட்டிருந்தது தோட்டத்து லான். இனம் தெரியாத அனேக விதமான புதர்ச் செடிகள், குரோட்டன்கள்.

அறுைபிளேடு இச்ஸ" கொட்டினான். "சரியான வெட்டிப் பயல்கள்"

"இன்னா வாத்யாரே!" என்றார் அப்புசாமி.

"வெறும் புல்லைப் போட்டுத் தண்ணி ஊத்தியிருக்காணுங்க வேலை மெனக்கிட்டு. எல்லாத்தையும் கொத்திக் கடாசிட்டுக் கத்திரி பத்து பாத்தி போட்டால் என்ன ஜோரா இருக்கும் பிஞ்சுக் கத்திரிக்காயை எடுத்துகினு வாரியார் வாத்யார் சொல்ற பக்குவமா ஒவ்வொண்ணையும் நாலாப் பொளந்து உள்ளே மசாலாவையும் நெய்வ அரைச்சுப் போட்டு முயுசு. முயுசா..." சொல்லிக் கொண்டேயிருந்தவன், பரபரபுடன், "அங்கே கெவுனிய்யா முண்டம்!" என்றவாறு சட்டென்று, அவரை இழுத்துக்கொண்டு ஒரு புதர் ஓரமாக ஒதுங்கினான்.

"எதைக் கவனிக்கிறதுன்னாலும் முதல்லே ஒரு சிட்டிகைப் பொடியைப் போட்டுக்கிட்டுத்தான் கவனிக்க முடியும். ரொம்ப நேரமாச்சு... மூக்கான் கெஞ்சரான்!" என்று ஜிப்பாப் பையில் கையை விட்டு டப்பியை எடுத்துத் திறந்து ஒரு சிட்டிகை எடுத்தார்.

"யோவ் கஸ்மாலம்!" என்றான் அரைபிளேடு அவசரமாக "அங்கே பாருய்யா."

அப்புசாமியின் மோவாயை ஒரு திரும்புத் திருப்பி பங்களாவின் போர்ட்டிகோ பக்கமாப் பார்க்க வைத்தான்

நீளமான, அகலமான, பிரம்மாண்டமான காரிலிருந்து அசல் அப்புசாமியைப் போன்ற தோற்றமுடைய ஒருத்தர் இறங்கிக் கார்க் கதவைச் சாத்திவிட்டுப் படி ஏறிக் கொண்டிருந்தார்.

டிரைவர் அவர் பின்னால் ஏதோ சில ஃபைல்களையும் சிறிய பிரீஃப்கேஸையும் எடுத்துக்கொண்டு மரியாதையாகப் பின் தொடர்ந்தான்.

பங்களாவுக்குள் நுழைந்தவர், "எங்கேடா ஒரு பயலையும் காணோம் ... முனியப்பன் இருக்கிறானா பார்..." என்றார்.

டிரைவர் விழுந்தடித்துக் கொண்டு முனியப்பனைத் தேடி வந்தான். முனியப்பன் ஜோவைக் குளிப்பாட்டிக் கூட்டிக் கொண்டு அவரருகே சென்றான், 'எஜமான் இந்த வயசிலும் எவ்வளவு சுறுசுறுப்பு. ஐந்து நிமிடத்துக்கு முன்னாலே ஜிப்பா வேட்டி போட்டிருந்தார். அதுக்குள்ளே டீக்கா டிரஸ் மாட்டிக்கிட்டு சம்னு இருக்கார்...' என்று அவன் நினைத்துக் கொண்டான்.

அப்புசாமி திறந்த வாய் மூடாமல் தன் மாதிரியே தோற்றமுள்ள அந்த உருவத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"இன்னாது பிளேடு! அதிசயமாகீது. என் மாதிரியே இருக்கானே அந்தக் கெயவன்? ஒருகால் நான்தான் அங்கேயும் இங்கேயுமா இருக்கேனா? ஆச்சிரியமாயில்லே? யார் இந்தக் கஸ்மாலம் என்னைப் பழிப்பு காட்டற மாதிரி என் மாதிரியே கீது? எங்கம்மாவுக்கு எனக்குத் தெரியாம ரெட்டைப்புள்ளே ஏதாச்சும் பொறந்து ரகசியமா இத்தினி வருஷம் வளர்த்துட்டு, ரொம்ப நாளாப் புடிச்ச சினிமாவைத் திடீர்னு ரிலீஸ் பண்ணின மாதிரி ரிலீஸ் பண்ணிப்பிட்டானா? எப்படியாயிருந்தால் என்ன?

இன்னாவோ கையெழுத்து வேணும்னியே? அதைப் போய்க்கேட்டு வாங்கிக்கிட்டுப் போய் சேரலாம் வா. . "
என்றார் அப்புசாமி.

"அரைபிளேடு முகத்தில் யோசனை படர்ந்திருந்தது. கையெயுத்து கிய்யெயுத்து வேணாம் வாத்யாரே! வேற படா பிளான் ஒண்ணுகீது . . . நாம இப்போ நைஸா நயுவிடலாம். பொறப்படு."



# 6

''மொதலியார் சுருட்டுதான் பிடிக்கிறது? அதுவும், இன்னாவோ 'கண்ணு' மார்க்காம். எந்தக் கடையிலேருந்து வாடிக்கையாச் சப்ளை ஆவறது என்கிறதைக் கண்டுகினு மாதிரிக்கு ஒரு சுருட்டுக் கூட வாங்கிக்கினே வந்துட்டேன்!"

"கிலாடிடா நட்டு! யோவ் அரை பிளேடு! பெரீவரு கைலே வாங்கிக் குடுய்யா அந்தச் சுருட்டை! புடிச்சுப் பாக்கட்டும் இப்பவே. . ."

"அய்யாங்!" என்றார் அப்புசாமி. "சுருட்டு கிருட்டெல்லாம் நான் குடிச்சதில்லே. . ."

அப்புசாமி அரை பிளேடைப் பார்க்க, அரை பிளேடு முக்கால் பிளேடைப் பார்க்க, முக்கால் பிளேடு பெருந்தன்மையுடன், ''பெரீவருக்குப் பயக்கமில்லேன்னா வோணாம்பா. . . மூக்கிலே வாயிலே பொகை ஏறிப் பொட்டுனு பூட்டார்னா அப்பாலே அம்பேலாய்ப் பூடும்!" என்றான்.

''அது செரி நைனா! ஆனால் மொதலியார் சோறுதுன்ன கையோடு சுருட்டு புடிச்சே தீருவாரே! டைனிங் மேசை மேலேயே சுருட்டு இருக்கணுமே அவருக்கு. . ." அரை பிளேடு விவாதித்தான்.

அப்புசாமி அவனை முறைத்தார். "யோவ் அரை! பெரிய வாத்யாரே வேணாம்னு விட்டுடுங்கறாரு! நீ ஏய்யா என்னைச் சுருட்டு புடிக்க வெச்சச் சாவடிக்கப் பார்க்கறே?"

"செரி செரி ரகளை வோணாம். கருட்டு விசயத்துக்கு ஒரு வழி அப்புறம் பண்ணுவோம். டேய் நட்டு! நீ இன்னாவோ கெவனிச்சேன்னியே... அத்தே சொல்லுடா!"

நட்டு என்ற 'சிஷ்யப்புள்ளே' தான் கவனித்த விஷயத்தைக் கூறினான்: "மொதலியாரு கொட்டாவி வுடறது ஒரு மாதிரியா வகுந்து வுடறாரு! பெட்ரோல் பங்குலே காரைத் தொடைச்சிகினே கெவுனிச்சேன்..."

"வகுந்துன்னா?" என்றார் அப்புசாமி.

"டேய் முண்டம்!" என்று கடிந்துகொண்டான் முக்கால் பிளேடு - நட்டைப் பார்த்து. "பெரீவருக்கு வுட்டுக் காட்டுடா அந்த மாதிரி!"

"ஒண்ணுமில்லே வாத்யாரே, ஹான்னு வாயைத் தொறந்ததும் மொதலியார் ரெண்டு சொடுக்குப் போட்டுட்டு ஆள்காட்டி விரலை நெடுக்கு வாட்டிலே மேல் உதட்டுக்கும் கீய் உதட்டுக்கும் பந்தக்கால் கொடுத்த மாதிரி நடுவுலே வெச்சுகினு, கொட்டாவியை ரெண்டா வகுந்து வுடுவாரு. இதோ இப்பிடி..."

அப்புசாமிக்கு அது கஷ்டமானதாக இல்லை. "இப்படித் தானேய்யா?..." என்று விட்டுக் காட்டினார்.

"சொடுக்குப் போடலியே?" என்று திருத்தினான் நட்டு.

"அட கஸ்மாலம்!" என்றான் முக்கால் பிளேடு. "இதெல்லாம் சின்ன சின்ன விசயம். பெரீவரு மொதலியாருடைய நடையைப் பத்தி சொன்னானே... அத்தே தான் பெரீவரு கவனிச்சிக்கணும்."

"நடையா?" என்றார் அப்புசாமி எரிச்சலுடன்.

"ஆமாம் பெரீவரே! ரைட் காலைக் கொஞ்சம் வலிச்சிகினாப்பலே மொதலியாரு நடக்கறாராமில்லே..."

மவுண்ட்ரோடில் எம்பையர் சினிமா தியேட்டரில் காரை நிறுத்திவிட்டு கவுண்ட்டர் அருகே மணவாள முதலியார் நடந்து சென்றதாகவும் தான் உன்னிப்பாகக் கவனித்ததாகவும், எழெட்டு அடிக்கு ஒரு தரம் முதலியார் வலது காலை விசித்திரமாக ஒரு நொடி நொடிப்பதாகவும் அவன் குறிப்பிட்டான்.

"வலது காலை நொண்டி நொண்டி நடக்கணும். அவ்வளவுதானே? நடந்து தொலைக்கிறேன்." என்றார் அப்புசாமி.

அரைபிளேடின் குருநாதரும், 'மணவாள முதலியார் போண்டித் திட்ட'த்தின் சிறப்புச் சிற்பியுமான முக்கால் பிளேடு விளக்கினான். "இல்லே பெரீவரே! சொம்மா ஒன் இஸ்டப்படி நொண்டக்கூடாது. அரை சொல்றதைக் கெவுனி நல்லா. இது ரொம்ப முக்கியம். இஸ்டப்படி நொண்டி ஓவர் பண்ணினாலும் தப்பு. நொண்டாமலே போயிட்டாலும் தப்பு. எழெட்டுத்தரம்... வலதுகாலை... அங்கே கெவுனி... கிலாடி செய்து காட்டறான் பார்... அத்தே மாதிரி எழு தப்படி வெச்சதும் ஒரு நொடி நொடிக்கோணும்... குதிரை வுட்டாராம் மொதலியார், கீனே வுளுந்து மொயங்காலைப் பேத்துகினாராம். அதனாலே சேர்ந்தாப்பலே எழெட்டு அடி நடந்தா ஒரு வலி வருமாம். வேலைக்கார முனியப்பன் வாயைக் கௌறி அரை கொண்டாந்திருக்கான் தகவலு... இதனாலே அவரு குதிரை வுடுவாருன்னு வேறு தெரியுது. இன்னாபா அரே? மொதலியார் இப்பகூடக் குதிரைவுடப் போறாரா இன்னா?"

"அய்யய்யோ!" என்றார் அப்புசாமி அவசரமாக "குதிரை கிதிரையெல்லாம் என்னாலே விட முடியாதுபா எல்லாருக்கும் பெரிய கும்புடு. ஆளை வுட்டுடுங்க. நான் போறேன்."

அரை பிளேடு அப்புசாமியின் தோளைத் தட்டிக் கொடுத்தான். "இன்னாயா தில் இல்லாத ஆளா கீற? இப்ப யாருய்யா உன்னைக் குதிரை வுடச் சொன்னாங்க? முன்னே எப்பவோ குதிரை ரெய்டிங் போனாராம். இப்ப இல்லே. பயந்து சாவுறியே? இப்படி ஒவ்வொண்ணுக்கும் பயந்துகினா எப்படிய்யா நீ துட்டு சம்பாதிக்க உன் கெயவிக்கிட்டே போய் மீசையிலே கை போடுவே?"

"செரி செரி இன்னும் அந்த நாசமாப் போற மொதலியார் என்ன என்ன பண்ணுவான்? சொல்லித் தொலையுங்க ..." என்றார் அப்புசாமி.

மணவாள முதலியாரின் நடவடிக்கைகளை விசேஷமாகக் கவனிப்பதற்கென்று அரை பிளேடு கோஷ்டியினர் அமர்த்தியிருந்த சிஷ்யப்பிள்ளைகள் நாலைந்து பேர் அங்கே குழுமிருந்தனர்.

"மொதலியாருக்கு பேப்பர்னா ரொம்ப இஷ்டம்"

"அய்யய்யோ!" என்று அலறினார் அப்புசாமி. "நம்மாலே பேப்பரைக் கீப்பரைத் துன்ன முடியாது. அவ்வளவு பெரிய பணக்காரன். பேப்பரை ஏன் அய்யா துன்னுணும்?"

"இல்லே பெரீவரே. நியூஸ் பேப்பரேப் படிச்சதும் கசங்காமல் நலுங்காமல் அலுக்காமல் மடிச்சு வச்சுடணும்."

"இதெல்லாம் ஒரு விஷயமா?"

"அப்புறம் வந்து, மொதலியாரு, டெய்லி மொவத்தைச் சவரம் பண்ணிக்கிடறாரு. தானே பண்ணிகிடறாரு. ஆனால் பிளேடிலே பண்ணிக்கிற தில்லை."

"! ஓ நகத்தாலேயே வழிச்சிப் போட்டுடறாரோ?" என்றார் அப்புசாமி எரிச்சலுடன்.

"இல்லே பெரீவரே. சலூன்லே கீதே அறுப்புக் கத்தி, அந்த மாதிரிக் கத்தியிலேதான் பண்ணிக்குவாராம், இன்னா மாதிரி அவரே சாணைக் கல்லிலே கத்தியை நெகு நெகுன்னு தீட்டறாரு! காய்கறி விக்கிற கூடைக் காரனாட்டம் மூணு நாளு தெனமும் போய்க் கெவுனிச்சேன். அதுவும் டாண்ணு மணி ஆறே காலுக்கு அவர் ஆரம்பிச்சுடறார் செரச்சிக்க."

அப்புசாமி மோவாயைத் தடவிக் கொண்டார். முக்கால் பிளேடைப் பார்த்தார். "இன்னா முக்கால் பிளேடு! கத்தியிலே நான் பண்ணிகிட்டுப் பழக்கமில்லியே!"

முக்கா பிளேடு அலட்சியமாகச் சிரித்தான். "பெரீவரே! கத்தி போடறது பெரிய வேலை ஒண்ணுமில்லே. ஒரு நாளு வூட்டுலே பயகு! தானே வந்துடும்."

"அது அவ்வளவு முக்கியம்னு நினைக்கிறியா முக்கா!" என்று கேட்டுக் கொண்டார்.

"பெரீவரே! உனக்கு ஒரு தத்துவம் சொல்லலாம்னு பார்க்கறேன்" சின்னச் சின்ன முடிச்ச அவுத்தாத்தான் பெரிய முடிச்சை அவுக்கலாம். சின்ன வெசயத்திலே கெலைப் பிசகாக இருக்கறதுதான் காலை வாரி விட்டுடும். ஒன் இஷ்டப்படியே நடந்துகிறதுன்னா இன்னாத்துக்கு நான் இவ்வளவு செரமப்படணும்! மொதலியாரு எப்படி நடந்துப்பார். அவரோட பயக்க வயக்கம் இன்னான்றது அத்துபடியாத் தெரிஞ்சு அதுமாதிரி நடந்தால் தான் நம்ம காரியத்துக்குத் தோதா இருக்கும். பெரீவரே. . . . இன்னும் நம்ம திட்டத்தக்குச் செரியா மூணு நாளு கீது. மூணாம் நாளு. வெள்ளிக்கிழமை. சாய்ந்திரம் மூணுமணி. நீ மொதலியார் பங்களாவுக்குப் போறே. மொதலியார் அப்போ மவுண்ரோடிலே கிளப்பிலே சீட்டாடிகினு இருப்பார். அப்படி அவர் நடுவுலே கௌம்பிட்டாலும்

அவரு வாராதபடி அவர் காரை நட்டு கெவுனிச்சிகினு அங்கேயே அவரை டாவு கட்டிகினு இருப்பான். நீ பீரோவைச் சாவி போட்டுத் தொறக்கணும். சாவி கெடைக்காமல் போனால் அரை பிளேடு கூடவே இருக்கிறான். அவன் அடிச்சித் தெறந்துடுவான். நீ கட்டுக் கட்டா இருக்கிற பணத்துலே எவ்வளவு இருக்குமோ அவ்வளவும் எடுத்துக்கினு..."

சிஷ்யப் பிள்ளை நட்டு சந்தேகம் கிளப்பினான். "ஏன் வாத்தியாரே! பணத்தைப் பாங்கியிலே போட்டு வெச்சிருந்தாங்கன்னா? சில மூதேவிங்க அப்படியில்லே செய்துடறாங்க."

"அதெல்லாம் பார்த்தாச்சு. கட்டுகட்டா நோட்டுங்க இருக்கிறதைச் சமையற்காரன் கண்ணாலே பார்த்திருக்கான் - அரை பிளேடு அவன் வாயைப் புடுங்கிச் சமாசாரம் கொண்டாந்திருக்கான்" என்றான் மூக்கால். "அரே! பெரீவருக்கு ரெடிமேட் சாப்பிலே மொதலியார் டிரெஸ் ஸெல்லாம் அதுக்குள்ளே ரெடி பண்ணிடு! என்ன? கெவனம் இருக்கட்டும். வெள்ளிக்கிழமை பகல் மூணு மணி."

அப்புசாமி ஷேவிங் செய்து கொள்ளப் பிரயத்தனப் பட்டுக் கொண்டிருந்தார். மனம் 'மணவாள மொதலியாரே! நீ எங்கிருந்தாலும் நாசமாய்ப் போக!' என்று திட்டிக் கொண்டிருந்தது.

எவ்வளவு பெரியப் பணக்காரர்! தானே ஷேவ் செய்து கொள்ள வேண்டுமாக்கும்? அதுவும் சவரக் கத்தியில்!

சீதாப்பாட்டி கழகத்துக்குக் கிளம்பிக் கொண்டிருந்தாள். "மை குட்னஸ்!" என்று ஆச்சரியப்பட்டாள். "ஆர் யூ டூயிங் எனி ஆசனாஸ்?"

அப்புசாமி பதில் சொல்லாமல் சவரக் கத்தியும் கையுமாக நிமிர்ந்து நோக்கினார்.

பாட்டியின் முகத்தில் புன்னகை படர்ந்தது. கணவர் உண்மையிலேயே சலூன் காசைக் கூடச் சிக்கனப்படுத்தி வீட்டிலேயே ஷேவ் செய்து கொள்கிறாரோ? ஆனால் ரேஸரை அவர் பிடித்திருந்த விதம் எதன் கையிலோ எதையோ கொடுத்த மாதிரியாக இருந்தது. "கழுத்தை கிழுத்தை அறுத்துத் தொலைச்சிக்கப் போறீங்க? பி கேர் ஃபுல்... இன்கேஸ் எனி எமர்ஜன்ஸின்னா ஃபர்ஸ்ட் எய்ட் பாக்ஸ் அதோ இருக்கு!" என்று சிரித்தவாறு கிளம்பினாள்.

அப்புசாமி பல்லைக் கடித்துக்கொண்டு பழக ஆரம்பித்தார்.

வெள்ளிக்கிழமை. பிற்பகல். மணி இரண்டே முக்கால்.

மணவாள முதலியார் கிளப்புக்குப் போய்விட்டார்.

சமையல்கார ஐயாவு 'அப்பாடி!' என்று வியர்வையைத் துடைத்துக் கொண்டு சோபாவில் உட்கார்ந்து கொண்டார். மனசுக்குள் ஒரு வித மகிழ்ச்சியும் பொங்கிக் கொண்டிருந்தது. அவர் செய்த ரவா இட்டலி மிக நன்றாக இருப்பதாக எஜமானிடம் நல்ல பெயர் வாங்கினதில் அவருக்கு ஏக மகிழ்ச்சி.

"ஐயாவு! ஓட்டலிலே கூட இவ்வளவு பக்குவமாக இல்லே! ஏய்யா. . . நீ தான் பண்ணினியா? இல்லே ஓட்டலில் கீட்டலிலேருந்து வரவழைச்சுட்டியா?" என்று எஜமானர் ருசித்து ரசித்துச் சற்றுமுன் சாப்பிட்ட போது சிரித்தவாறு கேட்ட வார்த்தைகள், ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன் மகனைச் சான்றோனெனக் கேட்ட தாய்க்குரிய மகிழ்வை அவருக்கு உண்டாக்கியவாறு இன்னமும் ரீங்கரித்துக் கொண்டிருந்தன.

அதே சமயம் அவருடைய மனத்தில் லேசான ஓர் உறுத்தல் எழாமலும் இல்லை எஜமானருக்கு எப்போதாவது லேசாக வயிற்றுவலி வருவதுண்டு. அரை இட்டலியோ, கால் தோசையோ அதிகமாகப் போய் விட்டால்கூட அதற்குப் பலன் மத்தியானமோ சாய்ந்தரமோ நிச்சயம் தெரிந்துவிடும்.

வேலைக்கார முனியப்பன் ஜுடோவைக் குளிப்பாட்டி அதன் வாயில் அது வழக்கமாகக் கடித்து விளையாடும் மரக்கட்டையைக் கொடுத்து கூட்டி வந்து கொண்டிருந்தான் ஜுடோவுக்கு அருமையான கூரான பற்கள். கட்டையைக் கடித்துக் கடித்துப் பற்களைச் சாணை தீட்டிக் கொள்வது அதன் வழக்கம்.

"என்னாங்கோ சமையல்கார ஐயா!... சோபாவிலேயே உட்கார்ந்துட்டீங்க காற்றாட? எஜமானர் கிளப்புக்குப் புறப்பட்டுப் போயிட்டார் என்கிற தைரியமா?" என்று கிண்டல் செய்தான் முனியப்பன். "அன்னைக்கு எஜமானர் திடும்னு வந்து மாட்டிக்கத் தெரிஞ்சோமே. . . மறந்துட்டீங்களா?"

"சரிதான் சும்மா இர்ரா. . . நான் இன்னைக்கு பஸ்டு கிளாஸ் ரவா இட்டலி பண்ணி எஜமானரே சர்டிபிகேட் கொடுத்துட்டாராக்கும். அவரே கேட்டு வாங்கி மொத்தம் மூணு இட்லி சாப்பிட்டாராக்கும்?" என்றார்.

"ஐயையோ! மூணு இட்லி சாப்பிட்டுட்டாரா? ஒத்துக்காதே எஜமானருக்கு! வயித்துவலி வந்துடுமே? ஓமவாட்டர் இருக்குதில்லே ரெடியா?" என்றான் முனியப்பன் கவலையோடு.

"அதுதான் எனக்கும் கவலையாயிருக்குது நல்லாத் தான் பண்ணியிருந்தேன். ஆனாலும். . ." என்று பேசிக் கொண்டேயிருந்தவர் திடீரென்று விழுந்தடித்துக் கொண்டு சோபாவிலிருந்து எழுந்து கொண்டார்.

காம்பவுண்டுக்கு ஏதோ கார் வரும் சத்தம் கேட்டதுதான் காரணம்.

என்னடாது, இப்பத்தானே பொறப்பட்டுப் போய்க் கால்மணி ஆகுது அதுக்குள்ளே எஜமான் திரும்பிட்டாரா? அப்படியானால் நிச்சயம் வயித்துவலிதான்.

டாக்ஸியிலிருந்து கம்பீரமாக அப்புசாமி இறங்கினார் மிடுக்காகக் கையை அசைத்து, டாக்ஸி போக உத்தரவிட்டு, போர்டிகோ படி ஏறினார். மனசுக்குள் ஒண்ணு, இரண்டு மூணு என்று எத்தனை காலடி வைக்கிறோம் என்று எண்ணிக் கொண்டார்.

எழு ஆனதும் காலை 'லொடச்' என்று ஒரு நொடி நொடித்துக் கொண்டார்.

வேலைக்கார முனியப்பன் கையைக் கட்டிக் கொண்டு கவலை பாய்ந்த முகத்துடன் எஜமானைப் பார்த்தான். பிறகு சமையல்கார ஐயாவுவைப் பார்த்தான். அர்த்தம்: "சமையல்கார ஐயா, உங்க மூணு இட்லிப் பெருமையைப் பார்த்தீங்களா? எசமானுக்கு வயித்துவலி. . வந்துட்டார் பாருங்க கௌப்பிலேருந்து. . . "

சமையல்கார ஐயாவுக்குத் துக்கம் துக்கமாக வந்தது. குற்றவாளி போல் கரகரத்த குரலில். . "எஜமான் வந்து. . " என்றார் பயந்தவாறு

அப்புசாமி அவரைப் பார்த்தார். வேலைக்கார முனியப்பனைப் பார்த்தார். இந்தப் பசங்களுக்கெல்லாம் ஏதாவது சந்தேகமாக?

ஒரு கொட்டாவி விட்டுக் காட்ட வேண்டியது அவசியம் என்று தோன்றியது.

'ஹாவ்' என்று வாயைத் திறந்து இரண்டு சொடுக்குப் போட்டு விட்டு ஆள்காட்டி விரலால் கொட்டாவியைப்

பாகப்பிரிவினை செய்து வெளியே விட்டார். சோபாவிலே போய் உட்கார்ந்தார்.

"எஜமான் ..." என்றான் பொறுப்பும் கவலையும் நிறைந்த குரலில் முனியப்பன். "ஓமவாட்டர் வேணும்னா..."

அப்புசாமிக்கு புது விஷயமாக இருந்தது. இந்த வேலைக்கார முனியப்பன் என்னவோ புதுசாக உளறுகிறானே இன்னடா இழவு... வாத்தியார் பசங்க ஓம்வாட்டர் பற்றி ஒரு தகவலும் சொல்லலையே... என்று மனசு படபடக்க, அதைக் காட்டிக் கொள்ளாமல் ஒரு புன்னகையுடன், "என்ன கேட்டே?" என்றார்.

"வந்துங்க... ஓம வாட்டர் வேணும்னாக் கொண்டாரட்டுமா?"

அப்புசாமி மனசுக்குள் முக்கால் பிளேடையும் அரை பிளேடையும் அவர்களுடைய சிஷ்யப்பிள்ளைகளையும் திட்டித் தீர்த்தார். கிளப்பிலேயிருந்து மணவாள முதலியார் திரும்பி வந்ததும், ஓமவாட்டர் சாப்பிடுவார் என்கிற விஷயத்தைத் தடிப்பயல்கள் தனக்குச் சொல்லவே இல்லையே?

டிராமா ஸ்டேஜில் அமெச்சூர் நடிகர் வசனத்துக்காக ப்ராம்ப்டரை சைட் அடிப்பது போலப் பரிதாபமாக வலப்புற ஜன்னலைப் பார்த்தார். அரை பிளேடின் பரட்டைக் கிராப்பு ஜன்னலின் அடி மட்டத்தில், உதயசூரியன் மாதிரியான கிரணங்களுடன் லேசாகத் தெரிந்தது அவருக்கு ஆறுதலாக இருந்தது. திட்டப்படி வலப்புற ஜன்னலுக்கு வெளியே வந்து அவன் பதுங்கிக் கொண்டிருந்தான்.

ஓமவாட்டர் பற்றி அவனிடம் எழுந்து போய்க் கேட்கலாமோ?

"ஓமவாட்டர்? ஹிஹி....." என்றவர் சோபாவிலிருந்து எழுந்து ஜன்னலை நோக்கி நகர்ந்தார். கிர்ர்ர்..... என்று விசித்திரமான ஒலி கேட்டது. வாயிலிருந்த கட்டையைப் போட்டு விட்டு அப்புசாமியைப் பார்த்தது இடுப்புயர ஜூடோ சாபரோகாரியின் தொடை போல் அப்புசாமியின் தொடை நடுங்கியது.



# 7

'தொடைச்சதையா? கால் சதையா? எது வேண்டும் சொல் மனமே என்று அப்புசாமி தன் பிரசினையை அலசினார்.

'உறுமிக் கொண்டிருக்கும் நாயைக் கடந்து ஜன்னலை அணுகி அரை பிளேடிடம் யோசனை கேட்பதை விடப் பேசாமல் வரப்போகிற ஓம வாட்டரை விழுங்கி விட்டு நிலைமையை மேற்கொண்டு நீயே சமாளி நைனா! தொடை உன்னுடையது. அரை பிளேடுடையது அல்ல' என்று அவருக்கு விவேகம் அறிவுரை வழங்கியது.

சோபாவில் போய் உட்கார்ந்தார்.

தோட்டக்காரன் பயபக்தியுடன் வாய் பொத்திக் கொண்டு வந்து நின்று ஏதோ முணுமுணுத்தான்.

இவன் என்னத்தைக் கேட்டுத் தொலைக்கிறானோ தெரியவில்லையே? அப்புசாமி சங்கப்பட்டார். ஆனாலும் மிடுக்காக "என்ன" என்றார்.

"ஒரு அம்மா உங்களைப் பார்க்க வந்திருக்காங்க? வெளி சோபாவிலே உட்காரச் சொல்லியிருக்கேனுங்க!"

அப்புசாமி மோவாயைத் தடவிக்கொண்டு ஜன்னல் விளிம்பைப் பார்த்தார். அரைபிளேடின் தலை அஸ்தமனமாகியிருந்தது. எங்காவது பீடி பிடிக்கப்போய் விட்டானா? இன்னாடாது பேஜாரு! நம்மளை ஸிங்கிளிலே மாட்டி வுட்டுட்டு. இவன் பாட்டுக்கு நைஸா நழுவிட்டானா!

அப்புசாமிக்குப் படபடத்தது.

தோட்டக்காரன், தேர்தல் தேதி போல உறுதியாக அங்கேயே நின்று கொண்டு, "வரச் சொல்லட்டுங்களா" என்றான்.

அம்மா! யார் அம்மா? என் அம்மா? எப்படி அம்மா? மைதா மாவா கடலை மாவா? ஏன் பார்க்கணும்? எதற்காகப் பார்க்கணும்?

"ஏய்யா... எப்படிய்யா இருக்கா அந்த அம்மா!?" என்று அப்புசாமி கேட்டு வைத்தார் படபடப்புடன்.

தோட்டக்காரன் கூச்சத்துடன், "நல்லாத்தாங்க இருக்காங்க..." என்றான்.

அவன் அப்படிச் சொன்னதும் அப்புசாமிக்கு திடீரென்று நினைவுகள் ஒரு கணம் எங்கெங்கோ போய் விட்டன. ஒருகால் இந்த மணவாள முதலியார் மைனர் ஆட்டம் போடுகிறவரோ; விதவிதமான அம்மாக்களின் தொடர்பு உடையவரோ... ஆ! கடவுளே! என்ன ஓர் இன்பமான துன்பம், மனச்சாட்சியுடன் குறுகிய காலப் போராட்டம் ஒன்று செய்துவிட்டு, "இப்போ ரொம்ப பசியாம். இல்லே இல்லே... பிஸியாம். அப்புறமா வரச் சொல்றாங்கோன்னு சொல்லிடு!" என்றார்.

தோட்டக்காரன் போய் வந்தான். "ஒரே ஒரு நிமிட்டுக்களாம்... பார்த்துட்டு உடனே போயிடறாங்களாம்..."

அப்புசாமி மோவாயைச் சோறிந்து கொண்டார். "டேய் நாசமாய்ப் போகிற அரை முக்கால் பிளேடுகளா! நீங்களும் உங்க திட்டமும். ஒரு அம்மா வந்து பார்ப்பாங்கன்னு சொன்னீங்களாடா... யாரு எவருன்னு தெரியாம வந்தவங்களோடு நான் எப்படிடா பேசிச் சமாளிப்பேன்..."

''வரச்சொல்லட்டுங்களா?'' தோட்டக்காரன் கேட்டான்.

"ஊம்" என்றார் அப்புசாமி ஈனசுரத்தில்.

பா. மு. கழகத்தில் சீதாப்பாட்டி தன்னுடைய பிரசிடெண்ட் அறையில் குட்டையான ஒரு கான்வஸ் சாய்வு நாற்காலியில் ரிலாக்ஸ்ட் ஆகச் சாய்ந்து அமைதியாக ஓய்வு எடுத்துக்கொண்டிருந்தாள், கையில் ஒரு புத்தகத்துடன்.

கதவை லொட்டென்று ஒற்றை தட்டு தட்டினாள் காரியதரிசி அகல்யா சந்தானம்.

"எஸ்!" குரல் கொடுத்தவாறு நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டாள் சீதாப்பாட்டி

"வந்து பிரசிடெண்ட்ஜி..." காரியதரிசி தயங்கினாள்.

"எஸ் அகல்யா?"

"வந்து..." என்றாள் அகல்யா."மூன்று மணிக்கு நமக்கு ஒரு எங்கேஜ்மெண்ட் இருந்ததில்லையா! யாரோ ஒருத்தரை டொனேஷன் விஷயமாகப் பார்க்க போக வேண்டுமென்று."

"எஸ்... எஸ்... ஐயம் திங்திங் அபெளட் தட்"

அகல்யா சந்தானம் தயங்கினாள், "ஒன்றுமில்லை. என் மாட்டுப்பெண் அவசரமாகப் போன் செய்தாள் புறப்பட்டு வரச்சொல்லி, பேத்தி நீலு கீழே விழுந்துட்டாளாம். அது எப்பவும் பொல்லாத விஷமம்."

"அடடே! அப்படியா... யு அடெண்ட் டு இட் டொனேஷன் விஷயமாக நான் போய் பார்த்துக் கொள்கிறேன்."

காரியதரிசி புறப்பட்டுச் சென்றார். சீதாப்பாட்டி சிறிது படித்துக் கொண்டிருந்தவிட்டுப் பிறகு எழுந்தாள்.

முகத்தைக் கழுவிக் கொண்டு ஹாண்ட்பாக்குடன் மணவான முதலியார் பங்களாவுக்குக் கிளம்பினாள்.

சிதோப்பாட்டி அசந்துபோய்விட்டாள். 'மைகாட்! இவர் எங்கே இங்கே வந்து, யார் வீட்டு சோபாவிலோ பிரமாதமாக ட்ரிம்மாக டிரெஸ் செய்து கொண்டு, கால் மேல் கால் போட்டவாறு...'

சமையல்காரன் எதையோ மிகுந்த மரியாதையுடன் கொண்டுவந்து ஒருபுறம் நீட்ட, தோட்டக்காரனும் வேலைக்காரனும் கைக்கட்டி, வாய்பொத்திச் சிறிது தள்ளி நிற்கச் -

சிதோப்பாட்டியின் பார்வை மேஜைமீது வெள்ளிச் சட்டத்திலிருந்த புகைப்படத்தைப் பார்த்து, அதிலும் அப்புசாமி! சுவரில் பெரிய படம்! அங்கே கால்ஃப் விளையாடும் போஸில் அப்புசாமி.

அவள் திகைப்பு அடங்கித் தன்னைச் சமானித்துக் கொள்ள நீண்ட நேரமாயிற்று.

'மை குட்னஸ் என்ன ஒரு விசித்திரம்! நம் வீட்டுக் காரரைப் போலவே அசலாக அச்சாக இந்தப் பெரிய மனிதரின் உருவமும் இருக்கிறது. ஃபாக்ட் இஸ் ஸ்டிரேஞ்சர் தேன் பிக்ஷன் என்கிறது எவ்வளவு சரியாக இருக்கிறது.' என்று எண்ணிக் கொண்டாள்.

நல்லவேளை, வீட்டுக்காரர்தான் என்று எண்ணி மரியாதைக் குறைவாக அவரிடமும் எடுத்த எடுப்பில் ஏதாவது கமெண்ட் அடிக்காமல் இருந்தோமே என்று தன் கட்டுப்பாட்டைத் தானே மெச்சிக்கொண்டாள்.

மணவான முதலியார் என்பவரைப்பற்றிச் சிதோப்பாட்டி ஏதோ ஓரளவு கேள்விப்பட்டிருந்தாளே தவிர அவரை நேரில் பார்த்ததில்லை. மேற்படி முதலியார் புதிய

செல்வந்தர் என்றும் தாராளமாக நன்கொடை தருபவர் என்றும் கேள்விப்பட்டிருந்தாள்.

அப்புசாமி சீதாப்பாட்டியைக் கொஞ்சமும் எதிர் பார்க்கவில்லை.

பக்கென்று மூச்சே நின்றுவிடும் போலாகி வாய் மூன்றங்குலம் பிளந்துவிட்டது. "ஹிஹி... சீ... சீ... சீதே..." என்ற வார்த்தை நாக்கு நுனிவரை வந்துவிட்டது. அப்புறம் தான், தன் டிரெஸ், தோரணை, கைகட்டி வாய்புதைத்து நிற்கும் வேலைக்காரர்கள், தான் மணவாள முதலியாராக்கும் என்பதெல்லாம் ஞாபகத்துக்கு வந்தன.

செயற்கையாக ஒரு மிடுக்கை வரவழைத்துக் கொண்டு பாட்டியை ஏறெடுத்துப் பார்க்காதவர் மாதிரி அருகில் இருந்த ஆங்கிலப் பேப்பரை எடுத்துக் கையில் சரியாக வைத்துக் கொண்டார்.

பாட்டி புன்னகையுடன் அவருக்குக் கைகூப்பி நமஸ்கரித்தாள். "எக்ஸ்க்யூஸ் மி... உங்களுக்குத் தொந்தரவு கொடுத்துவிட்டேன்..." புடவைத் தலைப்பை அடக்கமாக சீதாப்பாட்டி இழுத்துப் போர்த்துக்கொண்டாள். "ஐயம் மிஸஸ் சீதாலட்சுமி. நாங்கள் பாட்டிகள் முன்னேற்றக் கழகம் என்று.... ஸாரி... ஐ வோன்ட் டேக் மோர் தென் டு மினிட்ஸ்... நான் அந்தக் கழகத்தின் பிரசிடெண்ட்... ஏதோ எங்களாலான சமூக சேவைகளைச் செய்து வருகிறோம். உங்கள் மாதிரி பெரிய மனிதர்களின் நன்கொடைதான் எங்கள் பணிக்கே அஸ்திவாரம் போன்றது."

அப்புசாமியின் மனம் ஜிங் ஜிங்கென்று ஸ்கிப்பிங் ஆடிக்கொண்டிருந்தது. ஐஸலகும்மா! கெயவிக்கு நம்மை அடையாளம் தெரியலை. அசல் மணவாள முதலியார்னு இவளும் நம்பிவிட்டாள் என்னவோ நன்கொடை மான் மார்க் கொடை என்கிறாளே. ஓகே! கழகத்துக்கு துட்டு

கேட்க வந்திருக்கிறாளே... 'விஷ்ஷ்!' என்று சீட்டி அடிக்க வேண்டும் போலத் தோன்றியது. கட்டுப்படுத்திக்கொண்டு அலட்சியமாகச் சீதாப்பாட்டியை ஒரு தரம் பார்த்தார்.

அவர் தன்னை உட்காரச் சொல்லவேண்டும் என்பதற்காகச் சீதாப்பாட்டி காத்திருந்தாள். ஆனால் அப்புசாமி சொல்லவில்லை.

கால்மேல் காலைத் தூக்கிப் போட்டுக்கொண்டு "ஊம்" என்றார். "நீ என்ன சொன்னே? காதிலேயே விழலையே. கொஞ்சம் உரக்கச்சொல்லு... ஏன் சரியாச் சாப்பிடக்கிப்பிட மாட்டியா வீட்டிலே," என்றார்.

சீதாப்பாட்டிக்கு என்னவோ மாதிரியாகிவிட்டது. நன்கொடைக்கு எத்தனையோ இடத்துக்குப் போயிருக்கிறாள். அவளை யாரும் நீ போட்டதில்லை.

'சரி... சரி. சில பெரிய மனிதர்கள் இப்படித்தான் நாசூக்கு குறைவாக நடந்துகொள்வார்கள். அதை நாம் மைண்ட் செய்யக்கூடாது' என்று எண்ணிக் கொண்டாள். சற்று உரத்த குரலில், "நாங்கள் பாட்டிகள் முன்னேற்றக் கழகம் என்று ஒன்று நடத்தி வருகிறோம். யு மைட் ஹாவ் ஹேர்ட் ஆஃப் இட்" என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே அப்புசாமி கையைப் 'போதும் நிறுத்து' என்பது போலக் காட்டினார்.

"என் இப்படிக் கத்தறே? நான் ஒண்ணும் செவிடில்லே. கொஞ்சம்கூடப் பண்பாடு தெரியாத குடாக்கா இருக்கியேம்மா... வர்ரதோ நன்கொடைக்கு. ஓ என்று இப்படியா கத்தறது? முதல்லே பெரிய மனுஷாள்கிட்டே மரியாதையாகப் பேசக் கத்துக்க..." என்று ஒரு போடுபோட்டார்.

சீதாப்பாட்டிக்கு நாக்கும் உதடும் உலர்ந்துபோயின. 'மை குட்னஸ்... பேசாமல் திரும்பி விடலாமோ! ஆசாமி

சரியான முகடுபோலிருக்கு' என்று கூட எண்ணிக் கொண்டான். அதே சமயம் அப்படித் திரும்புவது தனக்கு ஒரு தோல்வி மாதிரி அவனுக்கு உறுத்தியது. இவரைவிட எத்தனையோ ஸ்மார்ட் நட்ஸை தான் உடைத்ததில்லையா?

அப்புசாமி "உங்க சங்கத்துக்குப் பேரென்ன சொன்னே?" என்றார்.

சீதாப்பாட்டி புன்னகையை வரவழைத்துக் கொண்டு "பாட்டிகள் முன்னேற்றக் கழகம். யு ஸி... நம்ம கன்ட்ரீலே எய்ட் பீபிள் என்ன நினைத்துவிடுகிறார்களென்றால்..."

சூறுக்கிட்டார் அப்புசாமி. "உங்க கழகம் விசித்திரமா இருக்கிறதே. பாட்டிகள் முன்னேற்றக் கழகமா? இந்தக் கெழம் கெண்டுகள் எல்லாம் சேர்ந்து ஒரு கழகம்..."

"யு ஸீ... நாங்கள் அனேக ஸோஷியல் ஸர்வீஸ் செய்கிறோம் அதைவிட வயசானவர்கள் வீட்டிலிருந்து கொண்டு மற்றவர்களுக்கு ஒரு பர்டனா இருக்கக்கூடாது. தே ஷுட் பி எங்கேஜ்ட் ஆல்வேஸ். அதர்வைஸ் ஏதாவது பெட்டி குவாரல்ஸ் வீட்டிலே கிளப்பிக்கொண்டு வீட்டுக்கும் தங்களுக்கும் அமைமதியில்லாமல் அதை விட..."?

சீதாப்பாட்டி கெஞ்சக் கெஞ்ச அப்புசாமியின் மனம் மகிழ்ச்சியால் துள்ளியது. மேலும் சிண்டத் தீர்மானித்தார்.

அப்புசாமி காதைப் பொத்திக் கொண்டார். "ஏம்மா... நீ பாட்டுக்குக் காலட்சேபம் விட்டுக்கினே போறியே? உன் புராணத்தைக் கேட்க எனக்கு நேரமில்லை."

"ஸோ ஸாரி" என்று சீதாப்பாட்டி மன்னிப்புக் கோரினாள். "ஏதோ உங்களாலான டொனேஷனை எங்க கிளப்புக்கு..."

"டொனேஷன்!" அப்புசாமி அலட்சியமாகப் பாட்டியைப் பார்த்தார். "உங்க கிழவிங்க கழகம் ஒரு

கழகமா! தண்டக் கருமாந்திரம்! இளம் பெண்கள் கழகம் னாலும் கண்ணுக்கும் பார்க்கவாவது நன்றாயிருக்கும் உங்க கழகம் பூராப் பூராப் பாட்டிகளுக்காக ஏற்பட்டதா? சகிக்கலை. பேசாமல் உங்க கழகத்தைக் கலைத் துடலாம் . ."

"ஏதோ சேவை . ."

"சேவை?" அப்புசாமி உதாசீனமாகச் சிரித்தார். "ரொம்ப ஓட்டாதேம்மா. . உங்க கழகத்தைப் பற்றி நானும் கேள்விப்பட்டிருக்கிறேன். எவ்வொரு கிழவியும் கார்லேயும் ஸ்கூட்டர்லேயும் வந்து கும்மாளமடிக்கிறது வீட்டையே கவனிக்கிறதில்லை. புருஷனைக் கவனிக்காம சேவையென்ன சேவை? சில கிழவிங்க புருஷனுக்கு கைச்செலவுக்குக் கூடக்காசு தராத கிராதகிங்க. . . உங்களுக்கெல்லாங் ஒரு கழகம். . . அதுவும் முன்னேற்றக் கழகம்; நீங்க முன்னேறுகிறீங்க. . . உங்களைக் கட்டிக் கிட்டவங்களையெல்லாம் பின்னேற்றிடறீங்களே. . நீதான் பிரசிடெண்ட்டாக்கும் பிரசிடெண்ட்! உனக்கு இதே மாதிரி வீடு வீடாகப் போய்ப் பணம் பிராண்டற வேலையாக்கும்? இப்படி ஒரு பேருக்கும் புகழுக்கும் ஆசை. . . ஹா"ம். . . பாட்டிகன்னா. . . ராமா கிருஷ்ணான்னு கோவிலுக்குப் போவாங்க வருவாங்க. . . இப்படியா பஜாரிங்க மாதிரி குதிக்கிறது. . . சே சே!"

சீதாப்பாட்டிக்கு ஜிவு ஜிவு என்று கோபத்தால் காது சிவந்தது. அப்புசாமிக்கோ அந்த கடுகடுப்பைப் பார்க்கப் பார்க்க ஆனந்தமாக இருந்தது. என்னென்ன கேட்கணு மென்று நினைத்துக் கொண்டிருந்தாரோ அதையெல்லாம் கேட்டு தள்ளி விட்டோமென்ற ஆனந்தம்.

"ஸோ ஸாரி சார். . . நான் வந்த வேளை சரியில்லை போலிருக்கு" சீதாப்பாட்டி கிளம்பத் தயாரானாள்.

"இரு இரு... என்னவோ டொனேஷன் டொனேஷன்னே? செக்கை கிழிச்சுத் தர்ரேன். வாங்கித் தொலைச்சிட்டுப் போ..."

சீதாப்பாட்டி 'தாங்க் காட்' என்று மனசுக்குள் சொல்லிக் கொண்டாள். முகம் இழந்த தெம்பை மீண்டும் தக்க வைத்துக் கொண்டு பிரகாசமாகியது. 'இந்தப் பெரிய மனிதர் ஒரு மாதிரியான ஷார்ட் டெம்பர்டு போலிருக்கு! படபடவென்று பேசினாலும்... டொனேஷன் தருகிறார்!

செக் புத்தகத்தை அப்புசாமி பிரித்தார்.

"என்ன, ஒரு ஐம்பதாயிரம் போடட்டுமா?"

சீதாப்பாட்டிக்கு ஆனந்தத்தில் மூச்சே நின்றுவிடும் போலாகிவிட்டது.

நாணத்துடன், "உங்கள் இஷ்டம்... யு ஆர் வெரி ஜெனரஸ்..." என்றாள்.

அப்புசாமி சட்டென்று சீதாப்பாட்டியை பார்த்துக் கண்ணடித்தார். தூக்கிவாரிப் போட்டது பாட்டிக்கு.

"எழுபதாயிரமாவே போடறேன்... செக்கை மாடி ரூம்லே போடலாம்னு நினைக்கிறேன்... ஹிஹி! இங்கே யார் யாரோ இருக்காங்க... என்ன சொல்றே?" என்று ஒருவிதமாகப் பார்த்தவாறு கிசுகிறுத்தார்.

சீதாப்பாட்டிக்கு வியர்த்தது. மணவாள முதலியார் லூஸ் காரெக்டர் என்று லேசுபாசாக கேள்விப் பட்டிருந்தாள். ஆனால் இந்த அளவு மட்டமாகவா!

"என்னம்மா.... யோசிக்கிறே! மாடியில்தான் பேனா இருக்கு. குளுகுளு ரூமாகவும் இருக்கு. ஹிஹி!"

சீதாப்பாட்டி யோசித்துப் பார்த்தாள். இந்த அயோக்யரை டீல் செய்கிற விதத்தில் செய்து அந்த

செக்கைத் தான் சாமர்த்தியமாக அடைய முடியாது
என்ன? பார்த்துவிடுவோம்.

"எஸ். . . . மாடிக்குப் போகலாமே" என்றான்.



# 8

மணவாள முதலியாரின் அறைக்குள் நுழைந்த சீதாப்பாட்டி திடுக்கிட்டாள்.

இந்த அறைக்குத் தான் வந்திருக்கக் கூடாது என்று அவளுக்குத் தோன்றியது. சட்டென்று திரும்பிவிடலாம் என்றுகூட நினைத்தாள்.

ஆனால் அதற்குள் 'லொடக்' என்று ஏஸி ரூமின் ஆடொமாடிக் கதவு தானாகத் தாளிட்டுக் கொண்டது. சீதாப்பாட்டிக்கு நெஞ்சு ஒரு கணம் படபடத்தது.

அப்புசாமி, "வாம்மா, பரவாயில்லை வா, . . . " என்றார்.

அறையைச் சீதாப் பாட்டியின் கண்கள் அருவருப்புடன் நோக்கின.

சுவரில் ஆளுயரத்துக்கு மாட்டியிருந்த 'குளிக்கும் அழகியின்' ஓவியம் அவளையே பார்த்தவாறு குளித்துக் கொண்டிருந்தது.

நிலைக்கண்ணாடி, விதவிதமாக அலங்கார சாதனங்கள், கட்டில், பலவித நளின சிற்பங்கள். மேஜை மீது ஒரு தட்டில் தடிமனான சுருட்டுகள், மதுக் கிண்ணங்கள்.

அறையின் ஏ.ஸி. யந்திரம் ரீங்கரித்துக் கொண்டிருந்தது.

'நாம் வந்த வேளை சரியில்லை' என்று சீதாப்பாட்டி எண்ணிக்கொண்டாள். 'ஆசாமி ஒருகால் ட்ரிங்கில் இருக்கிறாரோ என்னவோ தெரியவில்லை. பார்வை ஒரு தினுசாக இருக்கிறது. நோ நோ... நான் ஒன்றும் பயந்தாங்கொள்ளி அல்ல. ஐ கான் மானேஜ் எனி ஸிசுவேஷன்.' என்று அவள் சொல்லிக்கொண்டாலும் அந்த இடத்திலிருந்து உடனே புறப்பட்டுவிடுவது மேல் என்றே தீர்மானித்தாள்.

கட்டிலில் உட்கார்ந்து ஒரு சுருட்டை எடுத்து இப்படியும் அப்படியும் திரும்பியவாறு உதடுகளில் விஷமப் புன்னகையுடன், சீதாப்பாட்டியைப் பார்த்தவாறிருந்த அப்புசாமி "என்ன இந்த ரூம் குளுகுளுன்னு ஜோரா இல்லே?" என்றார்.

சீதாப்பாட்டி கருக்கென்று "இட் ஈஸ் வெரி கைண்ட் அஃப் யூ சார்." நான் இன்னொரு சமயம் வந்து டொனேஷன் வாங்கிக்கொள்கிறேன்" என்று திரும்பினாள்.

கதவை அவள் திறப்பதற்குள் அப்புசாமி இன்னொரு தரம் கண்ணைச் சிமிட்டினார். "என்ன ரொம்ப அவசரமா? கோபிச்சுக்காதேம்மா, நான் கொஞ்சம் தமாஷ் பேர்வழி... ஹ ஹ' தப்பாய்ப் பழகறதுக்கு... என்னவோ உட்கார்ந்து உங்க கழகத்தைப்பற்றிக் கொஞ்சம் பேசிட்டிருக்கலாம்னா அவசரமாக் கெளம்புறியே கண்ணு."

சீதாப்பாட்டிக்கு அவர் 'கண்ணு' போட்டது உடம்பைக் கிறுவது போன்ற எரிச்சலை ஏற்படுத்தியது.

"ஸாரி, நீங்க ட்ரிங்க்கில் இருக்கிங்க போலிருக்கு. நான் இன்னொரு சமயம் வந்து உங்களை மீட் பண்றேன். தாங்க் யூ."

கதவைச் சட்டென்று திறந்தாள். திறக்க வரவில்லை.

அப்புசாமி எழுந்து மெதுவே பக்கத்தில் வந்தார் சீதாப்பாட்டிக்கு நெஞ்சு படபடத்தது. பனார் என்று அவர் கன்னத்தில் அறை விட அவள் கைகள் தயாராயின.

"நீங்க பிஹேவ் பண்றது சரியாயில்லே... இப்போ கதவைத் திறந்து விடறீங்களா இல்லையா? யு டோன்ட் நோ மி. என்னைப் பற்றி உங்களுக்குத் தெரியாது."

அப்புசாமிக்குச் சீதாப்பாட்டி அப்படிப் பதறியது ஆனந்தமாக இருந்தது.

"என்னம்மா... நான் உன்ன இப்போ உன் கையைப் புடிச்சா இழுத்துட்டேன்? நீ என்ன, நான் கையைப் புடிச்சு இழுக்கற அளவுக்கு ரதி தேவியா? இல்லே... எனக்குத்தான் வேறு பருவச் சிட்டு கிடைக்காதா?"

சீதாப்பாட்டி பல்லை நறநறத்துக் கொண்டாள். "கொஞ்சம் பண்பாட்டோடேயே பேசுங்கள். உங்களை மாதிரி இருக்கிற பெரிய மனிதர்கள் டொனேஷன் கொடுத்தால்கூட அது எங்கள் கழகத்துக்குத் தேவை இல்லை. திறங்க கதவை..."

அப்புசாமி இடுப்பில் கை வைத்துக் கொண்டு "திறக்கா விட்டால்?" என்றார் தோரணையுடன்.

சீதாப்பாட்டிக்குக் கோபத்தால் முகம் மேலும் சிவப்பேறியது. வெடுக்கென்று அவர் கையிலிருந்து சாவியை எதிர்பாராத விதமாகத் தட்டினாள். அது கீழே விழுந்தது.

வினாடி நேரத்தில் எடுத்துப் பதட்டமும் பரபரப்புமாகச் சாவியைப் போட்டுத் திறந்து கொண்டு தடதடவென்று படி இறங்கினாள். அவளது கார் சீறிக் கொண்டு கிளம்பியது. மிஸ்டர் முதலியார், யூ டோன்ட் நோ திஸ் சீதா.... உங்களுக்கு நான் யார் என்று பாடம் கற்பிக்கிறேன். உங்களுக்குக் கற்பிக்கிற அந்த லெஸன்

உங்கள் மாதிரி பணக்காரப் போர்வையில் அக்கிரமம் செய்யும் அத்தனை இம்மாரல் ரெச்சஸ்"க்கும் ஒரு லெஸனாக அமையப்போகிறது.

சீதாப்பாட்டி அந்தண்டை போனதும் அப்புசாமி சோபாவில் உட்கார்ந்து விழுந்து விழுந்து, எழுந்து எழுந்து ரசித்துச் சிரித்தார்.

'அடி சீதே! என்னமா உன்னைப் பயப்படுத்தி அலற அடிச்சுட்டேன் பார்த்தியா? ஹ ஹ! எப்படி நடுங்கியது அந்தக் கை சாவியைப் போட்டுத் திறக்கிறதுக்குள்ளே. எடுத்தாளே ஓட்டம். . . எப்படிப்பட்ட ஓட்டம்!

அரைபிளேடிடம் உடனே தனது மகத்தான வெற்றியைச் சொல்லிக்கொள்ள அவருக்குத் துடிப்பா யிருந்தது.

வெற்றிக் களிப்பில் வேகமாக கீழே இறங்கி வந்தார். கிழக்குப் பக்கத்து ஜன்னல் அருகே மறைந்திருந்த அரை பிளேடு, நீண்ட நேரம் ஒரே இடத்திலிருந்ததால் போரடித்துப் போனவனாக ஒரு சாயா அடித்துவர வெளியே புறப்பட்டு விட்ட விஷயமோ, அவன் போய் டீ சாப்பிட்ட கடையில், மூர்மார்க்கெட்டிலிருந்தே அவனைக் குறிவைத்து நழுவவிட்டுவிட்ட போலீஸ்காரர் ஒருத்தர் மஃப்டியில் டீ சாப்பிட்டுக் கொண்டிருந்தவர், கழுகுப் பாய்ச்சலாக அவன்மீது பாய்ந்து, டேய் சோமாரி. . . எனக்கா தண்ணி காட்டிட்டு வந்திட்டே. . . " என்று ஸ்டேஷனுக்குத் தள்ளிப் போய்விட்டார் என்பதோ அப்புசாமிக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை.

"ஏ அரை!" என்றார் ஆவலுடன் ஜன்னலருகே சென்று - வெற்றி மதர்ப்பில் நாய் இருப்பதை மறந்து, மறந்ததோடல்லாமல் - அதன் வாலை லேசாக மிதித்து விட்டார்.

கட்டிப்போட்டிருந்த ஜூடோ விருட்டென்று எழுந்து அவரைப் பார்த்து "ர்ர்ர். . ." என்றது.

அப்புசாமிக்குச் சர்வ அவயங்களும் நடுங்கின. ஜூடோவின் வாலை மிதித்ததும் ஒரு தன்மானச் சிங்கத்தின் வாலைப் பிடித்து இழுப்பதும் ஏறக்குறைய ஒரேமாதிரியான செய்கைதான் வால் மிதிபட்டதும் ஜூடோவின் கண்கள் செக்கச் செவேலென்று நெருப்புத் துண்டுகளாகி, உடல் முழுவதும் எரிவது போன்ற ஓர் உணர்ச்சி அதற்கு ஏற்பட்டது அந்த உணர்ச்சி இன்று நேற்றல்ல - அதனுடைய பரம்பரை ரத்தத்திலேயே ஊறித் தலைமுறை தலைமுறையாக வரும் ரோஷ உணர்ச்சியாகும்.

ஆல்ஸஸ் ஆல்ஸஸ் என்றொரு மாநிலம் வடகிழக்குப் பிரான்ஸில் இருந்து வருவது அனைவருக்கும் தெரிந்திருக்கலாம். ஜெர்மனியை ஒட்டிய இந்த சுமார் ஐயாயிரத்து அறுநூறு சதுரமைலைக் கொண்ட குட்டி ராஜ்யம் பந்து போல ஜெர்மனிக்கும் பிரான்சுக்கும் இடையே பல முறை கைமாறியிருக்கிறது. என்றாலும் ஆல்சஸின் பரம்பரையான ரோஷம் அந்த நாட்டின் ஒவ்வொரு குடிமகனிடமும் குடிக்காத மகனிடமும் ரத்தத்தில் ஓடிக் கொண்டிருந்தது. அவர்களிடம் மட்டும்மல்ல. அந்தத் தேசத்திலிருந்த சில பிராணிகளின் ரத்தத்திலும், முக்கியமாக அல்சேஷன் என்ற நாய் இனத்திலும் ஓடிக்கொண்டிருந்தது.

அப்புசாமியை ஜுடோ பார்த்தது. 'இவன் நம் வாலை மிதித்தான். வாலை மிதிப்பவன் எவனாயிருந்தாலும் எஜமானின் விரோதி. அவன் தொடையைக் கிழித்து, முடிந்தால் குரல் வளையைக் கவ்விக் குதற வேண்டியது உன் கடமை. பொங்கி எழு! உன்னைப் பிணித்திருப்பது ஒரு சாதாரணச் சங்கிலி. மகனே அறுத்து எறி. கடமையைச் செய்!'

ஜூடோவின் ரத்தம் ஜிவுஜிவு என்று கொதித்தது.

சங்கிலியை ஒரே இழுப்பு. படீரென்று அறுந்தது.

தேர்தலில் ஓட்டுச் சிதறாமல் நேரடியான ஒண்டிக்கு ஒண்டி போட்டி போல அப்புசாமியும் ஜூடோவும் எதிர் எதிரே.

'வாய்யா! போலி எஜமானரே! சட்டை பாண்ட் போட்டுவிட்டாயானால் என் எஜமானர் ஆகி விடுவாயா?'

அப்புசாமிக்குக் கால் நடுங்கியது. "மு... மு... முனி... இ... து இது அறுக் அறுத்..."

'சீ பேசாதய்யா. திருட்டு வேலை பண்ண வந்திருக்கேயே நீ? மோப்பம் சொல்கிறது. ஒண்ணு... ரெண்டு... மூணு... எண்ணறேன். ஓடிப் போய்விடு மரியாதையாக.'

அப்புசாமி நிராயுத பாணியாக நிற்பது நல்லதல்ல என்று எண்ணி அறியாமையால் அருகிலிருந்த குடையை எடுத்தார்.

ஜூடோ சிரித்தது குரூரமாக. ஜூடோ கொஞ்ச நாள் தேவரிடம் இருந்து ஸ்டண்ட் படங்களில் நடிப்பதற்காகப் பிரமாதமாகப் பயிற்சி பெற்றது என்பது அப்புசாமிக்குத் தெரியாது.

பயிற்சி முடிந்த சமயம் தேவர் ஒருநாள் அலட்சியமாக 'அந்த நாயைக் கூட்டி வா' என்று ஓர் ஆளிடம் சொன்னதைக் கேட்டதும், அதற்கும் ரோஷம் வந்து செட்டை விட்டு உடனடியாக வெளியேறிவிட்டது. மேற்கொண்டு டிரெய்னர் மூலம் பேச்சு வார்த்தை நடத்தியும் ஜூடோ ஒத்துழைக்கவில்லை. டிரெய்னர் அதை மணவாள முதலியாருக்கு விற்றுவிட்டார்.

அப்புசாமி குடையை ஆட்டினார். "ச்! போ! உதைப்பேன்! டேய் முனிப்பா! எங்கேடா தொலைஞ்சே!"

முனியப்பன் எப்போதும் நாயை குளிப்பாட்டிய வுடன் தானும் குளிக்கப் போய்விடுவான். அவுட்ஹவுஸ் பாத்ரூம் தள்ளியிருந்ததால் அப்புசாமியின் கட்டளை அவன் காதில் விழவில்லை. ஜூடோ சங்கிலியை அவிழ்த்துக் கொண்டது என்பது அவனுக்குத் தெரியாது.

ஜூடோ ருசி பார்க்குமுன் அவரை முகர்ந்து பார்த்தது.

"அய்யேங்!" என்றவாறு அப்புசாமி சோபா மீது ஏறி நின்றுகொண்டு குடையால் அதன் கண்ணைப் பார்த்துக் குத்தப் பார்த்தார். கண்ணைக் குத்திவிட்டால் அது கண் டாக்டர் வீட்டுக்குப் போய் மருந்து போட்டுக்கொண்டு வருவதற்குள் தான் தப்பி விடலாமில்லையா?

ஜூடோ அனாயாசமாக ஒரு காலை உயர்த்தி அந்தக் குடையை வளைத்து ஓர் இழுப்பு இழுத்தது.

அப்புசாமி வெட வெடவென்று நடுங்கினார். கையிலே ஏதாவது மிளகாய்ப் பொடி கிடைக்காதா என்று தவித்தார். "ஜூடோ! சமர்த்து ஜூடோ!" என்று கொஞ்சிப் பார்த்தார்.

"லொள்!" என்று வெண்கலக் குரலில் குரைத்த ஜூடோ சோபாவில் ஜிங்கென்று ஏறி அப்புசாமியின் காலைக்கபக்கென்று ஒரு கவ்வு கவ்வியது. சந்தேகத்துக்கு எதற்கும் கொஞ்சம் கடித்துப் பார்ப்போமா எஜமான் தானா என்று.

"ஐயாங்! கால்! கால்! முனி... முனியப்பா!" என்றவாறு அப்புசாமி சோபாவிலிருந்து குதித்தார். தாவினார் ஜன்னலுக்கு.

டார். சட்டையில் ஒரு பிராண்டு பிராண்டியது.

முதுகை நெளித்துக்கொண்டு "மு... மு... முனியா!" என்றவாறு மாடிப்படி ஏறி ஓடினார் அப்புசாமி.

மாடி அறைக்குள் நுழைந்து கதவைத் தடாலென்று சாத்திக் கொண்டார்.

அம்மாடி! பிழைத்தோம்!

"ர்ர்ர்ர்..."

உறுமல் அப்புசாமியைத் திகைக்க வைத்தது. அவர் வாசல் கதவு வழியே உள்ளே நுழையுமுன் அது வேறு ஒரு குறுக்கு வழியில் எகிறிக் குதித்து, ஜன்னல் வழியே பின்புறமாக உள்ளே வந்து அவருக்காகப் பற்களுடன் கூடிய விதிபோல் காத்திருந்தது.

அப்புசாமி "ஹய்யோ!" என்றார்.

ஜூடோ வாலை ஆட்டிக்கொண்டு அவர் குரல் வளைக்குக் குறிபார்த்தது. அதன் காதில் 'எஜமான் விசுவாசம்... எஜமான் விசுவாசம்!' என்று முன்னோர்களின் பேரிரைச்சல் கேட்டுக் கொண்டிருந்தது.

எங்க எஜமானரின் இடத்தில் வந்து அவர் மாதிரியே நடிக்கிறாயா? நீ யாரை வேண்டுமானாலும் ஏமாற்றலாம். என்னை ஏமாற்ற முடியாது.

ஜூடோ குறிபார்த்தது. அப்புசாமி சரேலென்று ஜன்னலுக்குத் தாவ ஜூடோ தொடர்ந்தது.

அப்புசாமி மேலே தாமதிப்பது காலை இழக்கும் வாய்ப்பை நெருங்குவது போலாகும் என்று தீர்மானித்து, ஓர் உயர்ந்த வேலை செய்தார். ஜிங்கென்று ஜன்னலிலிருந்து ஓர் எழும்பு எழும்பி மேலிருந்த மின்சார விசிறியைப் பற்றிக் கொண்டார்.

கூரிய மின்சார விசிறியின் பிளேடு அப்புசாமியின் கையைப் பதம் பார்த்துக் கொண்டிருக்க -

ஜூடோ சாவகாசமாக விசிறியின் ஸ்விட்ச் போர்டு அருகே சென்றது.

ரெகுலேட்டரைத் திருப்பலாமா?

கீழே ஒரு பட்டன் இருக்கிறதே.

ஆமாம். இதையும் தட்டலாம். எஜமானர் இதைத் தான் போடுவார். ஜூடோ காலை உயர்த்தி மின்சார விசிறியைச் சுழலவிட்டது. அப்புசாமி அலறினார்.



# 9

"காசா? அப்பவே கொடுத்திட்டேனே..." என்று சின்ன வயசில் அப்புசாமி ஒரு ஞாபக மறதிக் குடைராட்டினக்காரனிடம் டபாய்த்து விட்டு, மேலும் பதினைந்து ஓசி சுற்றுகள் சுற்றியதைத் நினைத்துக் கொண்டார். 'சாதாரணமாகத் தெய்வம் நின்று கொல்லும் என்பார்களே இப்படி நிற்காமல் சுற்று சுற்றென்று சுற்றிக் கொல்லுகிறதே' என்று மின் விசிறியில் வட்டமடித்துக் கொண்டே நினைத்துக் கொண்டார்.

ஜூடோவுக்கு வேறு விதமாகத் தோன்றியது. 'அடே போலி எஜமா! நீ கைதேர்ந்த கேடிதான். இத்தனை சுற்றுச் சுற்றியும் கையை விடாமல் உலுக்கலுக்குத் தப்பிய புளியம் பழம் போல் சாமர்த்தியமாக ஒட்டிக் கொண்டிருக்கிறாயே... என் கிட்டேயா உன் சாமர்த்தியத்தைக் காட்டுகிறே? ரெகுலேட்டரை 'ஃபுல்'லுக்குத் திருப்பி உன்னை விழவைக்க எனக்குத் தெரியாது என்று நினைத்துவிட்டாயா?'

ஜூடோ மின் விசிறியின் ரெகுலேட்டரை உச்சத்துக்குத் திருப்பியது.

அப்புசாமியின் உடல் பளுவைத் தாங்காமல், ஓவர்லோடு ஏறிய பல்லவன் மாதிரி ஒரு பக்கமாக ஏற்கனவே சாய்ந்து சுழன்று கொண்டிருந்த மின்விசிறிக்குப் பொறுக்கவில்லை. அவரை ஓர் உதறல் உதறி வீசி எறிந்தது.

அப்புசாமி, 'லேண்டிங்' விண்கலம் போலக் கீழே கோணாமாணாவென்று விழுந்து வைத்தார்.

கபகபவென்று கையும் உடம்பும் எரிந்தன. அனேகமாகப் பிரதான எலும்புகளனைத்தும் நொறுங்கி விட்டதாக ஒரு சமாச்சார் செய்தி அவருக்கு அறிவித்தது. அது மேலும் தெரிவித்ததாவது - ஜூடோ அவரைப் பரிசோதிக்க இதோ அவரை நோக்கி வந்துகொண்டிருக்கிறது.

அப்புசாமி எழுந்திருந்து வேறு பத்திரமான இடம் தேடும் உடல் நிலையிலும் மனோநிலையிலும் இல்லை.

"நா... நா... நாம்... நாய்" என்று மட்டுமே அவரா முடிந்தது.

ஜூடோவின் கண்கள் ரத்தச் சிவப்பாயின.

'நீ கெட்ட கேட்டுக்கு உனக்கு எஜமானனுடைய பாண்ட் வேறா?' லபக்கென்று அப்புசாமியின் பாண்ட்டை ஒரு கவ்வுக்கவ்வி இழுத்தது.

"ஆ! முனியா!"

அப்புசாமி கடைசியாக உச்சரித்த வார்த்தைகள் இந்த இரண்டுதான்.

இடது காதுக்குள் புகுந்து கொண்டுவிட்ட ஒரு நீர்த் திவலையை உடைத்து வெளியேற்றக் கூடிய ஒரு கருவியாக அப்போதுதான் துண்டின் ஒரு முனையை எடுத்துத் திரித்துக் கூராக்கி உருவாக்கிக் கொண்டிருந்தான் முனியப்பன்.

அப்புசாமியின் பாண்ட்டை ஒரு பக்கம் கவ்வியிழுத்துப் பாதி மானபங்கப்படுத்திவிட்ட ஜூடோவுக்கு அவர் அசையாமல் மூச்சுப் பேச்சற்று இருந்தது ஒரு திடீர்ப் பொறுப்புணர்ச்சியைத் தந்தது.

இது தானாக ஏற்பட்ட மரணமே தவிர தன்மேல் கொலைக் குற்றம் எதும் வந்துவிடக்கூடாது என்று அஞ்சியது போல் ஸ்தலத்தை விட்டு மறைந்துவிட்டது அது.

"எஜமான்! எஜமான்!" ஆட்கள் ஓடி வந்து அவரைத் தூக்கினர்.

அப்புசாமி விழித்துப் பார்த்தார்.

"ஐயோ! எஜமான்! உங்களை யாரோ கொலை பண்ணிட்டாங்களே?" பதட்டத்தில் முனியப்பன் புலம்பினான்.

அப்புசாமி 'ஊஹும்... என்னை யாரும் கொலை செய்யவில்லை' என்பதுபோல கையை ஆட்டினார்.

சமையல்கார ஐயாவு முனியப்பனை அதட்டினார். நிலைமையை உடனடியாகத் தன் வசப்படுத்திக் கொண்டு சுறுசுறுப்பாக இயக்கினார். "டே! உன் ஒப்பாரியை அந்தப் பக்கம் போய் வைடா... சட்டுனு டாக்டருக்குப் போன் பண்ணு... அப்படியே போலீசுக்கும் பண்ணு.

அப்புசாமியின் காதில் 'போலீஸ்' என்ற வார்த்தை விழுந்ததும் அவருக்கு ஒரு புதுச்சுறு சுறுப்பு ஏற்பட்டது. கையைக் கையை ஆட்டி "வேண்டாம்... வேண்டாம்..." என்றார்.

சமையல்கார ஐயாவு புலம்பினான். "எஜமான்! நீங்க ஏன் எஜமான் இன்னைக்குக் கிளப்பிலேருந்து சீக்கிரம் திரும்பிட்டீங்க. வழக்கமா ஆறு மணிக்குத்தானே திரும்புவீங்க..."

அப்புசாமிக்குத் தோள் கொடுத்து அவரைத் தாங்கிக் கொண்டு மெதுவாக சோபாவில் படுக்க வைத்தார்.

அவ்வளவு எரிச்சலுக்கு நடுவில், அப்புசாமிக்கு அரைபிளேடு மேலும் முக்கால் பிளேடு மேலும் ஆத்திரமாக வந்தது. 'நாம் சேரக்கூடாத ஒரு கூட்டு அணியில் சேர்ந்து விட்டோமோ... அவனுங்க நம்மை மாட்டி விட்டுட்டு கில்லாடியா ஒதுங்கிக்கினாங்களா?"

எப்படியாவது நொண்டியடித்துக் கொண்டாவது இந்த இடத்திலிருந்து உடனடியாக ஓடிப் போய்விட வேண்டும் என்று அவருக்குத் தோன்றிவிட்டது.

தனக்குத்தானே ஒரு சிலிர்ப்பையும் உற்சாகத்தையும் ஏற்படுத்திக் கொண்டு, "ஹ ஹ!" என்று சிரித்தார். "அட! ஒண்ணுமில்லேப்பா! கொள்ளைகாரனும் வரலை... திருடனும் வரலை... சும்மா... நம்ம ஜூபோ... ஹிஹி! அதும்கூட விளையாடினேனா... அது கொஞ்சம் அதிகமா விளையாடி... ஒருகால் அதுக்குச் சோறு கீறு இன்னிக்குப் போடலியோ என்னவோ... நான் இப்படியே புறப்பட்டுப் போறேன்."

"எஜமான்!" பதறினார் ஐயாவு. "நீங்க போறீங்களா? எங்கே? அப்புசாமிக்கு அப்புறம்தான் ஞாபகம் வந்தது - தான் மணவாள முதலியார் என்பது. 'ஆமாம், ஆமாம், நான் இங்கேதான் இருக்கணும். நாசமாய்ப் போகிற அரைபிளேடு!"

"எஜமான்!" என்றார் ஐயாவு. "அரைபிளேடுங்களா!"

"ஹிஹி! ஆமாம்! அரை பிளேடு! கீழே போட்டிருக்காங்க போலிருக்கு யாரோ... அதுவேற காலிலே குத்தி... சரி... சரி... என்னை நான் பார்த்துக்கறேன். டாக்டர், போலீஸ், யாரும் வேண்டாம்... உங்க வேலையைப் பாருங்க. அந்த நாசமாய்ப் போகிற நாயை மட்டும் கட்டி வையுங்க. கொஞ்சம் கெட்டிச் சங்கிலியில்."

அப்புசாமி அவசர அவசரமாக சமையல்காரரை அனுப்பிவிட்டுக் கதவைத் தாளிட்டுக் கொண்டார். செய்ய வேண்டியது - நைஸாக ஜன்னல் பக்கம் ஒரு கயிறை விட்டுக் கீழே இறங்கிவிட வேண்டும். கயிறு கிடைக்கலையானால் ராஜகுமாரிகள் மாதிரி புடவைகிடவை இருந்தாலும்... மட அப்பு! புடவை எங்கேடா இருக்கும்?

அதோ ஸ்கிரீன் துணி! ஷேக்குடைய அரண்மனைச் சுவரிலெல்லாம் சர்ரென்று ஏறவில்லையா, இறங்க வில்லையா? எடு ஸ்கிரீன் துணியை. போடு முடியை. துணியே துணை.

அப்புசாமிக்குத் தைரியமில்லை. கையெல்லாம் மின்சார விசிறி ஏற்படுத்தியிருந்த காயம் சுருசுருவென்று எரிந்தது. தொங்கி இறங்குகிற அளவுக்குத் தசை ப்ளஸ் எலும்பு ஸ்டெடியாக இருப்பதாக அவருக்குத் தோன்ற வில்லை.

அத்துடன் அவசரமாக இதயம் தந்தி அடித்தது - 'இறங்குவதற்கு முன் கொஞ்சம் அந்தப் படுக்கையில் படுத்துச் சிரமபரிகாரம் செய்து கொண்டு புறப்படலாம். நான் ரொம்பப் படபடப்பாக இருக்கிறேன். சிறிது ஆகாரம் செய்துகொண்டு புறப்படுவது நல்லது.'

அப்புசாமி அறையை ஒரு நோட்டம் விட்டார். குளிர் பதனப் பெட்டி வாவா என்று அழைத்தது. போய்ப் பெட்டியைத் திறந்தார், ஆப்பிள் .. திராட்சை. , கூல்டிரிங்ஸ் .. லஸ்ஸி தயிர் . ரொட்டி .. கேக்.

வாரே வா. அய்யா மணவாள மொதலியார்! இப்போ சாப்பிட்டுக் கிளம்பறேனே. இதுதான் இந்த பங்களாவிலே நான் சாப்பிடுகிற கடைசி சாப்பாடு. உம்ம திசைக்கு இனிமேல் பெரிய கும்பிடு."

அப்புசாமி ரொட்டியையும் வெண்ணெயையும் தோய்த்து எடுத்துக் கபகபவென்று உள்ளே தள்ளினார். ஆப்பிளில் சிலதை முடித்தார்.

ஒரு மெல்லிய ஏப்பம் விட்டபோது அறையிலிருந்த குஷன் படுக்கை அவர் கண்ணில் பட்டது.

போய் விழுந்து ஒரு புரள் புரண்டு விட்டுக் கிளம்பலாம் என்று எண்ணி உள்ளே போய்ப் படுக்கையில்

படுத்தார். ஆகா.... என்ன துரை மெத்தை.... என்ன தலையணை....

அப்புசாமி மீது சொத்தென்று ஒரு கை விழுந்தது. தன் கையே அப்படி ஓரமாகி விழுந்திருக்குமோ என்று நினைத்து 'அடசே! எப்படித் தூக்கி வாரிப்போட்டு விட்டது!' என்று சிரித்துக்கொண்டு எண்ணிப் பார்த்தார். மூன்று கை இருந்தது.

ஒருகால் பதட்டத்தில் குழப்பமோ என்று ஒவ்வொரு கையாகத் தொட்டுப் பார்த்தார். இரண்டு கைகளைத் தொட்டுப் பார்த்தபோது அவருக்கு ஸ்பரிச உணர்வு இருந்தது. மூன்றாவது கையைத் தொட்டபோது அவருக்கு உணர்வு ஏற்படவில்லை. ஆகவே இது வேறு யாருடைய கையாகவோதான் இருக்கவேண்டும் என்று நிர்ணயித்து மூன்றாம் கைவழியே பார்வையைத் தொடர்ந்தார். கட்டிலில் அவருக்கு மிக அருகே அந்தக் கை போய் ஓர் உடம்புடன் இணைந்தது.

ஆ! எந்தப் பாவியோ இங்கே படுத்திருக்காளே எனக்குத் தெரியாமல் போச்சே!

அலறி அடித்துக் கொண்டு எழுந்தார். அப்புறம் தான் அந்த உருவத்தை சரியாகப் பார்த்தார்.

"நான் ஒரு சரியான பைத்தியம்!" என்று முணுமுணுத்துக் கொண்டார். "ஹைஹ! நிலைக்கண்ணாடியிலே தெரிஞ்சிருக்கு என் உருவம்.. இதைப் பார்த்து... ஹைஹை!"

மறுபடியும் கட்டிலில் உட்கார்ந்தார்.

ஆனால் பக்கத்தில் தெரிந்த உருவம் எழுந்து உட்காரவில்லை. அது படுத்துக் கொண்டே அவரைப் பார்த்து ஒரு விதமாகச் சிரித்தவாறிருந்தது.

'ஒண்ணு' என்று ஒரு விரலைக் காட்டினார்.

படுத்திருந்த உருவம் ஒன்னு என்று காட்டவில்லை.

நைஸாக அதைத் தொட்டுப் பார்த்தார். என்ன ஆச்சரியம்! தொட முடிகிறது. சொய்ங் சொய்ங்கென்று கை கிழுப்பஞ்சாட்டம் மெத்து மெத்தென்கிறது.

கன்னத்தைத் தொட்டார்.

அந்த உருவம் சிரித்துக் கொண்டிருந்தது.

'பளார்' என்று ஓர் அறைவிட்டார்.

"அடி! நன்றாக அடி!" அந்த உருவம் கன்னத்தைத் துடைத்துக் கொண்டு எழுந்து உட்காருகிறது. மேலும் பேசுகிறது.

"இன்னும் அடி? ஏன் நிறுத்திவிட்டாய்? என்னால் இந்தப் பழக்கத்தை நிறுத்த முடியவில்லை."

அப்புசாமி விழித்தார். அவரைப் போலவே இருந்த உருவம் இப்போது அவர் கைகளைப் பற்றிக்கொண் டிருந்தது.

"பேசு! அடி! நிறையப் பேசு! எனக்கு உன் புத்திமதி தேவை! நீ கண்டிப்பாக இரு! என்னைத் திருத்து."

"திருத்தறதா? சார், நீங்க நீங்க... என்னை மாதிரியே இருக்கீங்க... யார் சார் நீங்க? ஐயய்யோ...." என்று அப்புசாமிக்குத் திடீரென்று ஒரு ஞானோதயம் பிறந்தது. 'ஒருகால்... ஒருகால் மணவாள முதலியார் இவர்தானோ? ஆனால் கிளப்புக்கு அல்லவா போயிருந்தார்? எப்படி வந்திருப்பார்? ஏன் இப்படித் தன்னை அடிக்கச் சொல்கிறார் திட்டச் சொல்கிறார்?"

"ஹிஹி! நீங்க?" என்றார் அப்புசாமி. "நீங்க... வந்து அந்த... இந்த மணவாள முதலியாரேரா?"

"நான் மணவாள முதலியாரேதான்... சந்தேகமே வேண்டாம். கோமளேஸ்வர மணவாள முதலியார்..."

"ஐயோ மணவாள முதலியார் நீங்களா?"

"ஆமாம் . . . கேள் இன்னும் நூறு தடவை கேள்! மணவாள முதலியாரா, நீங்களா? என்று கேளப்பா இன்னும் கேள். கேள் கேட்டுக் கொண்டேயிரு! ஊஊம் . . ." மணவாள முதலியார் பெருமூச்சு விட்டார். அழுதார் சிரித்தார். மீண்டும் பெருமூச்சு விட்டார். கோபப்பட்டார்.

"வேண்டாம், என்னைத் தடுக்காதே . . . எனக்கு இந்த மாத்திரைதான் உயிர்! ஆயிரம் எல்எஸ்டிக்குச் சமம். பெத்தடின் ஒரு கஷ்டம்! இந்த மாத்திரைதான் சொகம்! சிங்கப்பூரில் மட்டுமே கிடைக்கும் . . ."

"ஐயோ . . . உளர்றீங்களே என்னவோ?"

"என் மனச்சாட்சியே! நீ இன்னிக்கு என்னென்ன கேள்வி என்னைக்கேட்கணுமோ அதெல்லாம் கேள். எப்பவும் நீ ரெண்டு மூணா வருவே? இன்னைக்கு ஒரே ஒரு மனச்சாட்சிதான் வந்திருக்கியா?"

அப்புசாமி திருதிருவென்று விழித்தார். ஆசாமி ஃபுல் போதையில் இருக்கிறாரோ? தன் உருவத்தை மனச் சாட்சின்னு நினைத்துக் கொண்டு பேசுகிறாரோ?

ஒரு குரல் அப்புசாமியிடமிருந்து கூவியது 'அப்பு, இவர் போதையில் இருக்கிறார். நீ ஓடிப்பூடு!'

அப்புசாமி, "ஹிஹி! நான் போறேன்," என்றார்.

மணவாள முதலியார் அப்புசாமியின் தோளில் அழுத்தமாகக் கையைப் போட்டுக் கொண்டார். "என் மனச்சாட்சி! என் மேலே உனக்குக் கோபமா? 'என்னடா நாம்ம எத்தனை வருஷமா இந்த எல்எஸ்டி பழக்கத்தை விடச் சொல்லியும் இவன் விடலையேன்னு . . . அதுக்குன்னு கோபிச்சிட்டுப் போயிடறதா? அது முடியாதே. மனுஷனை விட்டு மனச்சாட்சி எப்படிப் போக முடியும்!

அந்தரங்கமான இந்த பெட்ரூமிலேதானே என் மனச்சாட்சி என் கூடப் பேசும். இப்ப நீ எப்படிப் போகலாம். இது உன் இடம். இது உன் படுக்கை. நீ இரு. நான் போயிடறேன்..."

அப்புசாமிக்குப் பகீரென்றது. தன்னை ஆசாமி விடமாட்டான் போலிருக்கே...

மணவாள முதலியாரின் கைப்பிடியிலிருந்த அப்புசாமிக்குக் குழப்பமாக இருந்தது - தேர்தல் சமயத்தில் சிலபேருக்குக் குழம்புமே - அந்தமாதிரி.

இந்த மணவாள முதலியார் அசலாகத்தான் போதையிலே இருக்கிறாரா? அல்லது தன்னைப் பிடித்துப் போலீஸிலே மாட்டிவிட இப்படிக் குடிகாரர் மாதிரி நடித்துக் கொண்டு கையை விடாமல் சத்தாய்க்கிறாரா?

கையை இழுத்துக் கொண்டு விடுவித்துக் கொள்ளப் பார்த்தார். கையோடு முதலியாரும் கூடவே குயிங்கம் மாதிரி ஒட்டிக்கொண்டு வந்தார்.

'அட மட அப்பு! நாவடக்கம் வேண்டாமா? பழம், பிஸ்கெட் என்று தின்று தொலைத்ததால் அல்லவா உடம்பு உண்ட களைப்பில் கட்டிலில் படுக்கச் சொல்லி இப்படி மாட்டிக் கொள்ள வைத்தது. எலிக்கும் உனக்கும் அப்புறம் என்ன வித்தியாசம்? அது கூண்டிலே மசால் வடைக்குச் சிக்கிக்குது நீ ஆப்பிள் பழத்துக்கும் ஐஸ்க்ரீமுக்கும் மாட்டிக்கிறே.'

"சே! நான் ஒரு மனுஷனா? பெருந் தீனித் தடியன்!" என்று வாய் விட்டு வருந்தியவாறு தனக்குத்தானே பட்டம் கொடுத்துக் கொண்டார்.

மணவாள முதலியாரின் போதைக் காதில் இந்த வாக்கியம் விழுந்ததோ இல்லையோ - அவர் கேவிக் கேவி

அழ ஆரம்பித்து விட்டார் - தன்னைத் தான் மனச்சாட்சி திட்டுகிறது என்று.

"நாய மனச்சாட்சி! என்னை மன்னிச்சிடு. நான் பண்ணினதெல்லாம் தப்பு. இன்மேல் தப்புப் பண்ண மாட்டேன். . . அந்த சகுந்தலா வரதன். . . அது கூட வேணாம் மனச் சாட்சி! உனக்கு வேணும்கிற ரூபாயைத் தர்றேன்."

தன் சட்டைப் பையிலிருந்து நூறு ரூபாய் எடுத்துத் தந்தார் முதலியார்.

அப்புசாமி குதூகலத்துடன் கீழே இறங்கினார்.

'அரைபிளேடு என்கிற பாவி எங்கே தொலைந்தான்?' என்று நாலாபக்கமும் பார்வையைத் திருப்பிப் பார்த்தார். அவன் ஒளிந்திருந்த ஜன்னல் அருகே இரண்டொரு பீடித்துண்டுகள் மட்டுமே இருந்தன.

'பாவம், எவ்வளவு நேரம்தான் அவனும் காத்திட்டு இருப்பான்? போய்விட்டான் போலிருக்கு!' என்று எண்ணியவாறு வேகமாக நடந்தார்.

கொஞ்ச தூரம் நடந்திருப்பார். "சார்! சார்! இன்னா சார்!"

திரும்பிப் பார்த்தார். அரைபிளேடு முக்கால்பிளேடு கோஷ்டியைச் சேர்ந்த 'நட்டு' என்ற பொடி ரௌடி அவர் பின்னாடியே வந்தான்.

அப்புசாமியின் கிழிந்த பாண்ட்டையும் சட்டையையும் பார்த்த அவனுக்கு ஒன்றும் விளங்க வில்லை. பதறியவாறே "இன்னா தொரே! சீமான் கணக்கா டிரஸ் பண்ணி அனுப்பினோம் குடுகுடுப்பைக் காரனாட்டம் வந்து கீரே? பெரிய வாத்யாரு எதுனா டேஞ்சரான்னு கண்டுகினு வரச்சொன்னாரு!"

"ஓகோ, முக்கால் பிளேடு அண்ணாச்சி கண்டுகினு வாச்சொன்னாரா? ஏன்டா நட்டு அந்த மொதலியார் கிளப்புலேயே ஆறு மணி வரை இருப்பார், அது இதுன்னு சொன்னீங்க, ஆனால் அவரை உடனே அனுப்பிச்சு வெச்சுட்டீங்க?"

"மிஷ்டேக்காப் பூடுச்சு வாத்தியாரே. அவரு சீக்கிரம் கௌம்பிடக் கூடாதுன்னு கிளப் வாசலிலிருந்த அவர் வண்டியிலே காத்தைப் பிடிங்கி விட்டிருந்தேன். அந்த ஆளு ஒரு டாக்ஸி புடிச்சிகினு திடீர்னு பொறப் பட்டுட்டான். . . நீங்களும் அரைபிளேடும் எதனா டேஞ்சர்லே மாட்டிக்கிட்டீங்களோன்னு கண்டுகினு வாடான்னுதான் வாத்யார் அனுப்பிச்சார். . . சரி, சரி சாவி எங்கே வாத்யாரே. . ."

"சாவியே? போடா போக்கத்தவனே; உசிரே போகத் தெரிஞ்சுது. . . அங்கே ஒரு நாயிருக்குதுன்னு எந்தக் கஸ்மாலமாவது சொன்னீங்களாடா? அது பொணப் புடுங்காப் புடுங்கி. . காலிலே பார்த்தியா?"

"ஆமா சார்! ரத்தம்!"

"சரி, சரி, இந்த அஞ்சு ரூபாயைக் கொண்டுபோய் உங்க பெரிய வாத்யாரில்லை பெரிய வாத்யார்! முக்கால் பிளேடு! அவாண்டே குடு. இத்தோட ஆளை வுடுங்க. உங்க சங்காத்தமே வோணாம் நமக்கு!"

"செய் வாத்யாரே!" என்று நட்டு ரூபாயை வாங்கிக் கொண்டு புறப்பட்டான்.

அப்புசாமி தான் முக்கால் பிளேடை எவ்வளவு மகத்தான ஒரு இகழ்ச்சி பண்ணிவிட்டோம், அதன் விளைவு என்ன ஆகப்போகிறது என்பது தெரியாதவராக இளம் கன்று பய் அறியாது என்பதுபோல இருட்டிய பிறகு மெதுவே உரிய உடையை மாற்றிக்கொண்டு வீடு திரும்பினார்.

சிதாப்பாட்டி சிந்தனையுடன் டைஜஸ்டில் மூழ்கியிருந்தாள். ஆனால் மூளையில் ஒரு வரிகூடப் பதியவில்லை. அந்த மணவாள முதலியார்... தட் இம்மாரல் ரெச்! என்ன மட்டமாக நடந்துகொண்டு விட்டார். பணக்காரப் பெரிய மனிதர்களெல்லாம் இப்படி நடந்து கொண்டால் யாருமே ஒரு நல்ல காரியத்துக்கு டொனேஷனுக்குப் போகமுடியாதே...

தற்செயலாக அப்புசாமியை அவள் கண்கள் நோக்கின.

வெகு கவனமாகத் தன் காலுக்கு மருந்து போட்டுக் கொண்டிருந்தார். சிதாப்பாட்டிக்கு ஓர் ஐடியா தோன்றியது. 'பிரில்லியன்ட்!' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டாள். புன்னகையுடன் எழுந்து வந்தாள். ஐ பி ஆஃப் எனி ஹெல்ப் டு யூ..."

அப்புசாமி நிமிர்ந்து பார்த்தார்.



## 10

மணவாள முதலியாரிடமிருந்து நூற்றைம்பது ரூபாய் செதுக்கிக்கொண்டு வந்த திருப்தியிலும் மகிழ்ச்சியிலும், அப்புசாமிக்குக் காலிலும் கையிலும் பட்ட அடிகளும் சிராய்ப்புக்களும், அவற்றின் மீது அவர் தடவிக் கொண்ட டிஞ்சர் அயடின் சுருசுருவென்று ஏற்படுத்திய எரிச்சல்களும் ஒரு பொருட்டாகவே தெரியவில்லை.

இனிமேல் அவரைப் பொறுத்தவரையில் அந்த முதலியாரின் பெயர் மணவாள முதலியார் அல்ல. கற்பக விருட்ச முதலியார்! கேட்டதும் கொடுப்பவனே என்று பாடவேண்டும் போலிருந்தது அப்புசாமிக்கு.

துட்டு வேணுமா?

மாத்திரை அடிச்சிட்டு முதலியார் மயக்கமா இருக்கிற நேரமாப்பார்த்து உள்ளே பூந்துட வேண்டியது தான். 'யோவ் முதலியார்! மனச்சாட்சி வந்திருக்கேன் எடுய்யா துட்டு என்று சாமார்த்தியமாகக் கேட்டு வாங்கி வந்துவிட வேண்டியது.

ஆகா! இந்த சீதேக் கியவி என்னம்மா மீசையை முறுக்கினாள் - நான் பதினையாயிரம் சம்பாதிக்கத் துப்பத்தவனாம் - ஒற்றைக் காதை அறுத்துக்கணுமாம். இல்லாட்டி. பதினையாயிரம் என்ன பத்து லட்சம் சம்பாதிச்சிட்டு வந்து காட்டரேண்டி சீதே . . நீ உங்க கிழவிப் பட்டாளம் அத்தனை பேரையும் வைத்துக்

கொண்டு அவுங்க முன்னாலே என் காலிலே விழப்போற வெற்றித் திருநாள் இதோ வந்திட்டே இருக்கிறது.

"கேன் ஐ பி ஆஃப் எனி ஹெல்ப் டு யூ?" என்றவாறு சீதாப் பாட்டி அப்புசாமியின் அருகில் வந்தாள். "அடப் பாவமே! எங்கே போய் அடிபட்டுக்கொண்டிருக்கிறீர்கள்? இருங்கள், ஐ ஷல் புட் த பாண்டேஜ்... ஐ கேன் டு பெட்டர்... ப்ளீஸ்..."

"வேணாம் வேணாம்!" என்றார் அப்புசாமி கெத்தாக. "நீயும் நானும் எதிர்க்கட்சி! 'டூ! டூ!' விட்டிருக்கிறோம். தேர்தல் நாள் நெருங்க நெருங்க வந்து ஒட்டிக்கிற உதிரி மாதிரி ஒட்டறியோ?"

சீதாப்பாட்டி புன்னகை செய்தாள். "நோ, நோ. ஹஸ்பெண்டுக்கு அடிபட்டால் ஒய்ஃப் கட்டுப்போட மாட்டாளா? நான் தட் மச் அஃப் ராட்சஸியா? தான் ஆடாவிட்டாலும் தன் சதை ஆடும் என்று ப்ராவர்ப் கூட இல்லையா?"

"அதுதான் ஆடுதே சதை தொளதொளன்னு - பந்தயத்திலே தோற்றுப்போய் எப்போடா இவன் காதை அறுத்துப்பான்னு நீ ஆசையாக எதிர் பாத்துட்டிருக்கிறவள்! உனக்கு என் காலிலே அடிப்பட்டால் என்ன, கழுத்திலே பட்டால் என்ன? சம்பாதிக்காத புருஷன்னா உனக்கு அதிர்ஷ்டம் அடிக்காத சீட்டு மாதிரி அலட்சியம்! கிள்ளுக்கீரை."

"நிஜமாகத்தான் கேட்கிறேன்... என்ன சபதம் போட்டீங்க! கொஞ்சம் ரிமைண்ட் பண்ணுங்க..."

அப்புசாமி ரோஷமாகக் கூறினார். "நான் உப்புப் போட்டுச் சாப்பிடறவண்டி. எனக்குச் சபதம்னா சபதம் தான்! ஆயுசுக்கும் சபதம் போட்டுப் போட்டு நான்

தோற்றுக்கிட்டே இருக்கனும். நீ ஜெயிச்சிகிட்டே இருக்கனுமா? இதுதான் என் வாழ்க்கையிலேயே திருப்பு முனை. இந்தச் சபதத்திலே நான் ஜெயிச்சே தீரணும். நீ தோற்று உன் கிழவிப் பட்டாளத்தின் எதிரில் என் காலில் விழுந்தே தீரணும்."

சீதாப்பாட்டி அவரைக் குறுஞ்சிரிப்புடன் பார்த்தாள். அவருக்குப் பக்கத்திலிருந்த நாற்காலியில் உட்கார்ந்தாள். "உங்களையும் உங்கள் ஆவேசமான பேச்சையும் பார்த்து, சிரிக்கிறதா, அழறதா என்று எனக்குத் தெரியவில்லை. நீங்க போட்ட சேலஞ்சை நிறைவேற்றுங்கள். எனக்கு ஒரு அப்ஜக்‌ஷனும் இல்லை. ஐ வோண்ட் ஸ்டாண்ட் இன்யுவர் வே... ஆனால் ஒரு சின்ன ரிக்வெஸ்ட். பணம் சம்பாதிக்றேன், சபதத்தில் ஜெயிக்கிறேன் அப்படி இப்படி என்று அசட்டுத்தனமாக கால் கையிலே இப்படி ரத்தக் காயம் பட்டுக்கொண்டு வராதீர்கள்... டோண்ட் மிஸ்டேக் மீ... எங்காவது மூர் மார்க்கெட்டில் எதாவது வித்தை காட்டிவிட்டு வந்தீர்களா? ஸீரியஸாத்தான் கேட்கிறேன்!"

அப்புசாமி பல்லைக் கடித்தார். "வித்தையா? மூர் மார்க்கெட்டிலே ஏண்டி நான் வித்தை காட்டணும்? உன் கிட்டேயே காட்டப்போகிறேன். எத்தனை ரூபாய் நான் சம்பாதிக்கணும்? பதினையாயிரம்! பித்ஸாத் பதினையாயிரம்! இங்கே பார்த்தியா? இன்னிக்கு ஒரு நாளிலே...

ஜிப்பாப் பையில் அனாயாசமாகக் கையை விட்டு நூறு ரூபாய் நோட்டு ஒன்றையும் சில்லறைகளாகச் சில நோட்டுகளையும் எடுத்துக் கீழே வீசினார்.

"மை குட்னஸ்!" என்று வியந்தாள் சீதாப்பாட்டி. "ஏதாவது பிக்பாக்கெட் அடித்துத் தொலைத்தீர்களா

என்ன?" என்று கேட்க உதட்டு நுனி வரைவந்து விட்டது. சாமர்த்தியமாகக் கட்டுப்படுத்திக் கொண்டான்.

மணவாள முதலியாருக்குப் பாடம் கற்பிக்க வேண்டும் என்ற அவனுடைய திட்டத்துக்கு அப்புசாமியை உபயோகப்படுத்த வேண்டுமே. 'இந்தச் சமயத்தில் இவரை ராங் சைடில் ரப் செய்வது விவேகமல்ல' என்று எண்ணிக் கொண்டாள். காக்காயல்லவா பிடிக்க வேண்டும்.

"அட! நூற்றைம்பது ரூபாய் இருக்கும் போலிருக்கிறதே" என்று பாராட்டினாள். "ஒரே நாளில் நூற்றைம்பது ரூபாய்! அப்படியானால் ஒன் மந்த்லே நாலாயிரத்தைந்நூறு ரூபாய். பரவாயில்லையே? என்ன வேலை கண்டு பிடித்தீர்கள்? என்னுடைய ஹார்ட்டி கன்கிராசுலேஷன்ஸ்!"

அப்புசாமியை கையைப் பற்றிக் குலுக்கினாள்.

எலிஸபெத்டெய்லரே குலுக்கிய மாதிரி சந்தோஷம் ஏற்பட்டாலும். "இஸ்ஸ்... ஆ!" என்றார் அப்புசாமி. முதலியார் வீட்டு விசிறி சில பல காயங்களை உள்ளங் கையில் ஏற்படுத்தியிருந்தது.

"அடடா! கையில்கூட ஏதோ காயம் போலிருக்கே ப்ளீஸ்... இவ்வளவு கஷ்டப்பட வேண்டாம் நீங்கள்... ரொம்ப ரிஸ்க்கியான ஜாப்போ. ஏதாவது கட்டிட இன்ஜினியரிங் கிஞ்சினியரிங்?" சீதாப்பாட்டி அவர் கையைப் பற்றி உள்ளங்கையில் லேசாகக் களிம்பைத் தடவினாள். "நல்ல வேளை டீப் கட் இல்லை. ஏதோ ஸம் ஃபேக்டரிக்குப் போயிருக்கிறீர்கள்?"

"இந்தாமே!" என்றார் அப்புசாமி உஷாராகி. "என் வாயை நைஸாப் பிடுங்கப் பார்க்கிறியா? நான் எப்படிச்

சம்பாதிக்கிறேன் என்கிற ரகசியத்தை உன்கிட்டே சொல்லவே மாட்டேன். ஆயிரம் இயிரமில்லே லட்சலட்சமாகச் சம்பாதிக்கப் போகிறேன். அதுவும் நோகாமல் சம்பாதிப்பேன். இந்தக் காயமெல்லாம் தொழில்லே போட்ட முதலீடு மாதிரி. இனிமேல் ஐயாமேலே ஒருதுரும்பு கூடப் படாது. டக்குனு போக வேண்டியது... பணம் வாங்கிட்டு வரவேண்டியது..."

சிதாப்பாட்டி பெருமூச்சுவிட்டாள். "நீங்க எதற்கும் கேர்ஃபுலா இருங்க. என்கிட்ட இருக்கிற மன வருத்தத்திலே உங்களுக்கு ஒரு சங்கடம் வந்தால் ஐ கெனாட் பேர் இட்... உங்களை வைத்துத்தான் நான். நீங்க இல்லேன்னா... வெறும் ஜீரோ..."

அப்புசாமியின் தலையில் வைத்த ஐஸ் குளுகுளு வென்று கரைந்து அவர் மூளையை ஜில்லிட வைத்தது.

பொருவிளங்கா உருண்டையாட்டம் கெட்டியா யிருந்த கியவி, 'ரவாலாடு மாதிரி உதிருகிறாளே இப்படி. என்னவாயிருக்கும் சமாசாரம்?' என்று யோசித்தார்.

அப்புறம்தான் பளீரென்று அவருக்கு ஞானோதயம் ஏற்பட்டது. ஓ! அடிசக்கை. அப்படி ஒருகால் இருக்குமோ?

ஒரு பெண்பிள்ளை, அவள் என்னதான் வீர சூரியாயிருந்தாலும், அல்லி, ஆரவல்லியாயிருந்தாலும், சாந்த் பிபி ஜான்சி ராணியாயிருந்தாலும்...

ஒரு விஷயத்திலே அவள் பொம்பிளை பொம்பிளை தான். அவள் கற்புக்கு டேஞ்சர் வந்தால் அவள் அடியோடு கலங்கிப்போய்விடுவாள்... மணவாள முதலியாராகத் தான் நடித்து, கிழவியைக் கண்ணைக் கின்னை அடித்துக் கலாட்டா பண்ணியதிலே கலங்கிப் பூட்டாள் போலிருக்கு. மனதுக்குள் சிரித்துக் கொண்டார். 'என்னமாய்

கதறிவிட்டோம்' என்று எண்ணும்போதே சிரிப்புத் தாளவில்லை அவருக்கு.

''என்ன சிரித்துக் கொள்கிறீங்க?'' என்றாள் சீதாப்பாட்டி.

அப்புசாமி சமாளித்துக் கொண்டார். "சிரிச்சேனா? ஹிஹி! ஆமாம் சிரிப்பு வந்தது -"

''மனசே சரியில்லை. ஏதாவும் ஒரு பிக்சர் போகலாமா... வோன்ட் யூ கம் வித் மி?" அப்புசாமியைப் பார்த்து சீதாப்பாட்டி கேட்கவில்லை. ஆடியன்ஸைப் பார்த்து உஷா ஐயர் கேட்டார்.

அப்புசாமி பிரமித்தார். "சீதே... நிஜமாகவா? ஏய் கெய்வி! உனக்கு என்னவோ ஆயிருக்கு!"

சீதாப்பாட்டி கவர்ச்சிகரமாக அப்புசாமியைப் பார்த்தாள். "சீக்கிரம் டிரெஸ் செய்து கொள்ளுங்கள்..."

"டிரெஸ்ஸா! அப்படிக்கூட எனக்கு உண்டா என்ன?" என்றார் அப்புசாமி.

சீதாப்பாட்டி அவர் கையைப் பற்றிக்கொண்டு சொன்னாள். ''உங்களை நீங்களே இப்படி மட்டம் தட்டிக்கிறதால்தான் எல்லாரும் உங்களை ஒரு மாதிரியாகப் பேசுகிறார்கள். யு நோ... அப்போவெல்லாம் என் மனசு எவ்வளவு கஷ்டப்படும் தெரியுமா?"

"அது சரி," என்றார் அப்புசாமி. "அதற்கெல்லாம் நீதான் காரணம்... நீதானே என்னை அசடு பண்றதே?"

"நானும் பண்ணவில்லை. நீங்களும் அசடு அல்ல... த டிஃபெக்ட் ஈஸ்... உங்களுக்கு ஒரு ஸேயிங் தெரியுமோ?"

"ஷேவிங்கா? நல்லா சிரைச்சிப்பேனே?"

"நோ, நோ. ஸேயிங், அதாவது ஒரு வசனம்... காட் க்ரியேட் மேன், டெய்லர் க்ரியேட்ஸ் ஜெண்ட்டில் மேன் ... ஆள் பாதி, ஆடை பாதி என்பார்கள். ஒய் தெஹல் நீங்க ஒரு மாதிரி தொளதொள ஜிப்பாவும் வேட்டியுமா இருக்கணும்? ஜம்மென்று சூட்கோட் போட்டு டை கட்டிக்கொள்ளுங்கள்... யு வில் லுக் வெரி யங். இப்போ தலைக்கு டை அடித்துக் கொண்டிருக்கிறீர்கள்... எவ்வளவு ஸ்மார்ட்டா இருக்கிறீர்கள்... அதே மாதிரி பாண்ட், ஷர்ட், டை, பூட்ஸ்... உங்களை அப்புறம் யார் அசடு என்று சொல்கிறார்கள்... பார்க்கலாம்; உங்களை நான் பெஸ்ட் டெய்லரா ஒருத்தர் கிட்டே கூட்டிப் போகிறேன். நானே துணிகளை ஸெலக்ட் செய்யப் போகிறேன். உங்களுக்கே எப்படிப்பட்ட பாலிஷ் வரப்போகிறது பாருங்களேன்... ஒரு மில்லினர் களை வரப்போகிறது."

சீதாப்பாட்டி சொன்ன மாதிரியே பாண்ட், சட்டை எல்லாம் அவருக்குத் தைத்துத் தந்துவிட்டாள்.

டிரெஸ்ஸை மாட்டிக் கொண்ட அப்புசாமிக்கு தலை கால் புரியவில்லை. ஒரு குட்டி நடனமே ஆடிவிட்டார். மனைவி மாறிவிட்டது அவருக்குப் பெரிய அதிசயமாயிருந்தது.

பா. மு. கழகத்தின் வருடாந்தர விழாவுக்கான ஏற்பாடுகள் அமர்க்களமாக நடந்து கொண்டிருந்தன. இத்தனைக்கும் ஒரு வெள்ளி விழாவோ பொன் விழாவோ அல்ல. ஆனாலும் சீதாப்பாட்டி மிகுந்த அக்கறையுடனும் சிரத்தையுடனும் எல்லா அங்கத்தினர்களையும் போட்டுக் கசக்கிக் கொண்டிருந்தாள். "பதினேழாவது ஆண்டு விழா தானே? இருபதாவதாக இருந்தால்கூடப் பரவாயில்லை, பிரசிடெண்ட்ஜி எதற்காக இவ்வளவு பெரிய அளவில் இதைக் கொண்டாடச் சிரமப்படுத்துகிறார் எல்லாரையும்?"

என்று அங்கத்தினர்கள் சிலர் முணுமுணுக்கிற அளவுக்கு ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன.

எந்தெந்தப் பிரமுகர்களை வரவழைப்பது, கவர்னரைக் கூப்பிடலாமா, என்கிற அளவுக்கு முக்கியத்துவம் தரப்பட வேண்டிய விழாவா? பிரதம நீதிபதி உள்ளிட்ட நீதிபதிகள், பிரபல வக்கீல்கள், தொழிலதிபர்கள் என்று இவ்வளவு கூட்டம் சேர்க்க வேண்டியது அவசியமா?

சிகரம் வைத்தாற்போல் ஓட்டல் சோழாவில் இரவில் பஃப்வே பார்ட்டி.

"நிதிப் பற்றாக்குறை அது இது என்று பறந்து கொண்டிருப்பது ஒருபுறம் - கழகத்தின் சாதாரண ஓர் ஆண்டு விழாவுக்கு இவ்வளவு தடபுடலான ஏற்பாடு. பிரசிடெண்ட்ஜி மனசில் என்ன நினைப்பு?"

டைப் அடித்துக் கொண்டிருந்த காரியதரிசி அகல்யா சந்தானத்திடம் பொன்னம்மா டேவிட் புழுங்கினாள்.

அகல்யா வாய் பேசாமல் டைப் அடித்தவாறே, "இதிலே இன்னும் ஒரு மகா வயிற்றெரிச்சலைக் கவனித்தீர்களா?" என்றாள். அகல்யா சந்தானம் என்னதான் சீதாப்பாட்டிக்கு வலது கை போலப் பல சந்தர்ப்பங்களில் விளங்கினாலும் இந்த ஆண்டு விழாவில் சீதாப்பாட்டியின் மேல் அவளுக்கு ஒரு வருத்தம் ஏற்பட்டு விட்டது.

நகரில் எவ்வளவோ பெரிய பிரபலமான பிரமுகர்களெல்லாமிருக்க, சீதாப்பாட்டி மணவாள முதலியார் என்ற பணக்காரரைத் தலைமை வகிக்க ஏற்பாடு செய்திருந்தது அவளுக்குப் பிடிக்கவில்லை.

"ஏதாவது நன்கொடைக்கு வளைத்துப் போட பிரசிடெண்ட்ஜி அப்படிப் போட்டிருக்கிறாளோ என்னவோ?"

என்றாள் பொன்னம்மா டேவிட் - அகல்யாவிடம் விஷயத்தைக் கிரகிக்க.

"அப்படியிருந்தால் பரவாயில்லையே. அந்த முதலியாரிடம் டொனேஷனுக்குப் போய்விட்டு வெறும் கையுடனல்லவா பிரசிடெண்ட்ஜி திரும்பி விட்டாள். ." என்றாள் அகல்யா.

"ஓ! அப்படியா?" என்றாள் பொன்னம்மா டேவிட் சுவாரசியமாக. "டொனேஷனும் தரவில்லை. ஆனால் அவரை ஏன் குறிப்பாகத் தலைமைக்குப் போடணும்?"



# 11

பா. மு. கழக ஆண்டுவிழா நெருங்கிக் கொண்டிருந்தது. கழக அங்கத்தினர்களில் பலருக்கும் தெரியாத ஒரு மிஸ்டர் மணவாளமுதலியார் என்பவரை தொப்பாட்டி தலைமை வகிக்க ஏற்பாடு செய்திருந்ததைப் பற்றிப் பலவிதமான ஊகங்கள் அடிபட்டுக் கொண் டிருந்தன. மணவாள முதலியார் என்பவர் ஒரு பணக்காரர், நன்கொடை வழங்கக் கூடியவர் என்று ஒரு சிலர் கேள்விப் பட்டிருந்தார்கள்.

பொன்னம்மா டேவிட் சற்றுத் துடுக்கானவள் கழகத்தில் மற்ற அங்கத்தினர்களிடம் சொல்லிக் கொண்டிருந்தாள் "பிரசிடெண்ட்டையே நான் கேட்டு விடப் போகிறேன் . . பணக்காரர் என்பது மட்டும் ஒரு தகுதியாகிவிடாது. நம் கழகத்துக்குத் தலைமை தாங்க. என் புருஷன் கூட ஒரு பெரிய டிம்பர் மர்ச்செண்ட்."

அகல்யா சந்தானம் "உஸ்ஸ்!" என்றாள். அந்த உஸ்ஸுக்கு அர்த்தம்: 'பிரசிடென்ஜி உள்ளே தன் அறையில் தான் இருக்கிறாள். . . அவள் காதில் விழுந்து வைக்கப் போகிறது."

பொன்னம்மாவை அகல்யாவின் 'உஸ்ஸ்' சீண்டி விட்டது. "இந்தச் சின்ன விஷயத்தைப் பற்றிப் பேசக் கூட நமக்கு உரிமை இல்லையா என்ன? நாமும் கழகத்தில் மெம்பர்தானே?"

அகல்யா நெளிந்தாள். "சரி, சரி, எல்லாம் நல்ல தற்குத்தானிருக்கும். பிரசிடெண்ட் முன்னேகூட ஆப்பிரிக்க

இளவரசி இடலியைக் கழகத்துக்குக் கூட்டி வரவில்லையா? ஏதாவது நோக்கத்துடன்தான் இந்த மணவாள முதலியார் என்பவரைத் தலைமை தாங்க ஏற்பாடு பண்ணியிருப்பார்."

பொன்னம்மா டேவிட் ஏதோ சொல்ல வாயெடுத்தாள்.

பிரசிடெண்ட் அறையின் ஸ்விங் டோர் 'ஙி' என்ற ஒலியுடன் லேசாகத் திறந்தது.

"எஸ், பிரசிடென்ட்ஜி" என்று அகல்யா பரபரப்புடன் எழுந்து கொண்டாள்.

"சீதாப்பாட்டி புன்முறுவலுடன் 'எக்ஸ்க்யூஸ் மீ!" என்றாள். "நானும் உங்கள் அரட்டையில் கலந்து கொள்ளலாமில்லையா?"

அகல்யாவுக்கு அசடு வழிந்தது. "ஓ! தாராளமாக. சும்மாப் பேசிக் கொண்டிருக்கிறோம். மூணு மணியாகப் போகிறது. வெய்யில் எவ்வளவு சுரீர் என்று அடிக்கிறது"?

சீதாப்பாட்டி புன்முறுவலுடன் பொன்னம்மா டேவிட்டைப் பார்த்தாள். "மிஸஸ் டேவிட்; உங்களுடைய அப்ஜக்ஷனை ஐ ட்டு அக்ஸெப்ட். ஒருத்தர் பணக்காரர் என்பதால் நம்ம கழகத்துக்கு அவரைத் தலைமை வகிக்கக் கூப்பிடுவது என்பது ரொம்பத் தப்பு, பட்..." நிறுத்தினாள். "உங்கள் எல்லோருக்கும் ஒரு ப்ளஸண்ட் சர்ப்ரைஸ் நான் வைத்திருக்கிறேன்."

"அகல்யா!" என்றாள் சீதாப்பாட்டி. "நீங்கள் மிஸ்டர் மணவாள முதலியாரைப் பார்த்திருக்கிறீர்களா?"

"ஊஹூம்..." என்றாள் அகல்யா. "அன்றைக்கு உங்களுடன் வருவதாக இருந்த தினத்தில் என் பேரன் கீழே விழுந்து... டெலிபோனில் கூப்பிட்டார்களென்று உடனே போகும்படி ஆகிவிட்டதே..."

"எஸ், பொன்னம்மா, நீங்க கூடப் பார்த்திருக்க மாட்டீர்கள்?"

பொன்னம்மா ஸ்டைலாக உதட்டைப் பிதுக்கித் தோளைக் குலுக்கினாள், "நான் கேள்விப்படாத பெயர். ஊரில் எத்தனையோ பணக்காரர்கள் இருக்கிறார்கள்."

"அகல்யா" என்றான் சிதாப்பாட்டி "நீங்க கொஞ்சம் மிஸஸ் பண்டரிநாதன் இருந்தால் கூப்பிடுங்களேன். கார்ட்ஸ் ஹாலில் இருக்கக்கூடும்."

அகல்யா சந்தானம் உடனே ஹாலுக்குச் சென்று, சீட்டு ஆடிக் கொண்டிருந்த மிஸஸ் பண்டரி நாதனைக் கூட்டி வந்தாள். காதிலிருந்த ஹியரிங் எய்டைச் சரி செய்தபடி மிஸஸ் பண்டரிநாதன் வந்தாள்.

"எக்ஸ்க்யூஸ்மி மிஸஸ் பண்டரிநாதன்" என்று சிதாப் பாட்டி மன்னிப்பு கேட்டுக் கொண்டான். "உங்களை ஆட்டத்துக்கு நடுவே டிஸ்டர்ப் பண்ணிவிட்டேன்."

"அதனாலென்ன? அங்கே நான் தோற்றுக் கொண்டு தானிருந்தேன்."

"பை த வே. . மிஸ்டர் மணவாள முதலியாரைப் பார்த்து இன்விடேஷன் கொடுக்க நீங்கள்தானே போன வாரம் போனீர்கள்?"

"ஆமாம் நான்தான். என்னாலே மறக்கவே முடியாது. இப்போ எல்லோரும் மிஸ்டர் மணவாள முதலியாரைப் பார்க்க ஆவலாக இருக்கிறார்கள்."

"எனக்கொன்றும் ஆவலாக இல்லை." என்றாள் பொன்னம்மா டேவிட் சுருக்கென்று.

மிஸஸ் பண்டரிநாதன் சிரித்தாள். "நீங்களும் நிச்சயம் ஆச்சரியப்பட்டுப் போவீங்க. என் கண்ணையே என்னால் நம்பமுடியவில்லை. மிஸ்டர் மணவாள முதலியார்

அப்படியே அசலா, அச்சாக நம்ம பிரஸிடெண்ட்டின் கணவர் மிஸ்டர் அப்புசாமி மாதிரியே இருக்கிறார். பாருங்கள் எல்லோரும் பிரமித்துவிடப் போகிறீர்கள்.

"நியூஸாயிருக்கிறதே!" என்றாள் அகல்யா.

சீதாப்பாட்டி சொன்னாள்: "எல்லாருக்கும் இது நம்ம ஆனிவர்ஸரி டே ஸெலிபரேஷனில் ஒரு ஸர்ப்ரைஸாக இருக்கட்டும் என்றுதான் நான் யார்கிட்டேயும் விரிவாகச் சொல்லாமலிருந்தேன் மிஸ்டர் முதலியாரைத் தலைமை வகிக்க ஏற்பாடு பண்ணியது அவரை எப்படியாவது நன்கொடை தரச் செய்யவேண்டும் என்பது நம்பர் ஒன். நம்பர் டூ. . . . என்னையறியாமல் எனக்கு ஏற்பட்ட ஒரு ஸ்டிரேஞ்ச் ஸென்ட்டிமெண்ட் மிஸஸ் பொன்னம்மா வில் எக்ஸ்க்யூஸ் மி இஃப் ஐ எக்ஸ்ப்ளேய்ன் த திங். . .

சீதாப்பாட்டியின் குரல் வோல்டேஜ் ட்ராப் ஆனது போல் கம்மியது. "வேறொன்றுமில்லை. என் ஹஸ்பெண்ட் மிஸ்டர் அப்புசாமியைப் பற்றி உங்களுக்கெல்லாம் தெரியும் அசடாக இருக்கிறாரே என்று அவரைப்பற்றி நான் வருத்தப்படாத நாள் இல்லை. அந்த வருத்தத்தைப் போக்கி கொள்ளவே பா. மு. க. வின் இன்ஸ்பைட் ஆஃப் க்ரிடிஸிஸம் நான் ஆக்டிவ் பார்ட் எடுத்துக் கொள்கிறேன். மிஸ்டர் முதலியாரைப் பார்த்ததும் ஐ வாஸ் சர்ப்ரைஸ்ட்?" என் கணவரைப் போலவே அச்சாக அப்படியே இருந்தார். ஆனால் அந்த மாதிரி அசடாக இல்லை. ஒரு மில்லினியராக, எபிள் பிஸினஸ் மேனாக, ஹ்யுமானடேரியனாக, ஃபிலாந்திரஃபிஸ்டாக . மிஸ்டர் முதலியார் இஸ் எ மேன் ஆஃப் ஹை எஸ்டீம். அவரைப் பார்த்ததும் அவரைக் கௌரவிக்க வேண்டும் என்று என்னையறியாமல் தோன்றி விட்டது. அதைவிட நம் கழகத்தைச் சேர்ந்த எல்லோரும் நானடைந்த அந்த ஆச்சிரியத்தை அடைய வேண்டும் என்று ஆசைப் பட்டேன். ஒரு சின்ன கெட்-டு கெதர் என்றால் கொஞ்சம் பேருக்குத்தான் தெரியும்,

எல்லோருக்கும் தெரியும்படியாக இருக்கட்டும் என்றுதான் ஆனிவர்ஸரி ஃபங்ஷனுக்கு அவரை பிரசைட் பண்ண ஏற்பாடு செய்திருக்கிறேன்.

பொன்னம்மா டேவிட்டுக்கே மனசுக்கு என்னவோ மாதிரி ஆகிவிட்டது நான் மிகக் கடுமையாக ஆட்சேபித்து விட்டோமோ என்று.

ஓட்டல் சோழா

இரண்டாம் மாடியிலிருந்த 'மண்டபம்' ஹால், பா. மு. கழக அங்கத்தினர்களாலும் பிரஸிடெண்ட் சீதாப் பாட்டியால் அழைக்கப்பட்டிருந்த நகரபிரமுகர் பிரமுகிகளாலும் நிரம்பியிருந்தது. மண்டபத்தில் பார்ட் ஒன் பகுதியை மட்டும் எடுத்துக் கொண்டிராமல் மண்டபம் முழுமையுமே கூட எடுத்துக் கொண்டிருக்கலாமே என்று சில அங்கத்தினர்கள் நினைத்தார்கள். அவ்வளவு கூட்டம்.

பஃப்பே பார்ட்டி, விழாத் தலைவருக்காக காத்திருந்தது. நாற்பத்தைந்துக்கு இருபத்தைந்து அடி ஏர் கண்டிஷண்ட் ஹாலில் மொத்து மொத்தென்ற ஃபோம் தரை விரிப்பில் விருந்தாளிகள் இங்குமங்கும் கூடிக் கூடிப் பேசிக் கொண்டிருந்தனர். ஓர் அம்மாள் பக்கத்திலிருந்தவளிடம் "அபிடைஸர் வருவதற்குள் நிஜமாகவே பசி வந்திடும் போலிருக்கு!" என்று கிசுகிசுத்தாள்.

சுவர்களில் வண்ண வண்ண நிறத் துணிகள் சட்டமிடப்பட்டு ஹாலுக்கு அழகைத் தந்தன. அந்த அழகை அதிகப்படுத்துவது போல ஹால் முழுவதும் ஒளித்து வைக்கப்பட்ட மின் ஒளி பரவிக் கொண்டிருந்தது. மேஜைகள் மேல் பஃப்பே உணவு வகைகள் காத்திருந்தன, மணத்தைப் பரப்பியவாறு. சானல்ட் மியூசிக்கில் கர்நாடக இசை ஒலித்துக் கொண்டிருந்தது.

நீண்ட கார் வந்து நின்றது. சீதாப்பாட்டியும் மற்றவர்களும் விரைந்தனர். மணவாள முதலியார் வந்து விட்டார். அங்கத்தினர்களுக்கு ஆச்சரியமாயிருந்தது - முதலியார் அசலாகப் பிரசிடெண்டின் கணவர் மாதிரியே இருக்கிறாரே என்று. டோர்மென்கள் விரைந்து சென்று கதவைத் திறந்துவிட - முதலியார் குடித்தவர் மாதிரி தள்ளாடியவாறு இறங்கினார். அவரை இரண்டு பக்கம் இரண்டு பேர் பிடித்துக் கொண்டிருந்தனர்.

எல்லோருக்கும் சுருக்கென்றது. தலைப்பா அணிந்திருந்த சேவகர்களை நோக்கி மணவாள முதலியார் "மகா ப்ரபு" என்று பெரியதாகக் கும்பிட்டார். அவர்களுக்கு என்னவோ மாதிரி ஆகிவிட்டது.

சீதாப்பாட்டி எதிர்சென்று வரவேற்றாள்.

ரிஸப்ஷன் பெண்மணியை நோக்கி நேராகப் போகத் தொடங்கினார், முதலியார்.

"திஸ் வே... திஸ் வே-ப்ளீஸ். மண்டபத்தில் அரேஞ்ச் செய்திருக்கிறோம்!" என்று சீதாப்பாட்டி லிஃப்ட்டுக்கு அவரை டைரக்ட் செய்து அழைத்துப் போனாள்.

"மதிப்பிற்குரிய நமது விழாத் தலைவர் இதோ வந்து விட்டார்." சீதாப்பாட்டி வரவேற்பைத் துவங்கினாள்.

"தூ! செரித்தான் போமட!" மணவாள முதலியார் இப்படிக் கூறியதும் தூக்கிவாரிப் போட்டது எல்லோருக்கும்.

சீதாப்பாட்டி எல்லோருக்கும் கேட்கும்படி, "எக்ஸ்க்யூஸ் மி மிஸ்டர் முதலியார்... நீங்கள்... நீங்கள் வந்திருப்பது ஓட்டல் சோழா. யு ஆர் பிரசைடிங் ஓவர் எ ஃபங்ஷன்" என்றாள்.

"ஹ ஹ ஹ!" என்று சிரித்தவாறு மணவாள முதலியார் தன்னைத் தோளில் தாங்கியவாறு வந்த

இருவரையும் தள்ளிவிட்டு, "இரு, பாட்டு கேட்கிறேன்! என்னய்யா பாட்டுப் போட்டிருக்கீங்க? கருநாடக சங்கீதம், மைசூர் நாடக சங்கீதம்! சினிமாப் பாட்டுப் போடுய்யா! ஹாய்! மச்சானைப் பார்த்தீங்களா, மலை வாழைத் தோப்புக் குள்ளே . . ." என்று பாடி ஆட ஆரம்பித்துவிட்டார்.

விருந்து ஹாலிலிருந்த நூற்றைம்பது விஐபிக்களில் நூறுபேருக்கு மாரை ஏதோ அடைப்பது போலிருந்தது.

முதலியார் மச்சானைப் பாதியில் விட்டுவிட்டு திடீரென்று கீழே விரிப்பில் உட்கார்ந்துவிட்டார். காதில் ஒரு கையைப் பொத்திக் கொண்டார் "மன்மத லீலையை வென்றார் உண்டோ" என்று பழைய பாடல் ஒன்றைப் பாட ஆரம்பித்துவிட்டார்.

சீதாப்பாட்டியிடம் அகல்யா சந்தானம் ஓடிவந்து, "அவமானமாயிருக்கிறது! பிரதம விருந்தாளியின் லட்சணம் இப்படி இருக்கிறது. இப்போ என்ன பண்ணுவது!" என்றாள்.

ஸ்டூவர்ட்ஸ்களுக்குச் சீதாப்பாட்டி சாடை காட்ட அவர்கள் வந்து மெதுவே முதலியாரைத் தூக்கிவிட்டனர். மணவாள முதலியார் நேரே அடுக்கி வைக்கப்பட்டிருந்த பஃப்பே பலகாரங்கள் மீது பாய்ந்தார். ஒரு தட்டுப் பலகாரத்தைத் தூக்கிக் கொண்டார். விற்கத் தொடங்கி விட்டார்.

"எலந்தப்பயம்! எலந்தப்பயம்! எலந்தப்பயம்! ஹாய் . . ."

உதவிப் போலீஸ் கமிஷனரான ஒரு பிரமுகரின் அருகே மணவாள முதலியார் சென்றார்.

அவர் மணவாள முதலியாரின் கையைப் பற்றிக் கொண்டு, ரகசியமாக, "மிஸ்டர் முதலியார்? ஆர் யூ எ பர்மிட் ஹோல்டர்? ஏதாவது வம்பு வந்து சேரும்.

கொஞ்சம் நாசூக்காக நடந்து கொள்ளுங்கள். ப்ளீஸ். . ." என்றார்.

மணவாள முதலியார் அவர் கன்னத்தில் இச்சென்று ஒரு முத்தம் கொடுத்துக் கழுத்தைக் கட்டிக் கொண்டார். அவரது கையைப் பற்றி இழுத்தவாறு, "அட . . வாங்கோன்னா. அட வாங்கோன்னா. . ." என்று பாட ஆரம்பித்துவிட்டார்.

வந்திருந்த பிரமுகர்கள் பலரது முகத்திலும் இளக்காரம் வழிந்தது. மணவாள முதலியார் என்பவர் ஒரு பெரிய புள்ளி, பெரிய பிஸினஸ்மேன், மலேயாவில் நிறைய எஸ்டேட் உடைய பணக்காரர் அது இது என்று கேள்வி பட்டிருந்தவர்களின் முகங்களில் கேலிக் குறி நிலவியது.

"என்னவோ அவர் தொடவேமாட்டார் பாட்டியை என்றீர்களே? நிலைமையைப் பார்த்தால் பாட்டியை விடவே மாட்டார் என்பதுதான் பொருத்தம் போலிருக்கிறதே?" மணவாள முதலியாரின் நெருங்கிய சிநேகிதரான வக்கீல் சிங்காரம் என்பவரின் திருமதியை ஒரு பா. மு. கழக அங்கத்தினர் மடக்கினாள்.

அந்தத் திருமதி சிங்காரத்துக்கு அவமானமாகி விட்டது. மிஸ்டர் முதலியாரை அவளுக்கு ஓரளவு தெரியும், ஆனால் இவ்வளவு பப்ளிக்கில் இத்தனை ஆபாசமாக நடந்து கொள்கிறாரே . . குடியென்றால் அதற்கும் ஓர் அளவில்லையா?

ஆத்திரத்துடன் டெலிபோன் அருகே சென்றாள். கணவர் சிங்காரத்துக்கு டெலிபோன் செய்தாள். "நான் ராது பேசுகிறேன். . ."

"வந்துட்டேயிருக்கிறேன் ராது. நீ பெரிய காரை எடுத்துப் போயிட்டியே மகாராணி!"

"போதும் உங்க கொஞ்சல்! இங்க உங்க நண்பர் அடிக்கிற குடிகாரக் கூத்து சகிக்கலை. சீக்கிரம் வந்து அவர் தலையிலே நீங்களாவது பக்கெட் தண்ணியை ஊத்துங்க."

"என்ன ராது உளர்றே? யாரைச் சொல்றே?"

"வேறு யாரை! உங்க நெருங்கிய நண்பர் மணவாள முதலியாரைத்தான்."

"என்ன உளறுகிறே? அவர் இங்கேயல்லவா இருக்கிறார். அவர்கிட்டேதான் நான் இப்போ பேசிக் கிட்டிருக்கிறேன். என்னைக் கூட்டிக்கிட்டு என்னோடு சேர்ந்து போகலாம்னு இங்கே அவர் வந்திருக்கிறார்!"



# 12

**வ**க்கில் மனைவி ராதா சிங்காரத்துக்கு ஒரே படபடப்பாக வந்துவிட்டது. இரண்டும் இரண்டும் ஐந்து என்று அந்தம்மாள் சொன்னால், வக்கீல் சார் 'ஆமாம் ஐந்து' என்று ஒப்புக்கொண்டு விடுவதுதான் வழக்கம். 'கோர்ட்டில் தான் தினமும் வழக்காடுகிறோமே, வீட்டிலும் வழக்காட வேண்டாம் என்ற சமாதானக் கண்ணோட்டத்தில் மனைவியை அனுசரித்துப் போய்விடுபவர்.

அப்படிப்பட்டவர் அவள் ஒரு விஷயம் டெலிபோனில் அவசர அவசரமாகச் சொன்னால் "என்ன உளர்றே?" என்கிறார். 'முதலியார் இங்கே என்னிடம் பேசிக் கொண்டிருக்கிறார்' என்றார்.

ராதா சிங்காரத்துக்குத் திடுமென்று சந்தேகம் வந்து விட்டது. ஒருகால் தன் கணவரும் முதலியார் மாதிரி குடித்துவிட்டு ஏதாவது உளறுகிறாரோ!

"ஹலோ? வாடை டெலிபோன்லேகூட வந்து குமட்டுது! நீங்க பார்ட்டிலை விடாதவரைக்கும் உருப்பட மாட்டீங்க ..."

"ராது! என்ன நீ, மேலே மேலே உளறிக்கிட்டே போகிறே?"

"புறப்பட்டு வந்து நீங்களே வேணும்னாலும் பாருங்க .. உங்ககிட்டே பொய் சொல்லி எனக்கு என்ன ஆகணும்?"

"மிஸ்டர் முதலியாரை விட்டுக்கொடுத்து நீங்க பேசு வீங்களா, உங்க நண்பராச்சே!"

"ராது! இப்பவே நான் முதலியாரை அழைச்சிட்டு அங்கே வர்றேன்."

"என்னவோ செய்யுங்க."

ராதா கோபத்துடன் டெலிபோனை வைத்து விட்டுத்திரும்பினாள்.

"எனி ட்ரபிள் வித் த ஃபோன்?" என்றாள் சீதாப்பாட்டி - அந்தப் பக்கமாக வந்தவள்.

"ட்ரபிள் பூரா தலைமை தாங்க வந்திருக்கிற மிஸ்டர் முதலியாரைப் பற்றித்தான்.... எத்தனையோ விஐபி இருக்க இவரை ஏன் தலைமைக்குப் போட்டு வைத்தீர்கள். ரொம்ப அவமானமாயிருக்கு எல்லாருக்கும்."

சீதாப்பாட்டி குரலில் வருத்தத்தை வரவழைத்துக் கொண்டு, "மிஸ்டர் முதலியார் இவ்வளவு இன்டீஸன்ட்டாக பிஹேவ் பண்ணுவார் என்று ஐ நெவர் தாட்" என்றாள்.

"மிஸ்டர் முதலியார் என் கணவருக்கு நெருங்கிய சிநேகிதர்..."

"ஐ ஸீ."

"இப்படி மிஸ்டர் முதலியார் கூத்தடிக்கிறதை அவருக்குத் தெரியப்படுத்தத்தான் போன் செய்தேன்.. இன்னும் கொஞ்ச நேரத்தில் அவர் வந்துவிடுவதாகச் சொன்னார்..."

சீதாப்பாட்டிக்குத் தூக்கி வாரிப்போட்டது. மேலுக்கு அமைதியாக, ஐஸீ..." என்றாள்.

"குடிச்சிருக்கிறவர்கள் கிட்டே ஒரு குணம். தெரியதவர்கள் யாராவது சமாதானம் பண்ண வந்தால் இன்னும் மோசமாக நடந்துகொள்வார்கள், தெரிந்தவர்களாக வந்து சொன்னால். . . பூனைக்குட்டி மாதிரி சொன்னபடி கேட்பார்கள். என்ன இருந்தாலும் எங்களுக்கு முதலியார் வேண்டியவர் என்றாலும்கூட - ஒரு பொது இடத்திலே இவ்வளவு மோசமாக அவர் நடந்து கொள்ளக் கூடாது! பாடறார். ஆடறார். சே! சே!"

சீதாப்பாட்டி அவசரமாக விடைபெற்றுக் கொண்டு மீண்டும் விருந்து மண்டபத்தை அடைந்தாள்.

அசல் முதலியாரை அழைத்துக்கொண்டு சிங்காரம் இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்துவிட்டால் நிலையை ரொம்ப ஆக்வார்ட் ஆவதற்குள் அப்புசாமியை வெளியேற்றி விடவேண்டும் என்று எண்ணிக் கொண்டாள்.

மணவாள முதலியாரைப் பழிவாங்க சீதாப்பாட்டி அப்புசாமியிடம் ஒரு ரகசிய உடன்படிக்கை செய்து கொண்டிருந்தாள்.

சில தினங்களுக்கு முன் -

அப்புசாமி கண்ணாடி முன் நின்று சீதாப்பாட்டி வாங்கித் தந்த சூட்கோட் அணிந்து தன் உருவத்தைப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தார்.

அதிருஷ்டம்தான் எப்படியெல்லாம் தானாக வந்து கூரையைப் பொத்துக் கொண்டு என் கையில் விழுகிறது.

'இந்த கியவி ஏதே. . . சம்பாதிக்க முடியுமா பத்தாயிரம் உன்னால்?' என்று சவால் விட்டவள் தானாகக் கூப்பிட்டு 'இந்தாங்க. . . பிடியுங்க ஐந்நூறு'ன்னு ஒரு வேலை தர்ராள்.

சீதாப்பாட்டி அப்புசாமியிடம் அவள் மணவாள முதலியார் வீட்டுக்குப் போனதைப் பற்றியும் மிஸ்டர் முதலியார் அவளிடம் முறைதவறி நடந்து கொள்ள முயன்றதையும், அவள் அங்கிருந்து எப்படியோ தப்பித்து வந்ததையும் அவரிடம் படபடப்புடன் விவரித்தாள். ஹி இஸ் எ ஸ்கௌண்ட்ரல்... அயோக்யன்... ஐ ஷெ"ட் டீச் ஹிம் எ லெஸன்... சீதே யார் என்பதை அவனுக்கு நான் நிரூபிக்கணும்."

சீதாப்பாட்டி குமுறக் குமுற, அப்புசாமியின் மனசுக்குள் குமுறிக் குமுறி அடக்க முடியாத சிரிப்பு பொங்கிக் கொண்டிருந்தது.

யானைக்கும் அடி சறுக்கும் சீதேக்கும் கணக்குத் தப்பும். தன்னிடம் தவறாகப் பழகியவர் அசலான முதலியாரென்றே சீதாப்பாட்டி நம்பிவிட்டதில் அப்புசாமிக்கு ஒரே குதூகலம். மனைவி ஆவேசமாகச் சொன்னதையெல்லாம் ரசித்து ரசித்துக் கேட்டுக் கொண்டார். பெரிய பெரிய திட்டுக்களைப் பாட்டி சொல்லும் போது மட்டும் கொஞ்சம் கேட்கக் கஷ்டமாயிருந்தது.

"பாவம்டி... என்னவோ வயசான மனுஷன் நீ சிவப்பா லட்சணமாச் சின்ன வயசாச் சிக்குனு இருக்கியோ இல்லையோ? உன்னைத் தன் பொண்ணு மாதிரி நினைச் சுட்டார் போலிருக்கு அந்தக் கிழவர்," என்றார்.

"கிழவர் என்ன கிழவர்! மரியாதை வேறா அந்த இம்மாரல் ரெச்சுக்கு!"

அப்புசாமி மனைவியின் தோளைத் தட்டிக் கொடுத்தார், சமாதானம் பண்ணுகிற சாக்கில். "இவ்வளவு படபடக்கிறாயே? விட்டுத் தள்ளு! என்னவோ பாவம், தெரியாமல் பல்லை இளிச்சுட்டான்."

"காலிலேயிருக்கிற செருப்பைக் கழற்றி இன்னொருத்தியாயிருந்தால் அடிச்சிருப்பாள். நான் கொஞ்சம் பாலிஷ்டா நடந்து கொண்டுவிட்டேன்."

அப்புசாமிக்கு நறுக்கென்றது "ஹிஹி! செருப்பு கிருப்பு என்று அதெல்லாம் அசிங்கம் . . . நீங்களும் கொஞ்சம் பொம்பிளைங்களா லட்சணமா நடந்து கொள்ளணும். பைப்பை ஆட்டிட்டு, மணிபர்ஸ் வாயைத் திறந்து திறந்து மூடினால் எந்தக் கிறவனுக்கும் கிரிகிரி கிளம்பி விடாதா?

சீதாப்பாட்டியின் குரல் கம்மியது. "நீங்க என் ஹஸ்பெண்ட் உங்ககிட்டே வந்து நான் இப்படி ஒரு கம்ப்ளெய்ண்ட் சொல்றேன். எனக்காக நீங்க ஒரு உதவி செய்யணும்."

"அய்!" என்றார் அப்புசாமி. "இப்பத்தான் உன் சரித்திரத்திலே முதல் தடவையாக வந்து என்கிட்டே, என்னைக் காப்பாத்துங்கன்னு அந்த கஜேந்திர யானை மாதிரி குரல் கொடுத்திருக்கிறே? தந்தோம் அபாயம். . . இயோ, தந்தோம் அபயம்! உனக்கு நான் என்ன பண்ணணும்? அந்த முதலியாரைக் கொன்னுட்டு டகார்னு தூக்குப் போட்டுக்கட்டுமா? ரெடி. . . ஆனால். . . ஆனால் . . ."

சீதாப்பாட்டி அவரிடம் தன் திட்டத்தை கூறினாள். "நீங்க வேறொன்றும் செய்யவேண்டாம். நான் ஏற்கனவே அந்த முதலியாரை எப்படிப் பழிவாங்குவது என்று பிளான் பண்ணி வைத்துட்டேன். அதனுடைய பர்ஸ்ட் ஸ்டேஜ்தான் உங்களுக்கு நான் சூட் ஸெட் டிரஸ் ஸெல்லாம் தைத்துக் கொடுத்தது. நீங்க செய்ய வேண்டியது ரொம்ப ரொம்ப ஸிம்பிள் ஆக்ட்டிங். அந்த மிஸ்டர் மணவாள முதலியாராக நீங்கள் கொஞ்ச நேரத்துக்கு - நான் சொல்லுகிற தினம் நடிக்கவேண்டும்!"

'அத்திர ஆம்ம' என்று அப்புசாமியின் மனம் ஆச்சரியப்பட்டது. அரைக் காட்சியிலே கூடத் தலை காட்ட வாய்ப்பில்லாத நடிகருக்கு அட் எ டைம் இரண்டு படத்திலே ஹீரோ சான்ஸ் கிடைத்தமாதிரி மகிழ்ச்சி அப்புசாமிக்கு ஏற்பட்டது. ஏற்கனவே அரைபிளேடு கோஷ்டியினருக்காக மணவாள முதலியாராக நடித்தாயிற்று. நிகர லாபம் நூற்றைம்பது.

இப்போது மனைவி சொல்கிறாள் அதே மணவாள முதலியாராக நடிக்க வேண்டுமென்று.

"ஹி ஹி!" என்றார் அப்புசாமி. "எதுனாப் போட்டுக் குடு! நடிச்சுப் பார்க்கிறேன். . . நடிக்கறதுன்னா கஷ்ட மில்லையா? அதுவும் நீ சொல்ற ஆள் எப்படி இருப்பானோ?"

"அச்சாக உங்க மாதிரியே! ஆனால் பணக்காரன். . ஊரிலே பெரிய மனிதராக வேஷம் போட்டுக் கொண் டிருக்கிறவர். . . அவருடைய மானம் போகிற மாதிரி நீங்கள் ஒரு காரியம் பண்ணணும். . ."

"வேட்டியைப் பறித்துக் கொண்டு வந்துடணுமா?"

"ஸில்லி! ஐயம் டாக்கிங் ஸீரியஸ்லி."

"என்ன பண்ணணும்? எது பண்றதுன்னாலும் சார்ஜ் ஆகும். என்னா பந்தயம் போட்டிருக்கேன். சம்பாதிக்காதவரை? ஒரு ஐந்நூறாவது ஆகும்."

"தௌஸண்ட் வேணாத் தர்ரேன். அட் எனி காஸ்ட் மிஸ்டர் முதலியாருக்கு நான் பாடம் கற்பிச்சாகணும். "

அப்புசாமி ஒப்புக்கொண்டார்.

அப்புசாமி வெஜிடபின் கட் லெட்டுகளில் ஏழெட்டை எடுத்துக்கொண்டார். அம்மானை ஆடுவது

போல மேலே வீசிப்போட்டு, ஒருதரம் கையைத் தட்டிவிட்டுச் சிலவற்றைப் பிடித்தார். சிலதை வாயைத் திறந்து வாயால் பிடிக்க முயன்றார்.

"அல்லாரும் ஜோராக் கையைத் தட்டுங்க... எப்படி ஐயாவோட மாஜிக்!"

எல்லாரும் சங்கடப்பட்டனர்.

அகல்யா சந்தானம் சிதாப்பாட்டியின் காதருகில் வந்து, "பிரசிடெண்ட்ஜி, ஆளைச் சீக்கிரம் அனுப்பிவிடறது தான் நல்லது. ஏற்கனவே பெரிய பீங்கான் தட்டுகளில் ஒரு டஜனும் கண்ணாடிக் கோப்பைகளில் அரை டஜனும் உடைத்துவிட்டார்..." என்றாள்.

சிதாப்பாட்டி, "கவலைப்படாதீர்கள்... நான் அவரை அனுப்பிவைக்கப் பார்க்கிறேன். டோன்ட் வொர்ரி..." என்று சொன்னவள் அப்புசாமியிடம் சென்றாள். "ப்ளீஸ்... மிஸ்டர் முதலியார், இப்படிக் கொஞ்சம் வர்ரீங்களா?" என்றாள்.

அப்புசாமி, (உன்னைக் கன் தேடுதே?" என்று) சொக்கினார்.

சிதாப்பாட்டி மெதுவாக அவரைத் தாங்கிப் பிடித்தவாறு மண்டபத்தை விட்டு அழைத்துச் சென்றாள். உதவிக்கு இரண்டொருவர் வந்தனர். "யாரும் வேண்டாம். அவர் இரிடேட் ஆயிட்டால் மறுபடி சங்கடம். நானே அவரைப் பக்குவமாகக் காரில் ஏற்றி அனுப்பி விடுகிறேன்..." என்று சொல்லிவிட்டுக் கீழே அழைத்துச் சென்றாள்.

"என்னம்மே: எப்படி ஐயாவோட குடிகார ஆக்டிங்? அதையே ஒரு சிவாஜி வாத்யாரோ எம்ஜியார் வாத்யாரோ பண்ணியிருந்தால் பத்தாயிரம் கேட்டிருப்பாங்க..."

"தாங் யூ ஸோ மச்! யு ஹாவ் டன் வெரி வொண்டர்ஃபுல்... நீங்கள் இனிப் புறப்படலாம்" என்றாள் சீதாப்பாட்டி.

"என்னது? பொக்குன்னு போகச் சொல்லிட்டே சீதே! சீதே! அய்யாவைக் கெவுனிக்கல. நீச்சல் குளம்கூட இருக்கு. சீதே! ஷோக்காக் குளிக்கட்டுமா?"

"மை குட்னஸ்!" என்று பயந்தாள் சீதாப்பாட்டி. "நீங்க இன்னும் அஞ்சு நிமிஷத்துக்குள்ளே புறப்பட்டுடணும்"

அப்புசாமி வக்கரித்துக்கொண்டார். அந்த "டைம் கியம் எல்லாம் ஐயாகிட்டே வெச்சுக்காதே. அட அட! என்ன நைஸா இருக்குது நீச்சல் குளம்... சீதே! ஒரே ஒரு வாட்டி!"

"ப்ளீஸ்! சொன்னால் கேளுங்கள். அசல் முதலியார் வந்தாலும் வந்துடுவார் கொஞ்ச நேரத்தில்... டோன்ட் யூ காச் மீ?"

"சரி, சரி, தொலைகிறேன்!" என்று முணுமுணுத்தவாறு அப்புசாமி புறப்பட்டார்.

சீதாப்பாட்டி அவரை அனுப்பிவிட்டு மறுபடி மண்டபத்துக்குள் போனாள்.

"என்ன, மிஸ்டர் முதலியாரை அனுப்பிவிட்டீர்களா. அப்பாடா! ஆசாமி என்ன கூத்தடித்துவிட்டார்..." என்ற அகல்யா சந்தானம் நிம்மதிப் பெருமூச்செறிந்தாள்.

சீதாப்பாட்டி தொண்டையைக் கனைத்துக் கொண்டாள். "டியர் ஃப்ரெண்ட்ஸ், மற்றும் இங்கு கூடியிருக்கும் மதிப்புக்குரிய விருந்தினர்களிடம் முதலில் என்னை மன்னிக்கும்படி வேண்டிக்கொள்கிறேன். மிஸ்டர் மணவாள முதலியார் துரதிருஷ்ட வசமாக கேலிச்

கூத்தாடிச் சில விரும்பத்தகாத நிகழ்ச்சிகள் நடந்துவிட்டன. அவர் சார்பாக அனைவரிடமும் நான் மன்னிப்புக் கோருகிறேன். மிஸ்டர் ஜென்டில்மேன் இவ்வளவு மோசமாக பிஹேவ் பண்ணுவார் என்பது கொஞ்சம்கூட எதிர்பாராதது. அவரிடம் எந்தவிதமான கெட்ட பழக்கங்கள் இருக்கின்றன என்பதை ஆராய நாம் இங்கு கூடவில்லை!

(கூட்டத்தில் சிரிப்பு)

நான் மிக ஆழ்ந்த வருத்தத்துடன் வித் ட்யூ ரெஸ்பெக்ட்ஸ் டு மிஸ்டர் முதலியார் - இதைத் தெரிவிக்கிறேன். மிஸ்டர் முதலியார் தாராளமாகக் குடிக்கட்டும். வேறு எந்தக் கெட்ட பழக்கங்கள் வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளட்டும். ஆனால் அவரை நான் எல்லோருடைய சார்பிலும் கேட்டுக்கொள்வது ஒன்றே ஒன்றுதான், 'எல்லாவற்றையும் வித் இன் யுவர் ஃபோர் வால்ஸ் வைத்துக்கொள்ளுங்கள்.' எனிஹௌ அவர் நம் சங்கத்துக்குப் பிரசைட் பண்ணினாரோ இல்லையோ "பண்ண ஒப்புக்கொண்டதற்கு நம் ஆழ்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வோம்."

சீதாப்பாட்டி பேசி முடித்ததும் எல்லாரும் கைதட்டி முடித்தனர். எல்லாத் தட்டுகளும் ஓசை அடங்கிய பிறகு ஹாலின் நுழைவாசலில் ஒற்றைத் தட்டாக ஒரு கையொலி கேட்டது.

அனைவரது பார்வையும் அங்கே திரும்பியது.

மிஸ்டர் மணவாள முதலியார் அமைதியாக நின்றிருந்தார்.

சீதாப்பாட்டிக்கு இதயம் படபடத்தது. அசல் முதலியார் வந்துவிட்டார்!

முதலியார் எல்லோரையும் பார்த்து அமைதியாகக் கைகூப்பி வணங்கினார். "எஸ்," "எஸ்," "உங்களைப் பார்த்ததில் ரொம்ப சந்தோஷம்." "நீங்களா? எப்போ வந்தீங்க?" என்று பலவிதமாகக் கேட்டவாறு அனைவரையும் கைகுலுக்கினார்.

அங்கத்தினர்கள் நினைத்துக்கொண்டனர். ஆசாமிக்குப் போதைக் கொஞ்சம் தெளிந்திருக்கிறது தான் கன்னா பின்னாவென்று நடந்துகொண்டதை உணர்ந்து இப்போதுதான் தெளிவாக தவறை நிறைவு செய்வதுபோல நடந்து காட்டுகிறார் போலும்.

சீதாப்பாட்டியும் அப்படியே நினைத்தாள்.

அவரிடம் சென்று "மிஸ்டர் முதலியார். ஆர் யூ ஆல் ரைட் நௌ?" என்று நாசூக்காக விசாரித்தாள்.

முதலியார் கேட்டார். "நீங்கதான் பா. மு. கழகத் தலைவியா!"

"எஸ்... நான்தான்."

"உங்களிடம் ஒரு நிமிஷம் தனியாகப் பேசணும். அந்த ரூமுக்கு வர்றீங்களா?"

சீதாப்பாட்டிக்கு மறுபடியும் பழையபடி படபடத்தது நெஞ்சு.

"இங்கேயே பேசலாமே? இஃப் யூ வோன்ட் மைண்ட்' என்றாள்.

"சரி, ரகசியமாக உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டியிருக்கிறது.

சீதாப்பாட்டி அவரிடம் குனிந்து கேட்டுக் கொண்டாள்.

முதலியார் ரகசியமாகச் சொன்னார்: "சீதே! அவச
அவசரமா அனுப்பிச்சுட்டியே! வெஜிடபின் கட்லெட்டை
கமகமன்னு அப்படியே விட்டுட்டுப் போயிட்டேன்.. ஒ
பேப்பரிலே சுற்றிக்குடேன்... அப்புறம் ஐஸ்கிரீம் கூட

சீதாப்பாட்டிக்கு மூச்சு நின்றுவிடும் போலா
விட்டது "மை குட்னஸ்? அப்படியானால் நீங்க போகலியா
இன்னும் ஐயோ!"

அதே சமயம் வாசலில் ஒரு படகுக் கார் வந்து
நின்றது.



# 13

ஓட்டல் சோழாவிலிருந்து அவசரம் அவசரமாக அப்புசாமியை அனுப்பி வைக்கச் சீதாப்பாட்டி முயற்சி செய்வதற்கும் வாசலில் படகுக் கார் ஒன்று வந்து நிற்பதற்கும் சரியாக இருந்தது.

திக்கென்றாகி விட்டது சீதாப்பாட்டிக்கு.

அப்புசாமியோ, இன்னமும் தனது நடிப்பாற்றலைப் பற்றியே நினைத்து மகிழ்ந்தவராக வந்து நின்ற காரையோ, அதில் வந்த மணவாள முதலியாரையோ கவனிக்கவில்லை. 'எப்படி ஐயாவோட இரண்டாம் தடவை நடிப்பு? மனசைத் தொட்டுச் சொல்லு நீயே ஏமாந்துட்டே இல்லியா அசல் முதலியார்தான் வந்துட்டார்னு. . . உன் காதுகிட்டே நான் கிசுகிசுன்னு சொன்னதும்தானே உனக்குத் தெரிந்தது" என்றார்.

சீதாப்பாட்டிக்கு எரிச்சலாக வந்தது. "ஸ்டுப்பிட்! அசல் முதலியார் இதோ இங்கே காரில் வந்தாச்சு. நான் முதலில் கிளம்பினபோதே புறப்பட்டிருந்தால் இந்த சங்கடம் ஏற்பட்டிருக்குமா? ஹேறால் பிஸினஸும் இப்போ அப்ஸெட் ஆகிவிடும் போலிருக்கே!"

அப்புசாமியின் கையைச் சட்டென்று பற்றி அவரை ஒருபுறமாகத் தள்ளித் தானும் மறைந்து கொண்டுவிட்டாள்.

மணவாள முதலியார், காரின் உள்ளிருந்து லேசாக ஒரு வினாடி ஜன்னல் வழியே எட்டிப் பார்த்ததுடன் சரி "சிங்காரம், காரை விடப்பா. . . " என்றார்.

ஸ்டியரிங்கைப் பிடித்திருந்த வக்கீல் சிங்காரத்துக்கு ஆச்சரியமாயிருந்தது. "என்ன மணவாளன், உள்ளே போகலையா?"

மணவாள முதலியார் சிரித்தார். "உன் மனைவி ராது குறும்புக்காக அப்படிச் சொல்லியிருக்கலாம்."

"நோ. நோ. அவள் குறும்பு செய்கிறவள்தான். ஆனால் இந்த மாதிரி ஓட்டல் சோழாவில் கலாட்டா பண்ணுகிறாய் என்றெல்லாம் கற்பனை பண்ணிக் குறும்பு செய்கிற அளவுக்கு அவளுக்குத் தெரியாது; உன் மாதிரி யாரோ ஒருத்தர் வந்து அங்கே கலாட்டா பண்ணிக் கொண்டிருக்கிறானாமே. அவனைப் பிடித்து..."

"அதில்லே... ஹார்ட் கொஞ்சம் வலிக்கிற மாதிரி இருக்கு. எனக்கு ஏற்கெனவே ஒரு அட்டாக் வந்தாயிற்று. நீ பேசாமல் வண்டியை ஓட்டு. வீட்டிலே என்னை இறக்கி விட்டுவிட்டு..."

வக்கீல் சிங்காரத்துக்கு மனசு சமாதானம் ஆகவில்லை. மனைவி ராது அவ்வளவு சீரியஸாகச் சொன்னது எப்படிக் குறும்பாக இருக்க முடியும்? ஏன் முதலியார் இறங்கி சோழாவுக்குள் நுழையவில்லை? திடீர்னு இருதயவலி என்கிறானே. காரைச் செலுத்தினார்.

ஓட்டல் சோழாவில் ஒரே ஒரு வினாடிதான் முதலியாரின் கழுகுக் கண், சட்டென்று ஒளிந்துகொண்ட அப்புசாமியைப் பார்த்துவிட்டது. தன்னைப் போலவே அச்சாக ஓர் உருவத்தைப் பார்த்ததும் முதலியாருக்கு முதலில் ஏற்பட்டது அதிர்ச்சி, கோபம், ஆத்திரம். ஆனால் அடுத்த வினாடியே அவர் மனசுக்குள் சகுந்தலா வரதனின் உருவம் தோன்றிற்று. ஒரு திட்டம் உருவாகியது. 'இதுவும் நல்லதற்குத்தான்... என்னைப் போலவே ஓர் உருவம் இருப்பது நான் செய்த அதிருஷ்டம்தான்' என்று எண்ணிக் கொண்டபோது அவர் முகத்தில் குரூரமான ஒரு புன்னகை படர்ந்தது.

மறுநாள்.

"சீய்தே!" கொஞ்சலாகக் கூப்பிட்டார் அப்புசாமி.

சீதாப்பாட்டி யாருக்கோ டயல் செய்து கொண்டிருந்தாள்.

"யேய் சீதே! இங்கே வந்து கண்டுகினு போன்னா! ஐயா எந்த மாதிரியான படுக்கையிலே புரள்கிறார்... வந்து பாரு!"

"ப்ளீஸ்! கொஞ்சம் இருங்கள்... பகலிலே என்ன படுக்கை. தட் இஸ் டூ பேட்..." என்றாள் டெலிபோனைச் சுழற்றியவாறே.

ஒரு வழியாக அவள் டயல் செய்த நம்பர் கிடைத்து விட்டது.

"ஹலோ..." என்றாள் இனிமையாக. "இஸ் இட் மிஸ்டர் முதலியார், ஐயம் டாக்கிங் டு..."

"ஆமாம். முதலியார்தான் பேசறேன்... நீங்க?"

"மிஸ்டர் முதலியார், ஐயம் ஸோ ஸாரி..."

"நீங்கள் யாரு?"

"யாராயிருந்தால் என்ன. நான் ஒரு சபாவோட செகரட்டரி. வந்து... நீங்க ஓட்டல் சோழாவில் விதம் விதமா ஏதோ டான்ஸ் ஆடினீர்களாமே... ஊரே பேசிக் கொள்கிறது. மிஸ்டர் முதலியார் எங்கள் சபாவுக்கு வந்து பெர்ஃபாமன்ஸ் தருவீங்களா. இவ்வளவு வயசான காலத்தில் நீங்கள் ஆடறது ஆச்சரியம்தான்."

மறுமுனையில் முதலியார் பல்லைக் கடித்துக் கொண்டார். "நீங்க யார் பேசறது?"

"நானா, நான் மட்டுமா பேசறேன். ஊரே பேசுகிறது. ஆமாம், தெருவிலே இப்போ ஹெல்மட் போட்டுக்கிட்டுத்தான் நீங்க நடக்கறீங்களாமே. தலைகாட்ட முடியலையாமே.

இஸ் இட் எ ரிபேக்ட்", சிதாப்பாட்டி இளக்காரமாகச் சிரித்தபடி கேட்டாள்.

முதலியார் மறுமுனையில் டெலிபோனை டொக் கென்று வைப்பது கேட்டது.

சிதாப்பாட்டி டெலிபோனை வைத்துவிட்டுச் சிரித்தாள். "ரோஷமுள்ள ஆளாயிருந்தால் மானம் போய் நாக்கைப் பிடுங்கிக் கொண்டிருக்க வேண்டும்."

"சிதே!" அப்புசாமி மறுபடி கூவினார்.

"எஸ்!" என்றவாறு அப்புசாமியின் அறைக்குள்ளே நுழைந்த சிதாப்பாட்டிக்கு அவர் உல்லாசமாகப் படுத்திருந்த நிலை அதிர்ச்சியைத் தந்தது.

"மை குட்னஸ்! என்னது இது. படுக்கை பூராவும் ரூபாய் நோட்டைப் போட்டுப் பாத்திக் கொண் டிருக்கிறீர்கள்?"

"ஐயா பணத்திலே புரள ஆரம்பித்துட்டேன்!"

"மைகாட்! எழுந்திருங்க . எழுந்திருங்க! டூ ஸில்லி! இதற்குத்தான் நான் தந்த தௌஸன் ருபீஸுக்கும் ஒன் ருபி நோட்டாகக் கேட்டு வாங்கிட்டீங்களா?. . "

அவரது படுக்கையிலிருந்த ரூபாய் நோட்டுக்களைச் சிதாப்பாட்டி குனிந்து அடுக்கினாள். "உங்ககிட்டே இதற்குத்தான் நான் ரூபாய் கொடுக்கறதில்லை. நாலு காசைச் சேர்த்தாற்போல் பார்த்தால் உங்களுக்குத் தலைகால் புரியாது. ஸீ . . இந்த மாதிரியா செய்வது. . . நோட்டெல்லாம் இப்படிக் கசங்கி . . பணத்தை இப்படி இன்ஸல்ட் பண்ணக் கூடாது. . . ."

"சிதே!" என்றார் அப்புசாமி காட்டமாக. "நீ இதுதான் சாக்குன்னு நோட்டைப் பொறுக்கிட்டுப் போயிடாதே! ஐயாவோட சபதம் இன்னும் இருக்கு. பதினையாயிரத்திலே இப்போதானே ஆயிரம் சம்பாதிச்சுக் காட்டியிருக்கேன்!"

சீதாப்பாட்டி புன்னகைத்தாள்.

சகுந்தலா வரதன் என்ற பணக்காரியை நன்கொடை தருவாள் என்று பா. மு. கழகத்துக்குத் தான் கூட்டி வந்ததையும் அதைத் தொடர்ந்து ஏற்பட்ட ரகளையையும் சீதாப்பாட்டி நினைத்துக் கொண்டாள். இன்னும் இவர் அதை மறக்கவில்லை போலும். இவ்வளவு டீப்பாக எடுத்துக் கொண்டிருக்கிறார். ரோஷக்காரர்தான்!

அப்புசாமி உற்சாகமாக எழுந்துகொண்டார். படுக்கையிலிருந்த ரூபாய் நோட்டுக்களைத் தானே பொறுக்கிப் பாக்கெட்டில் போட்டுக்கொண்டு "நம்ம ரசம் பீமா இவுனுகளைக் கண்டுக்கினு வர்றேன். பாத்து நானாச்சு..." என்று வெளியே கிளம்பினார்.

சகுந்தலா வரதன் தலையணைகள் மீது குப்புறச் சாய்ந்து கொண்டாள். தொடர்ந்து சுவாசப் பையில் ரகளை. கலவரம் தொண்டைக் குழாய்க்கும் பரவியது. நிலைமை கட்டுமீறிப் போகும்போது ஆயுதத்தைக் கையில் எடுக்க சகுந்தலா வரதன் தயங்கியதில்லை.

சிறிது சிரமத்துடன் தலையணைக்கடியிலிருந்த 'வென்டோலின்' மருந்துக் குப்பியை எடுத்து வாயருகில் வைத்து 'பிஸ்ஸக்!' என்று மருந்தை நாலாவது தரமாக அமுக்கிக் கொண்டாள்.

மருந்து பீய்ச்சிக் கொண்ட பிறகு சிறிது தேவலாம் போலத் தோன்றியது.

சூடாகக் கொஞ்சம் காப்பி சாப்பிடலாமென எண்ணினாள். படுக்கை அருகிலிருந்த ஆட்டமாடிக் மணியை அழுத்தினாள். மூச்சு இரைக்கும் சமயம் பேசமுடியாமல் தவிக்கும்போது சமையல்காரியை அழைக்க இந்த மணிதான் அவளுக்கு உதவி.

சகுந்தலா வரதனுக்கு இரண்டு விஷயங்களுக்கு எரிச்சலாக வந்தது. கூப்பிட்டதும் சமையல்காரி வரவில்லை.

இரண்டு. மின்சார விசிறி கொஞ்சம் வேகமாகச் சுழன்றால் பரவாயில்லை போலிருந்தது. வியர்க்கத் தொடங்கியதால் உடம்பு புழுங்கியது. மேலும் மணியைச் சற்று அழுத்தி விட்டுக் கோபத்துடன் டீபாயின் மேலிருந்த ஒரு டம்ளரைக் கீழே தள்ளி விட்டான். அந்தச் சத்தம் கேட்டாவது சமையல்காரி வரட்டுமே என்று. 'புதுச் சமையல்காரியாக சீதாப்பாட்டி என்பவளைச் சேர்த்தது சேர்த்தோம். அவளுக்குக் காது கீது செவிடா என்பதைத் தெரிந்து கொள்ளாமல் சேர்த்துக் கொண்டு விட்டோமே என்று தோன்றியது.

சகுந்தலா வரதனுக்குச் சீதாப்பாட்டி என்ற புதுச் சமையல்காரக் கிழவியை ஓரளவுக்குப் பிடித்தேயிருந்தது. லொடலொடவென்று சமையல்காரியின் நாட்டுப்புறப் பேச்சு அவளைக் கவர்ந்தது. வேலையெல்லாம் நன்றாகச் செய்கிறாள் என்ற அபிப்ராயமிருந்தது. எஜமானியிடம் மரியாதை உண்டு. உட்காரச் சொன்னால்கூட உட்காராமல் நின்றேதான் பேசுவாள். அதே சமயம் அவளைத் தனக்குச் சம அந்தஸ்தாகப் பாவித்து, 'என்ன மாமி, நீங்களே சொல்லுங்க' என்று உரிமையோடும் பேசுவாள். ரசகுண்டுவின் பாட்டியான சீதாப்பாட்டி அங்கு வேலைக்குச் சேர்ந்து சில தினங்களே ஆகியிருந்தன.

நாலு மணிக்கு மணவாள முதலியாரை ஒரு முக்கிய விஷயமாகக் கலந்தாலோசிக்க வரச் சொல்லியிருந்தது ஞாபகத்துக்கு வந்தது. உடம்பு இருக்கும் நிலையைப் பார்த்தால் அவரைச் சந்திக்க முடியாது போலிருக்கிறதே?

"என்ன அம்மா விழுந்தது? அணிப்பிள்ளை கிணிப் பின்னை வந்தா என்ன? வந்தப்பவே பார்த்தேன். கொன்னை அணிப்பிள்ளை வெளையாடறது. பங்களா குளுகுளுன்னு சோலையிலே கட்டின அரண்மனை மாதிரி இருக்கிறதோ இல்லையோ . . ." சமையலறையிலிருந்து ஒல்லியாக நடமாடும் உலர்ந்துபோன வெண்டைக்காய்

மாதிரி நீளமூக்கு கொண்ட சமையல்கார கிதாப் பாட்டி வெளியே வந்தாள்.

சகுந்தலா வரதனால் பேச முடியவில்லை. காதைத் தொட்டுச் சாடை காட்டி, "கூப்பிட்டேனே. காதில் விழவில்லையா?" என்றாள் சைகையால்.

"நல்லாயிருக்கே நீங்க சொல்றது. எனக்கு அதெல்லாம் பிடிக்காது. சில கம்மனாட்டிகள் அப்படிப் பண்றா. வீட்டுக்காரர் போனாபுட்டு, 'தோடுதானே. தோஷமில்லை'ன்னு மெதுவாக் காதுலே மட்டும் முதலில் ஒண்ணைப் போட்டுக்கறது. அப்புறம் கொஞ்ச நாள் கழித்து ஒற்றைவடம் சங்கிலிதானே... தங்கத்துக்கு தோஷமில்லை'ன்னு ஒரு வடம் சங்கிலி போட்டுக்கறது. அப்புறம் மெதுவா ஒற்றை வளையல். இப்படியே போனாத் தாலிகூடக் கட்டையிலே போறவா கூட்டிக்கொண்டு விடுவா..."

"கொஞ்சம்... காப்பி... சூடா" என்றாள் சகுந்தலா வரதன் மூச்சு இரைக்க.

"திமாப் போட்டுக்கொண்டு வர்ரேன்... அடப் பாவமே... இதைச் சொல்லவா இப்படி அவஸ்தைப் பட்டேங்க? ஒண்ணு மனசுலே வெச்சுக்கோங்க... ஒரு வீட்டுக்கு உழைக்க வந்துட்டேன்னா ஒருத்தர் ஒருத்தர் மாதிரி இந்தத் திரிசமன் எல்லாம் பேசமாட்டேன். மங்கு மங்குன்னு மாடாட்டம் உழைப்பேன். எங்க ரசம்கூடச் சொல்லுவான். 'என்ன பாட்டி.' ஒரொரு சமையல்காரி காப்பிப்பொடி சர்க்கரையெல்லாம் சுருட்டிக்கொண்டு வர்றா... நீ வெறும் கையோடயே வர்றியேன்னு... ஒருத்தி ஒருத்தி துளித் தலையைக் காலை வலிச்சாகூட லீவு சொல்லிவிட்டு வந்துடுவாள். நீ என்னடான்னா இடுப்பைக் சுத்திரிப்பிடியா வாயு பிடிச்சாக்கூட லீவு போட மாட்டேன்' என்கிறியே என்பான். 'அட போடா,

தேய்ஞ்சகட்டைதான் மணக்கும் என்பேன். நமக்குக் கட்டுப்படி ஆகலையா, வாயை விட்டு 'ஒரு இருபது ரூபாய் சேர்த்துப் போட்டுக் குடுங்கன்னு' கேட்டுடலாம். அது தப்பில்லே... அதுக்குன்னு உழைக்கறதிலே வஞ்சனை பண்ணப்படாது... இதோ நொடியிலே போட்டுக் கொண்டு வந்துடறேன்... காப்பி"

காப்பி சாப்பிட்டதும் சகுந்தலா வரதனுக்குக் கொஞ்சம் தெம்பு ஏற்பட்டது.

சகுந்தலா வரதன் என்ற மூதாட்டி பிரபல டாக்டராக இருந்தவள். பல லட்சக் கணக்கான ரூபாய் பெறுமான நகைகள் அவளிடம் உண்டு. ராத்திரியில் கதவைச் சாத்திக்கொண்டு எல்லா நகைகளையும் போட்டுக் கொண்டு கண்ணாடியில் பார்த்துப் பார்த்து பெருமூச் செறிந்து கொண்டு விபத்தில் இறந்துபோன தன் வக்கீல் கணவனை 'பாவி மனுஷா... உபத்திரவம் கொடுத்துக் கொண்டு, குடியும் கூத்தும், ரேசுமாய்த் திரிந்து கொண்டிருந்தாலும் உயிரோடு நீ இருந்து தொலைக்கக் கூடாதா? அநியாயமாய்க் கார் ஆக்ஸிடண்டில் அல்பாயுசில் போய் என்னை இந்தக் கோலத்தில் வைத்து விட்டுப் போய்விட்டாயே?" என்று நொந்துகொள்வாள்.

படுக்கைக்குப் பக்கத்திலிருந்த டெலிபோன் மணி அடித்தது.

கை நீட்டி ரிஸீவரை எடுத்தாள்.

பெயரைச் சொல்லாமல் கரகரத்த குரல் கேட்டது. "மிஸஸ் சகுந்தலா வரதனா பேசுவது?"

"ஆமாம்."

"நான் உங்கள் நலம் விரும்பும் குரல். உங்கள் பங்களாவை இன்றோ நாளையோ வருமான வரிக்காரர்கள்

ரெய்ட் பண்ண வரக்கூடும் என்று தெரிகிறது. நீங்கள் ஜாக்கிரதையாக இருங்கள்."

"மிஸ்டர்.... நீங்கள் யார்?" என்று பதறினாள்.

மறுமுனையில் போனை வைத்துவிட்டார்கள்.



## 14

டெலிபோன் அருகிலிருந்த ஒற்றைச் சோபாவில் ஓய்வாகச் சாய்ந்தவாறு கால்களை மிருதுவான குஷன் மோடாவின்மீது நீட்டிக்கொண்டு, மார்பிலும் முகத்திலும் முகத்தை உரசிய ஜூடோவைத் தடவிக் கொடுத்தவாறு மணவாளமுதலியார் சிந்தனையில் இருந்தார்.

எஜமானருக்கு ஜூஸ் எடுத்துக்கொண்டு வந்த முனியப்பன் தயக்கமாக ஒருபுறம் நின்றான். 'ஜூடோவுக்கு இந்தமாதிரி எஜமான் இடம்கொடுத்துக் கொஞ்சுகிறாரே, அன்றைக்கு ஒருநாள் அவரையே கடித்துக் குதறிவிட்டதே. அதைப் போல் மறுபடி எதாவது விபரீதம் ஆகிவிடப் போகிறது.' என்று எண்ணிக்கொண்டவன், "ஜூடோ! வா இப்படி," என்று லேசாக அதட்டினான்.

மணவாள முதலியார், "அதுபாட்டுக்கு இருக்கட்டும்.." என்பதுபோலச் சாடை செய்துவிட்டு ஜூடோவைத் தடவிக் கொடுத்தவாறே யோசனையிலாழ்ந்திருந்தார்.

சகுந்தலாவரதன் இவ்வளவு நேரம் எந்த மாதிரியான பதட்டத்திலிருப்பாள்? டெலிபோனில் 'ரெய்ட்' பற்றிய எச்சரிக்கைச் செய்தி கேட்டதும் கையும் காலும் உதறிக் கொண்டிருக்கும். அவளால் படுக்கையில் ஒரு நிமிடம் உட்காரக்கொள்ள முடியாது. அரக்கப் பரக்க பீரோவைத் திறப்பாள், மூடுவாள்.

முதலியாரின் முகத்தில் ஒரு புன்னகைக் கீற்று லேசாகத் தெரிந்தது.

அறைக் கதவைச் சாத்தித் தாளிட்டுவிட்டு மூச்சு மேலும் கீழும் இரைக்க அவள் இரும்புப் பீரோவைத் திறந்து ரகசிய லாக்கரிலுள்ள நகைகளையெல்லாம் அள்ளி எடுப்பாள். மறுபடி அங்கேயே வைப்பாள். திரும்ப எடுப்பாள். அவைகளை எங்கு எப்படிப் பத்திரப்படுத்துவது என்று தெரியாமல் தவிப்பாள்.

முதலியார் எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்த டெலிபோன் மணி அடித்தது. ஜூடோவைத் தடவிக் கொடுத்தவாறே வேலைக்கார முனியப்பனைக் கூப்பிட்டார். "டெலிபோனை எடுத்துக் கேளு. ஒரு அம்மா பேசுவாங்க. நான் வெளியே போயிருப்பதாகச் சொல்லு. "எப்போ வருவார்னு தெரியாதுன்னு சொல்லு.

முனியப்பன் அவர் சொன்னபடியே டெலிபோனில் பதில் சொல்லிவிட்டு நகர்ந்தான்.

குறைந்தது ஒரு நாலைந்து தடவையாவது சகுந்தலா வரதன் அவரைக் கூப்பிட வேண்டும். 'பதட்டம் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகரிக்கிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு நல்லது' என்று எண்ணிக்கொண்டார். பிறகு தன் நண்பரான வக்கீல் சிங்காரத்துக்குப் போன் செய்தார்.

"என்ன சிங்காரம்! டிரேஸ் அவுட் பண்ண முடிந்ததா?"

"உன் சமாசாரம் தும்பை விட்டு வாலைப் பிடிக்கிறது தான்... ஓட்டல்லே மடக்கிப்போட்டிருக்காமல்..."

"யாராம் அது? கெட்டிக்காரனாச்சே நீ? இன்னேரம் கண்டுபிடித்திருப்பாயே!"

"நீ ஆண்டு நிறைவுக்குத் தலைமை தாங்குவதாக இருந்ததே பா. மு. கழகம். பாட்டிகள் முன்னேற்றக் கழகம். அதனுடைய பிரசிடெண்ட் சீதான்னு ஒரு அம்மாள். அவளுடைய புருஷனாம். அந்த ஆசாமி வீடு

தூங்கும்பாக்கத்திலே. அரை லூஸ் மாதிரி இருப்பானாம் ஆசாமி."

"ஓ. சரி. ரொம்ப தாங்க்ஸ்"

அப்புசாமியை ஒரு முறை பார்த்து வைப்பது நல்லது என்று தோன்றிற்று மணவாள முதலியாருக்கு.

"உஸ்ஸ்! அம்மாடி வெய்யிலே! ஆத்தாடி வெய்யிலே! சீதே! இங்கே பாரு என்ன வாங்கிட்டு வந்திருக்கோம்னு!" அப்புசாமி கூவினார்.

சீதாப்பாட்டி அப்போதுதான் தன் மத்தியானக் குட்டித்தூக்கத்துக்காகச் சிறிது கண்ணயர்ந்திருந்தாள்.

'ஏதாவது உளறுவார். அவருக்கென்ன வேலை?' என்பது போல ஒரு தரம் எரிச்சலுடன் புரண்டு விட்டு மௌனமாக விட்ட இடத்தில் தூக்கத்தைப் பிடிக்க முயற்சி செய்தாள்.

மூன்று நிமிஷத்தில் தடால் என்று சமையலறையில் ஒரு பாத்திரம் பேரொலி எழுப்பிக் கொண்டு கீழே விழுந்தது. அதை தொடர்ந்து கசமுச கசமுச என்று ஏதோ சத்தங்கள்.

"சே சே! சே! ஆஃப்டர் ஆல் ஒரு குட்டித் தூக்கம் போடமுடியாது இந்த வீட்டில்? வாட் த ஹெல் ஆர் யூ டூயிங் இன் த கிச்சன்?"

சீதாப்பாட்டி எழுந்து கொண்டாள். அதற்குள் சமையலறையிலிருந்து அப்புசாமி, "நீ பாட்டுக்குத் தாச்சிக்கோ. தாச்சிக்கோ. உனக்கு ஒண்ணுமில்லே. இன்னும் அஞ்சுநிமிஷத்திலே பாரு . . நீ அசந்துடப் போறே!" என்று குரல் கொடுத்தார். அடுத்த வினாடி 'கரகரகர்ரக். . . கர்ரக் கர்ரக் . . . கரகர்ராக். . . ராக். . . கர்ராக்' என்று பலவித வினோத சத்தங்கள் எழும்பின.

சீதாப்பாட்டி பதறி அடித்துக் கொண்டு சமையலறைக்கு விரைந்தாள். பார்த்த காட்சி தூக்கிவாரிப் போட்டது. அப்புசாமி சமையலறைக்குள் ஒரு குட்டிப் பட்டாளத்தையே கூட்டி வந்திருந்தார். ரசகுண்டு, பீமாராவ், இன்னும் சில கிரிக்கெட் தோழர்களான பொடியன்கள்.

சீதாப்பாட்டிக்குத் தாங்கவில்லை. "மை குட்னஸ், என்னத்துக்கு இந்தக் கூட்டம்? கெட் அவே ஃபர்ஸ்ட், என்னது இது! சர்க்கரை டப்பா திறந்து கிடக்கிறது! எதற்கு இவ்வளவு ஐஸ்! யார் உங்களை ஃப்ரிஜ்ஜைத் திறக்கச் சொன்னது! மைகாட்! சர்க்கரை விற்கிற விலையில்... க்ளியர் ஆஃப் எவரிபடி."

"சீதே!" என்றார் அப்புசாமி அவசரமாக. "கிரிணி சீதே கிரிணி! வெறும் கிரிணிகூட அல்ல... ஜாங்கிரிணி. அப்படியே ஸல்லுனு ஒரு ஐஸ்போட்டு ஜில்லுனு ஆளுக்கு ஒரு டம்ளர் இறக்கிக்கினு இதோ போயிடறோம் - உனக்கும் ஒரு டம்ளர் கொடுத்திடறோம். பீமா பிரமாதமா ஐஸ் போடுவான்."

பீமாராவ் ஒரு ஆட்டு மந்தையையே திருடின கள்ளனைப்போலத் திருதிருவென்று கையில் இரண்டு பெரிய கிரிணிப் பழத்துடன் சீதாப் பாட்டியைப் பரிதாபமாகப் பார்த்தான். "இல்லே அவ்வா... தாத்தன் தான் பீமாபீமா... ஜூஸ் மாடிக் குடுடான்னு சொன்னார். நான்கூட வேண்டாம்னுதான் சொன்னேன்... நீ மாடுடான்னார்."

"அவர் மாடுன்னார்... நீ எருமைன்னே" சீதாப்பாட்டி மிக்ஸியின் அருகே எரிச்சலுடன் சென்று பார்த்தாள்.

"போச்சே! இப்படியா சர்க்கரையை அள்ளித் திணிக்கத் திணிக்கப் போடுவது? பழத்தை நறுக்கிப்

போடாமல் இவ்வளவு பெரிய துண்டாப் போட்டு . . சர்க்கரை ஹீட்டாகி பாருங்க . . மோட்டார் பற்றிக் கொண்டு காயில் பொசுங்கற நாற்றம். . . ஆஃப் பண்ணித் தொலைங்க முதலில். நீங்களும் உங்க ஜூஸும் மிக்ஸியை உங்களை யார் ஹேண்டில் பண்ணச் சொன்னது?"

அப்புசாமி, "ஹிஹி! சீதே . . . வந்து சீதே! சர்ப்பத் வண்டிக்காரன்கிட்டே ஆளுக்கு ஒரு லோட்டா குடிச்சோம். ஆளுக்கு எட்டணா வாங்கிட்டான். ரசகுண்டு தான் தாத்தா நாலு கிரிணி வாங்கி உங்க வீட்டு மிஷினிலே ஜூஸ் போட்டா நாற்பது டம்ப்ளர் வரும்னு. பசங்களையும் கூட்டி வந்தேன்."

சீதாப்பாட்டி மூக்குக் கண்ணாடியை மேலுக்குத் தள்ளிவிட்டுக் கொண்டு ரசகுண்டுவை ஒரு முறை முறைத்துப் பார்த்தாள். "இல்லே பாட்டி . . . வந்து . . . தாத்தாதான் டே . . . ரசம். . . எனக்கு ஆசையா இருக்குன்னு வாங்கிட்டு இப்போ பழியை டமால்னு என்மேல் போடறார்."

அப்புசாமி உடனடியாக ஒரு மறுப்பு அறிக்கையை மனைவியிடம் தாக்கல் செய்தார். இந்தக் கலாட்டாவில் பட்டாளத்தினர் ஒவ்வொருத்தராக நழுவிவிட்டனர். அதே சமயம் புறக்கடைப் பக்கமிருந்து அப்புசாமியின் தடையுடை பாவனைகளைக் கவனித்து மனத்தில் பதிய வைத்துக் கொண்டு மணவாள முதலியார் விரைந்து சென்று தூரத்திலிருந்த படகுக் காரில் ஏறிப் புறப்பட்டார்.

மணவாள முதலியார் சகுந்தலா வரதன் வீட்டு பஸ்ஸரை அழுத்தியபோது மணி ஐந்திருக்கும்."

நெடுநேரம் அழுத்திய பின்னும் கதவு திறக்காமல் இருக்கவும் அவருக்கு என்னென்னவோ விபரீதமான எண்ணங்கள் தோன்றிவிட்டன.

டெலிபோனில் வந்த செய்தியைக் கேட்டதும் ஒருகால் ஒரேடியாக மாரைக் கீரை அடித்துக் கிழவிக்கு விபரீதமாக ஏதாவது ஆகியிருக்குமோ?

கதவு திறந்தது. சமையல்காரக் கீதாப்பாட்டியின் முகம் மலர்ந்தது.

"நீங்க. . நீங்க. . நீங்களா? அப்புசாமி மாமாவா! அட எங்க அப்புசாமி மாமாவா? ஆளே மாறிட்டீங்களே. வெள்ளைக்காரத் தொரை மாதிரி எப்படி மாறிட்டீங்க. ஐயா, என் கண்ணே பட்டுடும் போலிருக்கு! வாங்கோ வாங்கோ - உள்ளே வாங்கோ. இங்கேதான். . வந்து. . என்னவோ கால வித்தியாசம். சமைச்சுப் போட்டுட்டிருக்கேன். . நீங்க வாங்கோ மாமா. . . ஐயோ. . . திருஷ்டிபட்டுடும் போலிருக்கு உப்பு மிளகாய் சுற்றிப் போடறேன்." அடி அம்மாடி! கப்பலாட்டம் கார்! உங்க காரா மாமா? என் கண்ணை நம்ப முடியலே மாமா. ஏதானும் லாட்டரி சீட்டுலே லக்கி பிரைஸ் அடிச்சீங்களா. எனக்குத் தெரியாத போயிட்டுதே மாமா? என்னவோ அந்தக் கிழவிகிட்டே கஷ்டப்பட்டுக் கொண்டு, நாக்குச் செத்து, நான் பண்ணிப்போட்ட சப்பாத்தியைச் சாப்பிட்டுப் புகழ்வீங்களே அந்த நாளிலே. அதையெல்லாம் நினைச்சுப் பார்க்கறேன். . அந்த மாமாவா நீங்க?"

மணவான முதலியார் கொஞ்ச நேரத்துக்குக் குழம்பிப் போனார். 'இது என்னடா இது. . . எதிர்பாராத உபத்திரவம்' என்று அப்புறம் சமாளித்துக் கொண்டு "ஆமாம் ஆமாம் நான் அப்புசாமி மாமாதான். . நீங்க . . வந்து. . . கொஞ்சம் மறந்து. . ." என்றார்.

கீதாப்பாட்டி ஒரு சொடுக்கு சொடுக்கி மோவாயில் கையை வைத்துக் கொண்டாள். "என்னை யார்னே உங்களுக்கு மறந்து போச்சா. . ஹூம்" அவளுக்குத் துக்கம்

தொண்டையைக் கரகரக்க வைத்து, முந்தானையைக் கண்ணில் ஒத்திக்கொண்டு "லோகத்திலே புதுப் பணக்காரங்கள்ளாம் எப்படி நடந்துப்பாளோ அந்த மாதிரிதானா கடைசியிலே நீங்களும் மாமா. உங்களை நான் ரொம்ப ஒசத்தியா நினைச்சுட்டது என் தப்புத்தான், உங்களுக்கு உடம்பை அந்த நாளிலே செருப்பாக தைச்சுப் போட்டு உழைச்சேன் பாருங்கோ... இப்போ அதே செருப்பாலே என்னை அடியுங்கோ மாமா அடியுங்க... சிதேக் கிழவிகிட்டே இருந்து உங்களைக் காப்பாற்றி, உங்களுக்கு மனசுக்குப் பிடிச்ச ஆப்பிரிக்க ராஜகுமாரியை உங்களுக்குக் கல்யாணம் பண்ணி வைக்கறதுக்காக லோலோன்னு அலைஞ்சேனே அலைச்சல்... உங்களுக்கு இப்போ அந்தஸ்து வரவும் மறந்துட்டீங்க..."

மணவாள முதலியார் சமாளித்தார். "ஆமாம் ஆமாம், சிதேக் கிழவி ரொம்பப் பொல்லாதவள்."

"அம்மாடி!" என்றாள் சிதாப்பாட்டி முகம் மலர. பச்சைக் கற்பூரம் போட்ட பானைத் தண்ணீர் மாதிரி ஜில்லுனு இதையாவது சொல்றீங்களே! இவ்வளவு கோடீஸ்வரனான பிறகும் அந்த சிதேக் கிழவி உங்ககிட்டே கொழுப்பாத்தான் நடந்துக்கிறாளோ? மகாத் திமிர்! அவள் திமிரை உங்களால் அடக்க முடியலியே மாமா. அதுதான் எனக்கு ரொம்ப வருத்தம். உங்க மோவாயிலே இடிக்கிற மாதிரி எத்தனை பேச்சுப் பேசி இருப்பாள்? உள்ளே வாங்கோ... எஜமானியம்மாகூட இல்லே. வெளியிலே எங்கேயோ போயிருக்கிறாள்."

மணவாள முதலியார் அதிர்ச்சி அடைந்தார். "எஜமானியம்மா இல்லையா! வெளியிலே போயிருக்கிறாளா?"

"ஆமாம். யாரோ கட்டையிலே போறவன் மணவாள முதலியாராம்... அவனோட பேசணும்னு டெலிபோன்

குழாயைத் திருப்பு திருப்புன்னு திருப்பிட்டு இருந்தாள் அவன் எங்கேயோ ஒழிஞ்சுட்டான் போலிருக்கு. அவசரமா அவனைப் பார்க்கணும் போலிருக்கு. அவன் வரலையா? பாவம் உடம்பு வேறு சரியில்லை. இல்லைன்னு மூச்சு வேறு இரைக்கறது? எங்கேயோ புறப்பட்டுப் போய் இருக்கிறான். நீங்க உள்ளே வாங்க மாமா. ரொம்பத் தான் கிராக்கி பண்ணிக்காதீங்க. . . அப்புறம் நான் ஒன்னு அழுதுடுவேன் இங்கேயே உட்கார்ந்து."

மணவாள முதலியாருக்குச் சங்கடமாகிவிட்டது. பலவிதமான சிந்தனை அவரை ஆட்கொண்டது. சகுந்தலா வரதன் வெறுமே புறப்பட்டுப் போனாளா? அவள் போனது தன்னைப் பார்க்கத்தானா? அல்லது வேறு யாரையாவது பார்க்கக் கிளம்பியிருப்பாளா? சரியா நாலு மணிக்கே வராதது பிசகோ?

இந்தச் சமையல்காரக் கிழவியை வாயைக் கிளறிப் பார்ப்போம் என்று எண்ணிக்கொண்டு உள்ளே நுழைந்தார்.

"உட்காருங்கோ . . . உட்காருங்கோ." கிழப்பாட்டி அவருக்கு ஆசார உபசாரம் செய்தாள். "என் கையாலே ஒரு டம்ளர் தீர்த்தம் நீங்க சாப்பிட்டு எத்தனை நாளாச்சு? உடம்பே மினுமினுன்னு. மாமா . . . ஆயிரம் சொல்லுங்கோ . . . பணத்துக்கே ஒரு மினுமினுப்பு இருக்கு மாமா . . . கொஞ்சம் கெட்டித் தயிரைக் கடைஞ்சு மோர் கொண்டு வரேன். சாப்பிடறீங்களா? துளி மிளகு சீரகம் தட்டிப் போட்டுட்டு வரட்டுமா? என்னவோ குபேரனாட்டம் வந்திருக்கீங்க. நான் குசேலனாட்டம் உபசரிக்கிறேன். என் பேத்தி ருக்குமணி பாவம், ஒரு ரெண்டு பவுனில் சங்கிலி சங்கிலின்னு பிடுங்கி எடுத்துக் கொண்டிருக்கிறாள். நல்ல காலம் வரும்டி. செய்து போடறேன்னேன். . . "

''சங்கிலிதானே? என்ன பிரமாதம்,'' என்றார் முதலியார். "சீதா மாமி. எனக்கு ஒரு விஷயம் நீங்க சொல்ல வேண்டும். உங்கள் எஜமானியம்மா வெறுமே புறப்பட்டுப் போனாளா? கையிலே ஏதாவது பெட்டியுடன் போனாளா?"

"வெறுமேதான் போனாள்."

"அம்மாடி!" என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டார்.

சீதாப்பாட்டி அவருக்கு மோர் கொண்டு வர உள்ளே சென்றாள்.

சற்று நேரத்தில் சகுந்தலா வரதன் வந்து விட்டாள். ஆனால் மூச்சுத்தான் விட முடியாதபடி இரைத்தது. இரண்டு வாசற்படி ஏறுவதற்குள்ளேயே தடுமாறி விட்டாள். உள்ளேயிருந்து வந்த சீதாப்பாட்டி ஒரு புறமும், டிரைவர் ஒரு புறமாக அவளைக் கையைப் பிடித்து நிறுத்தி நிதானமாக உள்ளுக்குக் கூட்டிச் சென்றனர்.

"அடடே! ரொம்ப ஸாரி... நான் குறித்த நேரத்துக்கு வராமல் உங்களுக்கு ரொம்பச் சிரமம் ஏற்படுத்தி விட்டேன். அம்மா, நீங்க கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக் கொள்ளுங்கள். எந்த விஷயமாயிருந்தாலும் அப்புறம் பேசிக் கொள்ளலாம்," என்றார் முதலியார் உபசாரமாக.

சகுந்தலா வரதன் தட்டுத் தடுமாறி, ''இல்லை முதலியார். உடனே உங்ககிட்டே பேசியாகணும்...'' என்றவள் சமையல்காரியையும் டிரைவரையும் அங்கிருந்து போய் விடும்படி சைகை காட்டினாள்.



# 15

சகுந்தலா வரதனுடைய ஒரு வார்த்தைக்கும் இன்னொரு வார்த்தைக்கும் நடுவே பொறுமையாக முதலியார் காத்திருந்தார். அவள் சொன்னாள்.

"காலையில் டெலிபோனில் ஒரு தகவல் வந்தது. அதிலிருந்து ரொம்ப நான் ஆடிப்போய்விட்டேன்."

"அப்படியா? யாராவது சொந்தக்காரர்களைப் பற்றியா? பாவம், யாருக்கு என்ன உடம்பு!"

"மிஸ்டர் முதலியார், என் பங்களாவை ரெய்டு பண்ணப்போறாங்களாம் வருமானவரி அதிகாரிங்க. போனில் செய்தி வந்தது!"

"நல்லா ரெய்டு பண்ணட்டும். நீங்கதான் கணக்கெல்லாம் கரெக்டா வச்சிருக்கீங்களே."

"மிஸ்டர் முதலியார்... உங்ககிட்டேதான் நான் மனம் விட்டுப் பேச முடியும், பேசறேன். என்கிட்டே கணக்கிலே காட்டாத நகைகள் ஏராளமாக இருக்கிறது. பல லட்சம் பெறும். அதை நான் எப்படிக் காப்பாற்றுவது?"

முதலியார் யோசனையில் ஆழ்ந்தார். பிறகு சொன்னார்.

"நண்பர்கள் யார்கிட்டேயாவது கொடுத்து அவர் பெயரில் பாங்கியில் கைக்கலாமே?"

"மிஸ்டர் முதலியார், நீங்கதான் என் நகைகளைக் காப்பாற்றித் தரணும். வருமான வரிக்காரர் சோதனை முடியும்வரை உங்கள் பங்களாவில் வைத்திருக்க வேண்டும்."

"ரொம்ப பெரிய பொறுப்பும்மா - வருமான வரிக்காரர்கள் குழந்தைகளில்லை. உங்கள் வீட்டில் நகைகள் இல்லையென்றதும் உங்களுக்கு வேண்டியவர்கள் யார் என்று அறிந்து அங்கும் வந்து சோதிப்பார்கள் - அப்போது என்பாடு சங்கடமாகிவிடும் இருந்தாலும் நான் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறேன்."

"முதலியார்... என் நன்றியை உங்களுக்கு எப்படிச் சொல்லுவேன். இப்போதே நீங்கள் எடுத்துக்கொண்டு போய்விடுங்கள். அப்போதுதான் என்னால் அடுத்த மூச்சை ஒழுங்காக விட முடியும்."

சகுந்தலா வரதன் பீரோவைத் திறந்து நகைப் பொட்டியை எடுத்து முதலியாரிடம் தந்தாள்.

அப்புசாமி தெருவோடு வந்துகொண்டிருந்தார்.

அருகே - 'ஙீ' என்ற ஒலியுடன் சைக்கிள் ரிக்ஷா ஒன்று வந்து நின்றது.

"வாத்யாரே! வாத்யாரே! சலாம் வாத்யாரே! நீங்கனா?" என்றவாறு டமாரென்று சைக்கிள் ரிக்ஷாவி லிருந்து கீழே இறங்கி, அதி வினயமாகக் கும்பிடு போட்டான் சைக்கிள் ரிக்ஷாக்காரன்.

சட்டென்று அப்புசாமிக்கு அவனை அடையாளம் தெரியவில்லை. அப்புறம்தான் அந்தப் பொடியனைத் தெரிந்தது. "அடடே; நட்டு, நீயா?"

"இன்னா வாத்யாரே! நம்மளை அதுக்குள்ளாற மறந்துட்டே வண்டியிலே ஏறு தொரே! எங்கே போகணும் ஊட்டாண்டைதானே? நான்கூட அப்புறம் ரெண்டு மூணுவாட்டி ஊட்டாண்டே வந்தேன். தொரையை பார்க்க முடியலை... ஏறு தொரே."

அப்புசாமி ஏறி உட்கார்ந்தார்.

"நம்ம பெரிய வாத்தியார் உங்களைப் பத்தி ரொம்ப விசாரிச்சுகிணே இருக்கார் தொரே."

"யாரு, முக்கால் பிளேடா, அவரு ஏன் என்னை விசாரிக்கணும்? அப்புசாமி சுருக்கென்று கேட்டார் "துட்டு தான் அன்னைக்கே கொடுத்தேனே. ... நீ கொண்டு கொடுத்திட்டியில்லே?"

"ஓ! அதுலே அவருக்கு ரொம்ப ரொம்பச் சந்தோஷம் வாத்தியாரே! அந்த அஞ்சு ரூபாயைச் செலவழிக்காமே அப்படியே பிரேம் போட்டு வெச்சிகினு பெருமையைக் கேட்க ஆவலாயிருந்தது. "அதென்னம்மா பெருமே?"

"அதுவா? டேட நட்டு!எத்துனியோ பேர் கூட்டாளிங்களா எனக்கு வந்திருக்கானுங்க. அவ்வளவு பேரும் பொறுக்கி நாயிங்களா இருந்திருக்காங்களே தவிர இந்த மனுஷன் மாதிரி ஒரு சுத்தமான கையைக் கண்டிருக்கியாடா கைப்தே'ன்னு கேட்டார். தொரே! உங்களைப் பத்திப் பேசாத நாளே இல்லை. நடுவுலே பெரிய வாத்தியாரும் வேலூருக்குப் போயிட்டு நேத்துத் தான் ரிடர்ன் ஆனார்."

சைக்கிள் ரிக்ஷா பாலத்தைத் தாண்டிக் குறுகலான ஒரு சந்தில் நுழைந்தது.

அப்புசாமி கத்தினார். "ஏண்டா நட்டு. எங்கேடா கெவனம். வண்டியைச் சந்துலே வுடறே. மெயின் ரோடுக்கா போயி கடோசிலே திரும்புடா!

"இல்லே தொரே! ரெயில் கேட்டு குறுக்கால வர்ரதில்லே. .. இப்படிக்கா போய், மேம்பாலம் ஏறிப்பூடலாம்.

"அடப்பாவமே. எவ்வளவோ சுத்து ஆச்சே!"

"வாத்தியாரே! ஒன்னியே சவாரி அடிக்கிறதுலே எனக்குப் பெருமை வாத்யாரே பெருமை!"

அப்புசாமிக்குத் தன் கழுத்திலிருந்து ஒரு ரத்தின ஆரத்தைக் கழற்றி அவனுக்குக் கொடுக்க வேண்டும் போலிருந்தது. கழுத்தைத் தடவிப் பார்த்தார். வியர்வைதான் கசகசத்தது.

வண்டி இன்னும் ஒரு குட்டிச் சந்தில் திரும்பியது.

"டேய் நட்டு! என்னடா முட்டுச் சந்துலே கொண்டு வந்து முட்டிட்டே?"

"இல்லே தொரே! ஒரே ஒரு நிமிட். நம்ம ஊடு இங்கேதான். . . நாஷ்டா பண்ணிட்டு வந்துடறேன். நீ வண்டிலே இரு நைனா. . "

"என்னடா நட்டு. . . சொல்லியிருந்தால் வழியிலே ஓட்டல்லேயே நாஷ்டா பண்ண வச்சிருப்பேனே?"

அவன் இறங்கிப் போய்விட்டான். இரண்டு நிமிஷம் இருக்கும். திரும்பி வந்தான். "வாத்யாரே! கொஞ்சம் உள்ளாறதான் வாங்களேன். . . என் சம்சாரம் ஒன்னியேக் கும்பிட்டுக்கோணுமாம். போன மாசம்தான் கட்டுனேன்."

அப்புசாமி ஒரு ஆசீர்வாத பாவத்துடன் வண்டியை விட்டு இறங்கினார்.

நட்டுவைப் பின்தொடர்ந்து ஒரு நீளச் சந்துக்குள் போனார். வீடு மாதிரி ஒரு கதவு இருந்தது. ஆனால் திறந்ததும் ஆறு எருமை மாடுகளின் பின்னணிதான் தெரிந்தது.

"ஒதுங்கி வா வாத்யாரே, ஒண்ணியும் பண்ணாது. . . நம்ப எருமைங்கதான்."

எருமைகளைக் கடந்து உள்ளே இருட்டான அறை சின்ன ஜன்னல்.

தரையில் அழுக்குப் பாயும் தலையணையுமாக ஒரு பெரிய உருவம் படுத்திருந்தது.

புஸ்தி மீசை. கிங்காங் மாதிரி தொப்பை. அசோகன் மாதிரி ஒரு இளிப்பு.

"வாய்யா ... வாய்யா ... வாய்யா ..."

அப்புசாமி "ஹி" என்றார். பல்லி ஒற்றைச் சொல் கொட்டுகிற மாதிரி.

"டேய் அறிவு கெட்ட நட்டு! வாத்தியாருக்குக் குந்திச்சியைப் போடுடா!"

நட்டு விரைந்து சென்று ஒரு மூணு கால் இரும்பு நாற்காலியைக் கொண்டு வந்து போட்டான்.

சாண நாற்றம் வயிற்றைக் குமட்டியது.

"என்ன வாத்யாரே! நேற்றுத்தான் வேலூர்லேந்து வந்தேன். உன்னைக் கண்டுகினு வரச் சொல்லி இந்த சோமாறிகிட்டே நேற்றே சொன்னேன். கஸ்மாலம் இன்னிக்குத்தான் கூட்டியாந்திருக்கான்."

அப்புசாமி நெளிந்தார். "எப்படி ... வேலூர்ல எல்லாரும் சௌக்யமா?" என்று அபத்தமாகக் கேட்டார்.

"உள்ளேயிருக்கிற தோஸ்துங்க சரியாதான் கீறாங்க. வெளியிலேயிருக்கிற தோஸ்துங்கதான் சரியா இல்லை."

அப்புசாமிக்கு அவனுடைய முறைப்பு என்னவோ செய்தது.

அவன், "டேய் நட்டு! எங்கேடா என் பிளேடு கத்தி?" என்றான்.

"இதோ வாத்யாரே! கொஞ்சம் தீட்டிகிட்டிருந்தேன்."

"சோமாறி! இருக்கற கூர்லேயே இன்னும் இருபது அறுப்பு போடலாம்டா! கொண்டாடா நாயி!"

நட்டு பவ்வியமாக முக்கால் பிளேடிடம் ஒரு க்ஷவரக் கத்தியை நீட்டினான்.

அதை வாங்கிக் கொண்ட முக்கால் பிளேடு எழுந்து அப்புசாமி கிட்டே வந்தான்.

"என் தொரே? சலூன்லே கத்தி போடறானே அவனுக்குக் கூலி எவ்வளவு தெரியுமா ஒரு நாளைக்கு?"

அப்புசாமி நடுங்கியவாறு, "நான். . . நான். . . போயி ரொம்ப நாளாச்சு" என்றார்.

"சொல்றேன் கேட்டுக்க. . . பதினைஞ்சு ரூவா இப்ப ரேட்டு! நீ இனாடா கொடுத்தனுப்பினே? என்டா கய்தே."

என்டா கய்தே வா! அவருக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"முக்கால். . . முக்கால் வாத்யாரே. . . நான். . . நான். . . ஏதாவது தெரியாமல் தப்புப் பண்ணியிருந்தாலும். . . " என்று தடுமாறினார்.

"என்டா சோமாரி!" அப்புசாமியின் முகத்தில் விண்ணென்று ஒரு குத்து இறங்கியது. விரலில் ஸ்பெஷல் கொட்டாங்கச்சி மோதிரம் போட்டிருப்பான் போலும் முக்கால்பிளேடு.

அப்புசாமியின் உதடு உடைந்தது; உப்புக் கரித்தது.

"என்டா, உன்னைநம்பி ஒயுங்கா ஒரு காண்ட்ராக்டுக்கு இறங்கினா. . . நீ தொரே மாதிரி எனக்கு அஞ்சு ரூவா பித்ஸா காசா அனுப்பறே பித்ஸா காசு! டேய் நட்டு! எடுத்தாடா அதை!"

மாடத்தில் ஒரு சல்லுக்கடியில் வைத்திருந்த ஐந்து ரூபாநோட்டை எடுத்து வந்தான் நட்டு.

"தெறடா வாயை!" முக்கால் கட்டளையிட்டான்.

நட்டு வாயைத் திறப்பான் என்று அப்புசாமி பேசாதிருந்தார்.

விண்ணென்று அப்புசாமியின் வயிற்றில் ஒரு குத்து.

"சொல்றேனே, காது கேக்கலை."

அப்புசாமி 'ஆ!' என்று உலகம் பூராவையும் விழுங்குகிற மாதிரி வாயைத் திறந்தார்.

"கொண்டாடா அதை!" என்ற அடுத்த கட்டளை.

ஐந்து ரூபாய் நோட்டை அவர் வாயில் போட்டான் கொஞ்சம் மாட்டுச் சாணியோடு.

"ஊம். . . விழுங்குடா."



## 16

"மேஸ்திரி தொரே!" அப்புசாமி முக்கால் பிளேடைக் கெஞ்சிக் கொண்டிருந்தார்.

எத்தனையோ மட்டமான ஓட்டலில் டிபன் சாப்பிட்டிருக்கிறார். இப்படி ஒரு மட்டமான டிபனை அவர் ஆயுளில் சாப்பிட்டதில்லை. எந்த நல்ல ஓட்டலைப் பழித்த பாவமோ? எந்த வீட்டிலே வயிறு புடைக்கத் திருப்தியுடன் சாப்பிட்டுவிட்டு ஒரு வார்த்தை சாப்பாடு ஜோராயிருக்கிறது என்று சொல்லாமல் வந்த பாவமோ?

நட்டு, எரவாணத்திலிருந்த பெரிய புனலை - எருமைக்குப் பச்சிலை மருந்து ஊற்றுகிற புனல் - எடுத்துக் கொண்டு அந்தப் பக்கம் வந்தான். அப்புசாமி தனக்குத் தான் ஏதோ என்று பயந்து, "வேண்டாம் வேண்டாம்" என்று அலறினார். கால் இரண்டும் கட்டப்பட்டிருந்ததால் அவரால் ஓட கிட முடியவில்லை. அப்படியிருந்தும் பிளாட்பார பிரியாணிக் கோழி மாதிரி சிலபல துடிப்புக்களைச் செய்தார்.

கையெடுத்து முக்கால் பிளேடைக் கும்பிட்டார். "பிளேடு தொரே! இப்ப நீ என்னை அவிழ்த்து வுடு! அந்த மணவாள முதலியார் வூட்டுக்கு இப்படியே போய். . . அவரைக் கொலை வேணும்னாலும் பண்ணிட்டு பீரோவிலிருக்கிற எல்லாத்தையும் அள்ளிக் கொணாந்து உங்க காலிலே கொட்டறேன்."

"செய்வியா? ரெண்டு நாள் பாடம் உனக்குப் போதும்னு நினைக்கிறேன். ஆனால் ஒண்ணியெச்

சொல்லிவைக்கிறேன்... எனக்கு வாக்குதான் முக்கியம். என் சிஷ்யப் புள்ளைங்களுக்கு வாக்குச் சுத்தமாயிருக்கணும்... நீ ஆயிரம் ஜெயிலுக்குப் போ. கொலை பண்ணு... கடவுள் மன்னாப்புவுட்டுடுவார்... ஆனால் வாக்குத் தவறாதே... ஆமாம், காந்திமகாத்மா சொன்னதை மறக்காதே சத்தியமா நடந்துக்கோ. அவுத்து வுடறேன்... அப்புறம் பதுங்கிக்கினு பாச்சா காட்டினே? விடமாட்டேன்."

அப்புசாமியை நட்டு அவிழ்த்து விட்டான்.

அப்புசாமியை வினயமாக முக்கால் வாத்தியாரை மூன்றுதரம் வலம் வந்து, அவர் காலைத் தொட்டு மூன்று தரம் ஒற்றிக் கொண்டார்.

இந்தா, இந்த முக்கால் ப்ளேடை வச்சிக்கோ, ஒரு அறுப்புப் போட எதுக்கும் வச்சுக்கோ. டே நட்டு! பெரியவரைக் கொண்டு போய் நேரா மொதலியார் ஊட்டண்டை எறக்கிடு. இந்தா, வழியிலே பெரியவருக்கு நாஷ்டா டீ வாங்கிக் குடு; ரெண்டு நாளாப் பாவம் சரியாய்ச் சாப்பிடலை."

மணவாள முதலியார் டெலிபோனில் குரலை மாற்றிக்கொண்டு கூப்பிட்டார்.

சீதாப்பாட்டியின் குரல்தான் கேட்டது. "நான் மிஸஸ் சீதா பேசுகிறேன்... நீங்க யார் பேசறது? யு வாண்ட் மிஸ்டர் அப்புசாமி? வெரி ஸாரி... அவர் எங்கே போயிருக்கிறாரோ தெரியவில்லை."

"சாப்பிட வருவாரில்லையா? நான் அவருடைய ஃபிரண்ட்."

"மே ஐ நோ யுவர் குட் நேம்?"

"அவர்கிட்டேதான் பேசணும். அவர் வந்துடுவாரில்லையா? வெளியூர் கிளியூர் போயிருக்கிறாரோ?"

"ஸாரி, ஐ டோண்ட் நோ."

மணவாள முதலியார் மோவாயைத் தேய்த்துக் கொண்டார் 'நானும் இரண்டு நாளாக அந்த டுப் ஆசாமியைச் சந்திக்கப் பார்க்கிறேன். எங்கே ஒழிந்து போனான்?' என்று யோசித்தவாறிருந்தார்.

வேலைக்கார முனியப்பனை வேண்டுமானால் அனுப்பி, சாடையாகப் பார்த்து வரச் சொல்லலாமா? இன்னொரு தரம் போன் செய்து பார்க்கலாமா?

மீண்டும் முதலியார் சீதாப்பாட்டியின் வீட்டுக்குப் போன் செய்தார். மணி நீண்ட நேரம் அடித்துக்கொண்டே யிருந்தது. யாரும் இல்லை போலிருக்கிறது.

'சரி, கிளப்புக்காவது போய்த் தொலையலாம்' என்று சலித்தவாறு மாடி அறையிலிருந்து வெளியே வந்தார்.

அவர் முகம் மலர்ந்தது. பழம் நழுவி இவ்வளவு தூரம் நடந்து வந்து பாலில் விழுகிறதே. பின்புற காம்பவுண்டுச் சுவர் மீது அப்புசாமி ஏறி உள்ளே வர முயன்று கொண்டிருப்பது தெரிந்தது. முதலியாரின் அருகிலிருந்த ஜூடோ தன் ஆட்சேபக் குரைப்பை எழுப்ப வயிற்றை எக்கியது. அதைத் தட்டிக் கொடுத்து அதன் காதில் முதலியார் ஏதோ சொன்னார். புரிந்து கொண்டு வாலை ஆட்டியவாறு அமைதி ஆகிவிட்டது.

அப்புசாமிக்குச் சுவரேறக் கஷ்டமாயிருந்தது. ஆனால் முக்கால் பிளேடின் ஞாபகம் வந்ததும் பல்லைக் கடித்துக் கொண்டு ஏறினார். ஜிங்கென்று குதிக்கு முன் ஒரு மாபெரும் தயக்கம். பயங்கர ஜூடோ அந்தப் பக்கமாகப் போன மாதிரி இருந்தது.

'நாயா? பிளேடா? அடே அப்பு! எதன்மூலம் பிராணன் போவது கௌவரம்?' அவர் மனத்திலிருந்த பிரெஸ்டிஜ் பத்மனாபன் ஒரு கேள்வி கேட்டார்.

நாயையே சந்திப்பது என்று தீர்மானித்து உள்ளே குதித்தார் - தனக்குத் தெரிந்த பல கவச மந்திரங்களை மனத்துக்குள் உச்சரித்துக் கொண்டு.

ஆகா! என்ன ஆச்சரியம் - ஜூடோ அவரைப் பார்த்துவிட்டாலும் வாலை ஆட்டிக் கொண்டல்லவா இருந்த இடத்திலே பேசாமலிருக்கிறது? தன்னை எஜமானரான மணவாள முதலியாரென்று அந்தப் பிராணி நினைத்து விட்டதோ? சபாஷ்! தலறுவது மனித சுபாவம் மட்டுமல்ல, நாய் சுபாவமும்தான் போலிருக்கிறது.

அப்புசாமி தைரியமாக மாடிப் பின் படிகளில் ஏறினார்.

ஒருகால் மணவாள முதலியார் துரதிருஷ்டவசமாக இந்த வேளையில் போதையில் இல்லாதிருந்தால் - சந்தேகம் வாட்டியது. ஆனால் மணவாள முதலியாரின் முன்னேயிருந்த மதுபாட்டிலையும் கிண்ணங்களையும் பார்த்ததும் மனம் உற்சாகத்தால் துள்ளியது.

'அட அப்பு! ஐயா அதிருஷ்டக்காரன்டா. நீ வந்த வேளை படா நல்லவேளை. முதலியார் ஃபுல் லோடில் தான் இருக்கிறார் போலிருக்கிறது.'

அப்புசாமி உரிமையுடன், "மனச்சாட்சி வந்திருக்கேன்." என்றவாறு முதலியாரின் அருகே சென்றார்-

"என்னது மனச்சாட்சியா!" முதலியாருக்கு ஆச்சரியமாயிருந்தது. அப்புசாமியும் ஆச்சரியத்துடன், "என்னது, என்னைத் தெரியலையா? உங்க மனச்சாட்சி முதலியாரே! நீங்க குடிக்கிற போதெல்லாம் பேசுமே அந்த மனச்சாட்சிங்க! அண்ணைக்குக் கூட இங்கே வந்திருக்கிறேனே. . ."

"ஓ வந்திருந்தீங்களா. . எனக்குத் தெரியலியே? உங்க பேரு என்னங்க. . .?"

"பேசா . . ." அப்புசாமி சிரித்தார். "உங்க பேரு மணவாள முதலியாரு-எம்பேரு மனச்சாட்சி மொதலியாரு! தெரியலியா? நீங்க குடிக்கிற போதெல்லாம் உங்ககிட்டயிருந்து புறப்பட்டு வெளியே வந்துடுவேன். சினிமாவிலே தனி ஆளாப் பிரிஞ்சு கேள்வி கேட்பாங்களே - நீங்க பார்த்ததில்லே?"

"ஓஓஓ!" முதலியார் 'அப்படியா சமாசாரம்?' என்று எண்ணிக் கொண்டு குடித்தவர் மாதிரியே நடிக்கத் தொடங்கினார்.

"மனச்சாட்சி! அன்னிக்கு வந்தேன் என்கிறியே எனக்கு ஞாபகமில்லே மனச்சாட்சி. . ."

"மறந்து போச்சா! என் கையிலே நூறு ரூபா கொடுத்து அனுப்பினியே! டாக்ஸியிலே போன்னு கூடச் சொல்லலியா?"

"ஆ! ஆ! ஞாபகம் வருது! ஆமாம். ஆமாம். நீ தான் என் மனச்சாட்சி! மனச்சாட்சி!" முதலியார் அப்புசாமியை கட்டிப் பிடித்துக் கொண்டார். "மனச்சாட்சி! நீ வந்து என் மாதிரியே இருக்கியே. . . ஆச்சரியமாயிருக்குது எனக்கு?"

"அட பைத்தியக்காரக் குடாக்கு!" என்றார் அப்புசாமி செல்லமாக. "அவனவன் மனச்சாட்சி அவனவன் மாதிரி இருக்காமல் வேறு மாதிரியா இருக்கும்?"

மணவாள முதலியார் அப்புசாமியைச் சில வினாடி உற்றுப் பார்த்தார். பிறகு கோப்பையைக் கீழே வைத்து விட்டு, "ஏய், நீ ஒண்ணும் என் மாதிரி இல்லை!" என்றார். "நான் காலைக் கொஞ்சம் நொண்டினாப்பலே நடப்பேனே. நீ நடந்து வந்தப்போ நேரா வந்தியே?"

அப்புசாமி பல்லைக் கடித்துக் கொண்டார். 'குடியிலேயிருந்தாக்கூடக் கிழட்டுப் பயலுக்கு எவ்வளவு புத்தி கூர்மை? கவனிச்சுட்டானே?' என்று எண்ணிக் கொண்டவர் சமாளித்தார்.

"அடடே! அதைச் சொல்றியா? அட பைத்தியக்கார முதலியார். மனுஷன்தான் கோணலா நடப்பான். மனச்சாட்சி எப்பவும் நேராத்தான் நடக்கும். இது புரியலியா?"

"உ ஊஹும் ... ." முதலியார் மறுத்தார். "நீ என்னை மாதிரி இல்லே. இல்லே இல்லே."

"அடப் பாவி!" என்றார் அப்புசாமி ஆத்திரத்துடன் எது, வந்த காரியம் கெட்டுவிடும் போலல்லவா இருக்கிறது "எந்த முட்டாள் சொன்னது, நான் உன் மாதிரி இல்லேன்னு. நான் உன் மாதிரியேதான் இருக்கேன்."

"நான் நம்ப மாட்டேன்."

அப்புசாமிக்கு வருத்தமாகவும் ஆத்திரமாகவும் வந்தது. "எய் மூளையில்லாத முண்டம் ... வா, ரெண்டு பேரும் கண்ணாடி முன்னே நின்னு பார்க்கலாம்."

அப்புசாமி தரதரவென்று முதலியாரை இழுத்துக் கொண்டு கண்ணாடி முன் சென்றார்.

"ஐய்! ஆமாம். ஆமாம். என் மாதிரியே அச்சா இருக்கிறே!" என்றார் முதலியார். "மனச்சாட்சி! நீ பொல்லாத மனச்சாட்சி! பார்த்தியா பார்த்தியா ..."

திடீரென்று முதலியார் கேவிக் கேவி அழத் தொடங்கினார்.

அப்புசாமிக்குப் புரியவில்லை.

"முதலியார்! எய்யா அழறே?"

"நான் உன்கிட்டே பிரியமா இருக்கேன். காசெல்லாம் கொடுக்கறேன். ... நீ மட்டும் என்னை விட்டுட்டு எங்கெங்கெயோ போயிடறே?"

"அட சமத்துக் கண்ணு!" என்ற அப்புசாமி முதலியாரின் கன்னத்தை வழித்துச் சொடக்கு முறித்தார். "நான் உன்னை விட்டு எங்கேயும் போகலியேப்பா."

"பொய் சொல்றே, அப்புறம் நான் அழுவேன். நீ ஓட்டல் சோழாவுக்கு என்னை வுட்டுட்டுத்தானே போனே? நான் போகலே... ஆனால் நீ போயிருக்கே... போன்லே கேட்டாங்களே எல்லோரும்?"

அப்புசாமிக்குக் குபுக்கென்று சிரிப்பு வந்துவிட்டது. கடகடவென்று சிரித்தார். "ஓ! அதைச் சொல்றியா? அது ஒரு தம்மாஷ்! சீதே கிழவி ஆயிரம் ரூபாய் தந்தான்னு சொம்மாக் கொஞ்ச நேரம் நடிச்சேன் உன் மாதிரி!"

முதலியாருக்குச் சுருக்கென்றது.

சீதேக் கிழவி ஆயிரம் ரூபாய் கொடுத்து அவர் மாதிரி நடிக்கச் சொன்னாளா! தன் பெயர் கெடுவதில் அந்த சீதேக் கிழவிக்கு என்ன இவ்வளவு தீவிரம்? அதில் என்ன அவளுக்கு லாபம் - மகிழ்ச்சி! ஏதோ விஷயமிருக்கிறது.

"அய்! என்ன மனச்சாட்சி! எனக்குச் சொல்லவேயில்லியே? உனக்கு நடிப்பெல்லாம் தெரியுமா? உன் பேரு எம்.ஜி.ஆரா? சிவாஜியா?

அப்புசாமி பெருமிதத்துடன் "அவுங்களுக்கும் மேலே, பெரிய வாத்யாராக்கும் நான். ஓட்டல் சோழாவிலே உன்னை மாதிரியே ஆக்ட் பண்ணினப்போ எல்லோரும் அசந்துட்டாங்க... எங்க வூட்டு சீதேக் கிழவியே கூட அசந்து போய்ட்டா."

"அப்படீன்னா நடிகர் திலகம் நீங்கதான்... " மனவான முதலியார் இறுகக் கட்டிக் கொண்டார்.

அப்புசாமிக்கு ஐஸ் வைத்த மாதிரி ஆகிவிட்டது. ஹைஸ்கூலில் படித்தபோது, தான் சுக்ரீவன் வேஷம் போட்டுக் கொண்டு தாவிக் குதித்த அழகையும், வாழைப் பழத்தை மொசுக் மொசுக்கென்று தின்றதையும் பற்றிய இளமை நாடக அனுபவங்களையெல்லாம்கூட விவரிக்க

ஆரம்பித்து விட்டார். அப்புறம்தான் வந்த காரியம் ஞாபகத்துக்கு வந்தது. முதலியார் மனுஷனுக்குப் போதை தெளிவதற்குள் வந்து காரியத்தை முடித்துக்கொள்ளாமல் அசடு மாதிரி தான் பேசிக் கொண்டிருக்கிறோமே . . ஆமாம். இரும்பு பீரோ சாவியை எப்படி ஆசாமிகிட்டே யிருந்து வாங்குவது. காக்காவலிப்பு வந்தவன் மாதிரி நடிக்கலாமா?

காக்கா வலிப்புக்காரர் மாதிரி நடிப்பதற்காக வலது கையை உதறலாமென்று அவர் நினைத்த மறு வினாடி முதலியார் சட்டென்று அப்புசாமியின் வலது கையைப் பிடித்துக் கொண்டார். வலது கையை மட்டுமல்ல, இடது கையையும்.

"மனசாட்சி! நீ என் மாதிரியே. இருக்கே எனக்காக ஒரு சின்ன உதவி பண்ணுவியா? எவ்வளவு பணம் வேணும்னாலும் தர்ரேன். . . "

பணம்! அப்புசாமியின் கண்கள் விரிந்தன. காக்கா வலிப்பு வேஷம் போடாமலே பணமா? அதுவும் எவ்வளவு வேணும்னாலும் பணம்? அப்பு! உனக்கு இருக்கிறதடா சுக்கிரதசை.

"மொதலியார் உன் மனசாட்சியாச்சே நான் . . . நீ சொன்னபடி நான் செய்யக் காத்திருக்கிறேன். . பணம் மட்டும் தாராளமாகத் தள்ளு!"

முதலியார் பீரோவைத் திறந்தார். ஒரு கை நிறைய நோட்டுக் கற்றைகளை அள்ளி வந்தார். அப்புசாமி ஆவலுடன் ஜிப்பாவை மடிபோல் பிடித்தார்.

"இந்தா மனச்சாட்சி! பதினையாயிரம்! நீ ஜாலியா இருக்கணும். குஷாலா இருக்கணும். ஆனால் எனக்காக ஒரே ஒரு சின்ன உதவி பண்ணணும்."

"என்ன மொதலியார் உதவி! ஐயப்பன் மாதிரி ஏதாவது புலிப்பால் கொண்டு வரணுமா?"

"ஊஹூம். . . சகுந்தலா வரதன்னு எனக்கு ஒரு சினேகிதக்காரம்மா இருக்கிறாள். அவள் தன்னை ரொம்ப கெட்டிக்காரின்னு சொல்லிப்பாள். கர்வம் பிடிச்சவ. அவளை நீ ஏமாத்தணும். என் மாதிரியே நீ போய் அவள் கிட்டே நடிக்கணும். ஒரு விருந்துக்கு என்னைக் கூப்பிட் டிருக்கிறாள். என் மாதிரி நீ போய் விருந்து சாப்பிட்டு வந்துடணும்."



17

'டைடையைக் கண்டுபிடித்தவன் ஒரு மடையன்' அப்புசாமி பல்லைக் கடித்துக்கொண்டு ஏழாவது தடவையாக முடிச்சிட முயன்று கொண்டிருந்தார்.

சகுந்தலா வரதன் வீட்டு விருந்துக்காக அவர் தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தார். நல்லகாலமாக சீதாப்பாட்டி பா. மு. கழகத்துக்குக் கிளம்பிப் போய்விட்டிருந்தாள்.

"தாத்தாவ்!" உற்சாகமாகக் குரல் கொடுத்துக்கொண்டு ரசகுண்டு உள்ளே வந்தான். "ஐயையோ! தாத்தாவா!"

"ஆமாண்டா நான் என்ன செத்தா போயிட்டேன்.. அபசகுனம் மாதிரி ஐயையோன்னு ஆச்சரியப்படறே?"

"என்ன தாத்தா! பாண்ட்! சூட்! கோட்! படாஷோக்கா. . . இருக்கிங்களே. . ."

"ஒண்ணுமில்லைடா ரசம்! ஒரு பெரிய இடத்து விருந்துக்குப் போறேன்."

ரசத்துக்கு நாக்கில் நீரூறிற்று. "நானும் வரட்டுமா தாத்தா!"

"ஊஹூம். . . ரொம்பப் பெரிய இடம்டா. கூப்பிட்டவங்க மட்டும்தான் போகலாம்."

"பெரிய இடம்னா தாத்தா?"

"பெரிய இடம்னா. . ." அப்புசாமி தடுமாறினார்.

அவர் கண்களில் அன்றைய செய்தித்தான் பட்டது. பட்டது கவர்னர் ஏதோ திறப்புவிழா செய்யும் படம் வெளியாகியிருந்தது. சுபாலென்று அளந்து வைத்தார்.

"அதாவது... கவர்னர் ஒரு விருந்து தர்ரார்... கவர்னர் எனக்கு ரொம்ப வேண்டியவராச்சே..."

"கவர்னரா? உங்களுக்கு ரொம்ப வேண்டியவரா?" ரசகுண்டு வாய் பிளந்தான்.

அப்புசாமிக்குப் பெருமையாயிருந்தது. "ஆமாண்டா! கவர்னர் என் அந்த நாளைய பிரண்டு! முப்பது வருஷம் ஆச்சு அவரைப் பார்த்து."

"தாத்தா... நீங்க சொன்னதே இல்லையே."

"நானே பேப்பரைப் பார்த்து அவர் மூஞ்சியை உற்று உற்றுப் பார்த்து ஞாபகப்படுத்தி இரண்டு நாள் முன்னே தான் கண்டு பிடிச்சேன்."

"தாத்தாவ்!" ரசகுண்டு தயங்கியவாறு கேட்டான்.

"என்னடா?"

"கவர்னர் மாளிகையிலே விருந்துன்னு பேப்பர்ல போடலியே?"

"போடா மடையா!" என்றார் அப்புசாமி. யார்கிட்டே அளந்தாலும் இந்த ரசகுண்டுப் பயல்கிட்டே அளக்கக்கூடாது போலிருக்கு. "போடா மக்கு! கவர்னர் எனக்கு மட்டும் விருந்து தாரார். அவருடைய பழைய தோஸ்துடா நான். ரெண்டு பேரும் ஒரே ஜெயில்லே இருந்தோம். ஒரே குளத்திலே தான் குளிப்போம். ஒரே சோப்புத்தான் தேய்த்துக்குவோம். இவ்வளவு ஏன் என் ஜிப்பாவை அவர் போட்டுப்பார். அவர் ஜிப்பாவை நான் போட்டுப்பேன்..."

ரசகுண்டுவின் கண்கள் பெருமையால் பிரகாசித்தன. "தாத்தா! நீங்க பெரிய ஆளாயிட்டீங்க தாத்தா."

"சரி, சரி, நீ போய் டாக்ஸி கூட்டிட்டு வா."

"கவர்னரையே கார் அனுப்பச் சொல்றது?"

"சே, சே! அப்படியெல்லாம் சிரமம் கொடுக்கக் கூடாதுடா. பேஸ்ட் ருசியாயிருக்குதுன்னு டியூப்போட முழுங்கறதா?"

ஒருவாறு சமானித்து ரசகுண்டை அனுப்பி வைத்தார்.

சமயலறையிலிருந்து டைனிங் ஹாலுக்கு வந்த எண்ணெய்க் கமறல் சகுந்தலா வரதனைத் திணற வைத்தது.

அருகிலிருந்த மணியை ஓங்கி அடித்தாள்.

சமையலறையில் விருந்து தயாரித்துக் கொண்டிருந்த சீதாப்பாட்டி "கூப்பிட்டீங்களா மாமி!" என்றவாறு வந்தாள். "பாயசம் ஆச்சு. . . . வெங்காயத்தையும், பொதினாவையும் பொடிப் பொடியா நறுக்கி ஒரு வடையைத் தட்டிட்டா அப்புறம் சர்க்கரைப் பொங்கலுக்கு முந்திரியை வறுத்துக் கொட்டறது பாக்கி."

"மாமி!" என்றாள் சகுந்தலா வரதன் மூக்கையும் தொண்டையையும் கைக்குட்டையால் மூடியவாறே. "மொதல்லே எண்ணெயை அடுப்பைவிட்டு இறக்குங்க. உங்களோட பெரிய நியூஸென்ஸாப் போச்சு. . ." என்றாள். இதற்குள் மூச்சு இரைத்தது. கொஞ்சம் நிறுத்திவிட்டு, "உங்களை யார் எண்ணெயையும் புண்ணாக்கையும் வைத்து வடை தட்டச் சொன்னது?"

கையை ஒரு நொடி நொடித்து அடித்து மோவாயில் வைத்துக் கொண்டாள் சீதாப்பாட்டி. "நான்றாகத்தான்

ஒரு கேள்வி கேட்டியேடியம்மா. விருந்து சமை... விருந்து சமைன்னு சொல்லிட்டு, வடையை ஏன் தட்டினேன்னு ஒரு கேள்வி கேட்டியே. ஏண்டியம்மா வடையைத் தட்டாமல் வயத்தையா பின்னே தட்டுவா? வசனம் சொல்றது செரியாத்தானிருக்கு. பணக்காரங்க வீடுகளில் சமையல் வேலை செய்யறதைவிட சன்னியாசம் வாங்கிட்டுப் போயிடலாம். பாம்புன்னு தாண்ட முடியாது பழுதேன்னும் மிதிக்கமுடியாது. ஒரு விருந்துன்னா ஒரு வடை, ஒரு பாயசம், ஒரு அப்பளம், ஒரு வறுவல், ஒரு பொங்கல், ஒரு கோசுமறி, ஒரு பச்சிடி, ஒரு கிச்சடி... நாலு கலந்த சாதம், ஒரு மைசூர்ப்பாகு இதெல்லாம்கூட இல்லாமல் என்னவிருந்து சமைக்கிறது? அப்பளத்தைச் சுட்டு வார விருந்தாளிக்குப் போடச் சொல்றியா? உங்க பக்கத்து விருந்து விசேஷமாத்தான்டியம்மா இருக்கு...?"

சகுந்தலா வரதன் பல்லைக் கடித்துக்கொண்டு சீதாப்பாட்டியைப் பார்த்தாள். "நீங்க ரொம்ப ரொம்ப பேசறீங்க. எண்ணெய்க் கமறல் எனக்கு ஆகாதுன்னு உங்களுக்குத் தெரியாது? மிஸ்டர் முதலியாருக்குக்கூட எண்ணெய் ஆகாது. ஸ்வீட் ஆகாது."

"இப்படிப்பட்டதுகளெல்லாம் எதுக்குப் பின்னே விருந்து சாப்பிட வரணும்? உசிரைவிட்டு சமைச்சிருக்கேனே பத்தியச் சாப்பாடா நீங்க சமைக்கச் சொல்லியிருந்தா, ஒரு மிளகு ரசத்தைப் பண்ணி பருப்புத் துவையல் பண்ணியிருப்பேன், எனக்கும் காரியம் மிச்சம்."

சகுந்தலா வரதன் தலையைப் பிடித்துக் கொண்டாள். "பெரிய உபத்திரவமாய்ப் போச்சே உங்களோடு. மிஸ்டர் முதலியாருக்கு ஸ்வீட்டு, அப்பளம் இதெல்லாம் ஆகாது. இப்போ நான் என்ன சொல்லிட்டேன்னு நீங்க அழறீங்க?"

வாசலில் பஸ்ஸர் ஒலித்தது. சகுந்தலா வரதன் பரபரப்புடன், "சரி, சரி போய்ச் சமையலைச் சீக்கிரம்

முடித்துவிட்டு பாத்ரூமிலே முகத்தைக் கழுவிக் கொண்டு பரிமாறத் தயாராகுங்கள். மிஸ்டர் முதலியார் வந்து விட்டார் போலிருக்கு."

தோப்பாட்டி எரிச்சலான ஒரு தொடிப்புடன் "நான் என்னத்துக்கு மூஞ்சியை அலம்பிக்கிறது? வர்ற கட்டால போறவன் என்னைப் பொண்ணா பார்க்க வரப்போறான்?" என்று முணுமுணுத்தவாறு சமையலறைக்குப் போனாள்.

அப்புசாமி மிடுக்காக உள்ளே நுழைந்தார்.

"வாங்க மிஸ்டர் முதலியார். எங்கே வாராமலிருந்து விடுவீர்களோ என்று நினைத்துக் கொண்டிருந்தேன்."

அப்புசாமி சகுந்தலா வரதனை நோக்கி சினேக பாவனையை செயற்கையாக வரவழைத்துக் கொண்டு ஒரு கும்பிடு போட்டுவிட்டு சோபாவில் அமர்ந்தார்.

சகுந்தலா வரதன் அவர் முன்னால் ஒரு ஆஷ்ட்ரேயைக் கொண்டு வந்து வைத்தாள். இரண்டு மூன்று சுருட்டுக்களை கொண்ட ஓர் அட்டை பெட்டியையும் அருகில் வைத்தாள். பிறகு புன்னகைத்தவாறு, "உங்களுக்கு விருந்து கொடுக்கறதைவிடக் கஷ்டமானது உங்களுடைய ஸ்பெஷல் சுருட்டை மார்க்கெட்டில் தேடி வாங்கி வைப்பது . . . எப்படியோ கிடைத்தது என்று வையுங்கள்."

"என்னடா இழவு, சுருட்டைக் குடித்து தொலைக்கணுமா என்ன?" யோசித்தவர் அந்தப் பிரச்சனையை சமாளித்தார். "ஸீ! யூ? சகுந்தலா வரதன்? யூ நாட் நோ வாட் சுருட்டு நான் இப்போ டோன்ட் . . ?"

சகுந்தலா வரதன் அசந்து போய்க் குழம்பியவளாய் அவர் என்ன சொல்கிறரென்று புரியாமல், "நீங்க என்ன சொல்றீங்க?" என்றாள்.

அப்புசாமிக்குத் தான் ஆங்கிலத்தின் பக்கம் சஞ்சரித்தது தப்பான காரியம் என்பது புரிந்தது. சமாளித்துக் கொண்டார்.

"ஹி ஹி ஒன்றுமில்லை. ஐ... கொஞ்சம் போதை! ஆமாம். விருந்துக்கு முன்னாலே நன்றாகப் பசி எடுக்கட்டும்னு கொஞ்சம் போட்டேன்...."

"அதனால் என்ன? நீங்க என் விருந்துக்கு என்று இவ்வளவு அக்கறையாகப் பசியுடன் வந்திருக்கிறதற்கு நான் உங்களுக்கு நன்றி செலுத்தணும்... நீங்க எழுந்து கையைக் கழுவிக் கொள்ளலாமே... விருந்து ரெடி."

அப்புசாமி கையைக் கழுவிக் கொண்டார். கை துடைத்துக் கொள்ளத் துண்டு தேடினார்.

டவலுடன் வந்த சீதாப்பாட்டியைப் பார்த்ததும் அப்புசாமி அசந்துபோய் விட்டார். "அடடே! சீதா மாமி நீங்களா?"

சீதாப்பாட்டியின் முகத்திலும் ஒரு பளிச். இவ்வளவு நேரமிருந்த கடுகடுப்பும் அதிருப்தியும் மறைந்து வாய் இந்தக் கடைசிக்கும் அந்தக் கடைசிக்குமாகக் கிழிந்தது.

அப்போது நல்ல காலம் சகுந்தலா வரதன் அங்கில்லை.

"அப்பு மாமா? நீங்களா? யாரோ முதலியார் வரப் போகிறார் என்றல்லவா சொல்லிக் கொண்டிருந்தது. ஓ ஓ! புரிகிறது. முதலியாருடைய பிரண்டாக்கும் நீங்கள்... என்னவோ என் மனசிலே பாலை வார்த்தீங்க. நீங்களானும் எனக்ககாத் திருப்தியாச் சாப்பிடுங்க... ரொம்ப நல்லாச் சமைச்சிருக்கேன். சும்மாவானும் நானே பெருமைக்குச் சொல்லிக்கப்படாது. நீங்க நெஜம்னு நம்பினா நம்புங்க... பொய்யினு விட்டா விடுங்கோ. சர்க்கரைப் பொங்கலுக்கு

முந்திரிப் பருப்பை வறுத்துக் கொட்டறப்போ நினைச்சுண்டேன். ஒரு காலத்திலே அப்புமாமாவுக்கு வெண் பொங்கல் பண்ணித் தந்திருக்கோமே. அப்போ அவர் முந்திரிப் பருப்பைப் பார்த்துப் பார்த்துப் பொறுக்கித் தின்பாரேன்னு நினைச்சேன். உங்க பத்திய பிரண்டும் வந்து கையைக் கழுவிக்கறதுதானே?"

அப்புசாமி சமாளித்தார் "ஹி ஹி! அவன் வரலை. நான் மட்டும்தான் மாமி. ஒரு வெங்காய வடை பண்ணுவீங்களே. புதினாவும் போட்டு!"

"ஐயோ மனுஷா! என்னத்தைச் சொல்றது? நான் இன்னிக்கும் அதே பொதீனாவைப் போட்டுத்தான் வடையைப் பண்ணினேன். இந்த வீட்டு எஜமானி அதுக்குத்தான் தொடையைத் தட்டிட்டு சண்டைக்கு வந்துட்டாள். எனக்கு யார்னா என்ன? டோண்ட் கேர்! விருந்துன்னா வடை பாயசமில்லாமல் என்ன விருந்து ?"

சகுந்தலா வரதனின் உடல் நிலை விருந்தாளியுடன் விருந்து சாப்பிட இடம் தரவில்லை. சமையல்காரி பரிமாறுவதைப் பக்கத்திலிருந்து மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தாள்.

அப்புசாமி வடையை வெட்டினார். அப்பளத்தை முறித்தார். பொங்கலை டெபாஸிட் இழக்கச் செய்தார்.

மகா திருப்தியாகச் சாப்பிட்டார் பீடாவைக் குதப்பிக் கொண்டே, சற்று இளைப்பாறினார். பிறகு சகுந்தலா வரதனிடம் விடைபெற்றுக்கொண்டு மகத்தான ஒரு காரியத்தைச் சாதித்த திருப்தியுடன் கிளம்பினார்.

கீதாப்பாட்டி அவர் புறப்படும் அழகைக் காண விரும்பியவள் போல் சமையல் கட்டிலிருந்து கிரகண சூரியன் மாதிரி காலே அரைக்கால் வாசி எட்டிப் பார்த்தாள்.

விருந்து சாப்பிட்டு முடியும்வரை வாசலில் அப்புசாமி வந்த பெரிய டாக்ஸி காத்திருந்தது.

அப்புசாமி கிளம்பியபோது அவர் கைக்குட்டை தற்செயலாகக் கீழே விழுந்தது.

சீதாப்பாட்டி விரைந்து நாணக் கோணத்துடன் டாக்ஸியருகே சென்று அதை எடுத்து அவரிடம் தந்துவிட்டுத் தாழ்ந்த குரலில், "ருக்மணி சங்கிலி விஷயம் சொன்னேன். தப்பா நினைச்சுக்கப்படாது. குளுந்த வேளையிலே காதிலே போட்டு வைக்கிறேன்... என்னவோ ஒரு அக்ஞானம். குழந்தை கழுத்திலே குந்துமணித் தங்கமில்லே. சும்மா ஞாபகப்படுத்தினேன். நீங்க பல ஜோலிக்காரர். மறந்துடுவீங்க. ஏதோ உங்க தர்மாயிருக்கும்..."

அப்புசாமிக்கும் புரியவில்லை, "ஓ. ஓ! அதுக்கென்ன?" என்று, பொதுப்படையாகச் சொல்லியவாறு காத்திருந்த டாக்ஸியில் ஏறிக்கொண்டார்.

நட்டு 'ஙீ' என்று சைக்கிள் ரிக்ஷா பிரேக்கைப் போட்டான் எதிரே வந்த பெரிய டாக்ஸியும் கிர்ரீச் என்று பயங்கரமாக பிரேக் போட்டது.

காலையிலிருந்து சவாரி ஏதும் கிடைக்கவில்லையே என்று அவன் ஏற்கனவே ஏகக் கோபத்திலிருந்தான். "ஏண்டா கஸ்மாலம், டாஷ் அடிக்க வாரியா? வண்டி டாப் மேலே போயிருந்தா எவன் பொண்டாட்டி தாலி அறுத்துக் குடக்கூலிக்காரனுக்கு மால் வெட்டறது?"

டாக்ஸியை நெருங்கினவன் பின் ஸீட்டில் கால்மேல் கால் போட்டவாறு கம்பீரமாக உட்கார்ந்திருந்த அப்புசாமியைப் பார்த்ததும் திடுக்கிட்டான். "அட வாத்யாரு. யோவ் கில்லாடி! மொதலியார் வூட்டுக்குப்

போனியா? வந்து ரிப்போர்ட்டே கொடுக்கலியேய்யா...." என்றான் கோபமாக.

அப்புசாமி அலட்சியமாக "சீ கழுதை! வாயை மூடுடா! வந்து ஏறுடா டாக்ஸியிலே!" என்றார் நட்டு பிரமித்துப் போனான்.



## 18

கலக்கலை எடுத்துக் கிளாஸில் ஊற்றிக் கையில் எடுத்துக்கொண்ட முக்கால் பிளேடு, வழக்கமான பிரார்த்தனையைச் செய்து கொண்டு ஒரு தரம் முகர்ந்து பார்த்தான் - பஹாடர் கிஹாடர் வாடை அடிக்கிறதா என்று.

"நாராயணா! ஈஸ்பரா! மூலக் கொத்தளத்து ஈஸ்பர்! நீதாண்டியம்மா காப்பாத்தோணும்!"

விஷச் சாராயம் குடித்து இறந்தவர்கள் பட்டியல், பத்திரிகையில் அடிக்கடி வரத் தொடங்கியதிலிருந்து முக்கால் பிளேடுக்குப் பக்தி ஏற்பட்டுவிட்டது. எந்தக் கலக்கலையும் பிரார்த்தனையுடன்தான் சாப்பிடுவது வழக்கம்.

கிளாஸை உயர்த்தி வாயருகே கொண்டு போனான். படீரென்று அவன் கையை இன்னொரு கை தட்டி விட்டது. சிஷ்யப்புள்ளை நட்டு!

"வாத்யாரே! இந்தக் கஸமாலத்தை இனிமேல் நீ தொடவேணாம் வாத்யாரே. நமக்கு விடிஞ்சிட்டுது! லக்கிபிரைஸ் அடிச்சிட்டோம். அசல் கம்பெனி சரக்காவே வாங்கித் தள்ளற காலம் வந்து வாசல்லே டாக்ஸிமேலே கீது."

முக்கால் பிளேடு விழித்தான். . . "இன்னாடா பேத்தறே? எனக்கு மின்னாடி நீ போட்டுட்டியா, அடி செருப்பாலே, குருவுக்கு மிஞ்சின சிஷ்யனா பூட்டியே"

"வாத்யாரே! நம்ம ஆளை இட்டாந்திருக்கேன். டாக்ஸியிலே எங்கேயோ போயிட்டிருந்தாரு! நான் கபால்னு டாக்ஸிக்குக் குறுக்கால சைக்கிள் ரிக்ஷாவை ஓரம் கட்டி, நம்ம பேட்டைக்கா வலிச்சிகினு வந்துட்டேன். . ." பெருமையோடு தன் கித்தாய்ப்பை விவரித்தான்.

"டேய் நட்டு! ஐஸா கில்லாடிடா நீ? சரக்கை உள்ளே இட்டாறதுக்கென்ன?"

நட்டு தலையைச் சொறிந்தான். "வாத்யாரு படா கிமுர்லே இருக்கான். டாக்ஸியை வுட்டுக் கீழே எறங்க மாட்டாராம் தொரை! டாக்ஸியாண்டை உன்னை இட்டாறச் சொல்கிறார். . ."

முக்கால் பிளேடுக்கு ரத்தம் கொதித்தது. "என்னை இட்டாறச் சொன்னானா? ஏண்டா? நீயும் அதைக் கேட்டுகினு வந்தியா சொம்மா? சாக்கடைத் தண்ணியாடா ஓடுது ஒன் ஒடம்பிலே?"

பளாரென்று நட்டுவின் பிடரியில் முக்கால் ஓர் அறை அறைந்தான்.

அடியை வாங்கிக் கொண்ட நட்டு, "இன்னா மேஸ்திரி! எனக்கும் ஒடம்பிலே சர்ப்பட்டா? ரத்தம்தான் ஒடுது! ஆனாலும் காரியம் ஆகணும்னா கழுதை காலிலேயும்தானே விழுகணும். துட்டு எக்கச்சக்கமா அடிச்சிகினு வந்துட்டான் போலிருக்கு. எத்தினி லட்சம் அடிச்சானோ? எங்கே வச்சிருக்கானோ? ஆளை நைஸ் பண்ணித்தான் துட்டை வாங்கணும்!"

அப்புசாமி டாக்ஸிக்குள் காலை ஆட்டியவாறு உட்கார்ந்திருந்தார்.

செறுமலுடன் முக்கால் ஒரு கனைப்புக் கொடுத்தான்... கையைத் தூக்கிக் கும்பிடாமலே, இடுப்புக் கைலியை முழங்காலுக்குச் சரிசெய்து கொண்டு, ஓடு கட்டும் பீடு நடை போட்டவாறு, "சலாம் சார்..." என்றான்.

அப்புசாமி பெருவாரியான ஓட்டுகளில் ஜெயித்த பிரமுகர் டிபாசிட் இழந்தவரைப் பார்ப்பதுபோல அலட்சியமாக அவனைப் பார்த்தார். பேசாமல் மறுபுறம் முகத்தைத் திருப்பிக் கொண்டார்.

முக்காலுக்குத் தூக்கிவாரிப் போட்டது. "சலாம் சார்..."

அப்புசாமி அப்போதுதான் அவனைப் புதிதாகப் பார்ப்பது போல் பார்த்தார். "யாருப்பா நீ? வாட் யூ வாண்ட்?"

முக்கால் பிளேடுக்குத் திகைப்பாக இருந்தது. "யோவ் இன்னாயா வெளையாடறே? அட சி! இறங்கி உள்ளே வா. ஆமாம், போன காரியம் இன்னா ஆச்சு! படா கில்லாடி ஆச்சே நீ! இரும்பு பீரோவைக் காலி பண்ணிட்டியா?"

"ஷட் அப்!" அப்புசாமி ஒரு சீறல் சீறினார்.

நடுநடுங்கிப் போன முக்கால், சிஷ்யப்பிள்ளை நட்டைப் பார்த்தான் குழப்பத்துடன் நட்டு அதே குழப்பத்துடன் திரும்ப அவனைப் பார்த்தான்.

"இன்னாடா நட்டு! ஆளு என்னியெப் பார்த்து யார் நீன்னு கேட்கிறான்?" என்று கிசுகிசுத்தான்.

நட்டு ஓர் இளிப்புடன், அப்புசாமியிடம், 'வாத்யாரே! இன்னா வாத்யாரே டமாஸ் பண்றே? அப்புறம் மேஸ்திரி கோபிச்சிகினார்னா..." என்றான்.

அப்புசாமி முகத்தைக் கடுகடுவென்று வைத்துக் கொண்டார். சற்றுத்தூரத்தில் புகைபிடித்துக் கொண்டிருந்த டாக்ஸியோட்டியை, "இந்தா டிரைவர். . . கம் ஆன். இந்த ரெண்டு ரௌடிப் பசங்களும் யார் எவர்னு தெரியலை. கிளப்புக்குப் போய்க்கிட்டிருந்தவன், வழியிலே ஏதோ பாவம் டாக்ஸியிலே மோதி சைக்கிள் ரிக்ஷாக்காரர் அடிப்பட்டுக்கிட்டாரேன்னு கூட ஏற்றிக்கிட்டால் என்னவோ ரவுடித்தனம் பண்றானே. . . வாத்தியாரு, சித்தியார்னு. . . இந்த மணவாள முதலியாரைப்பற்றி இவனுகளுக்கு ஒண்ணும் தெரியாதுன்னு நினைக்கிறேன்."

முக்கால் பிளேடு நட்டுவை ஒரு பயங்கர முறை முறைத்தான். "ஏண்டா கஸ்மாலம்!" என்று அவன் கிராப்பை ஒரு பிடி பிடித்து அலக்காகத் தூக்கிப் பிடரியில் பளார் என்று ஓர் அறை விட்டான்.

நட்டு துடியாய்த் துடித்துப் போய் விட்டான்! "ஐயையோ! இன்னாவோ ராங் நடந்து போச்சு மேஸ்திரி. நான் நம்ம ஆளுன்னு கூட்டியாந்துட்டேன். . ."

அப்புசாமி கம்பீரமான மிடுக்குடன் முக்கால் பிளேடை அதட்டினார். "ஸ்டாப்! ஒய் டு யூ அடி ஹிம்? ஐ வில் போலீஸ்! கமிஷனர் மை ஃபிரண்ட். . ."

"சலாம் சார்! இந்தப் பொறுக்கிப் பயலை யாரையோ கூட்டியாரச் சொன்னால் உங்களை மிஸ்டேக்கா இட்டாந்திருக்கான். . . அறிவு கெட்ட நாயி!"

படாரென்று நட்டுவின் பிடரியில் இன்னொரு அடி விழுந்தது.

அப்புசாமி கஷ்டப்பட்டுச் சிரிப்பை அடக்கிக் கொண்டார்.

"எனக்கு எப்படி அடி வாங்கி வெச்சே? வேணும் குட்டிக்கு வேணும்?" என்று மனதுக்குள் மகிழ்ந்து கொண்டார்.

போலீஸ் கேஸ் என்றதும் முக்கால் கொஞ்சம் கலகலத்து விட்டான்.

இரண்டு கையையும் வினயமாகக் கூப்பி, "மன்னிச்சுக்குங்க தொரை! இந்தப் பயல் தண்ணி அடிச்சிட்டு மிஸ்டிக் பண்ணிட்டான்... தொரை மனசுலே வெச்சுக்காதே. நீங்க போய் வாங்க."

அப்புசாமி போகவில்லை நட்டுவுக்கு இன்னும் நாலு மண்டகப்படி நடத்தவேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. டாக்ஸியை விட்டு இறங்கினார். மணவாள முதலியார் மாதிரி ஒரு பக்கம் சாய்ந்து நொண்டி நடந்தவாறு, "எப்பா... ரௌடி? இதுதான் உன் வீடா? ஐயோ பாவமே, என்ன இது? வீடா இது? கெடங்குத் தெருவுலே தேங்கா போட்டு வெக்கற கோடவுன் மாதிரியல்ல இருக்குது. காற்று இல்லே... சுகாதாரம் இல்லே... ரொம்பப் பாவமா இருக்குதுப்பா..."

அவர் இப்படி இரக்கப்பட்டதும், ஐடியா ஒன்று பளிச்சிட்டது முக்காலுக்கு. ஆள் இரக்கப்படறான். ஒரு மூச்சு மூக்காலே அழுதா நூறு இருநூறு இம்மிடியட்டாகக் கைச் செலவுக்கு இறக்கிக்கலாம்.

"தொரே... ஏளைங்களுக்கு இதுதாங்க பங்களா... கொசுவும், மாட்டு மூத்திரமும் புடுங்குதுங்க... ராத்திரிலே கண்ணு மேலே கண்ணு போட முடியுங்களா? வவுத்துக்குச் சோறு துண்ணு மூணு நாளு ஆவுது."

அப்புசாமித் தன் சட்டைப் பையிலிருந்து ஒரு புத்தம் புது நூறு ரூபாய்க் கட்டை எடுத்து சீட்டுக் கட்டை

மாஜிக்காரர் வருடுவது போல் ஓரத்தைப் படபடவென்று வருடிக்கிமேப் போட்டார்.

முக்காலின் கண்களும் நட்டுவின் கண்களும் பளபளத்தன.

"எய்யா! உன் பெயரென்ன?" அப்புசாமி அன்போடு விசாரித்தார்.

"ஹி ஹி!" என்றான் முக்கால். "நமக்கென்னங்க பேரு? முத்தப்பன்கற முக்காலுங்க. . . ஐயோ. . . தொரை நிற்கிறீங்களே. . ." என்றவன் நட்டுவின் பிடரியில் ஓங்கி அறைவிட்டான். "டேய் முண்டம்! அறிவு கெட்ட நாயி; கஸ்மாலம்! குர்ச்சியைக் கொண்டாடா. பெரிய மனுஷாள் நிற்கிறது கண்ணுக்குத் தெரியலே."

அப்புசாமி முக்காலைப் பாராட்டினார் "இந்தக் காலத்துப் பசங்களுக்கு மரியாதை எங்கேப்பா தெரியுது. அப்பப்போ நீ போட்ட மாதிரி மண்டையிலே நாலு நல்லாப் போடணும். . ."

நாற்காலி கொண்டு வந்து போட்டான் நட்டு.

"பார்த்தியா பார்த்தியா?" என்றார் அப்புசாமி. "நல்லது சொன்னால் என்னைப் பார்த்து முறைக்கிறான் இந்தப் பயல்."

"ஐயோ!" என்றான் நட்டு. "நான் எங்கேங்க முறைச்சேன். . ."

"அட சீ! மூடு வாயை!" பளீரென்று அவன் முகத்தில் ஒரு குத்து விட்டான் முக்கால். "பெரிய மனுஷாளுக்கு எதிரா வாய்க்குவாய் பேசறியா?"

"பொய் மட்டும் பேசக்கூடாது வயித்துக்கு இல்லியா. . . ஆயிரமோ இரண்டாயிரமோ கேளு.

கொடுத்துடலாம்... ஆனால் பொய் பேசக்கூடாது. இதோ பார், இப்ப கூட நீ என்னைப் பார்க்கத் திரும்பினப்போ அவன் என்னைப் பார்த்து விரலை ஆட்டறான் வெளியே வா கவனிக்கிறேன்னு..."

அவ்வளவுதான். முக்கால் பிளேடுக்கு வந்ததே ஆத்திரம் நட்டுவின் கிராப்பை ஒரு பாய்ச்சலில் பிடித்துக் கரகரவென்று மூன்று சுற்றுச்சுற்றி வீசினான். "மருவாதி கெட்ட நாயி! நீ யாரு! அவரு யாரு? அவுரு லச்சாதிபதி! இன்னாவோ பிச்சைக்கார நாயிங்களாட்டம் நாம இருக்கோமேங்கிற கோராமையிலே, நூறு இரு நூறு ஒதவி செய்யலாம்னு நம்மளைப் பத்திக் கேட்டுகினுகிறாரு... நீ அவருக்குப் பழிப்பு காட்டறே... முறைக்கறே. டாய் மவனே... மாஞ்சாவை எடுத்து மாடியிலே ஒலத்திப் பூடுவேன்!" காலால் எட்டி ஓர் உதை விட்டான்.

நட்டுவால் பொறுக்க முடியவில்லை.

"யோவ் முக்காலு! சத்தியமா நான் அவரை முறைப்பு காட்டலை வாத்யாரே! அவரு பொய் சொல்றாரு!"

"அட சீ!" முழங்கையால் நட்டுவின் வயிற்றில் ஒரு ஏற்று ஏற்றினான் முக்காலு "இவ்வளவு பெரிய மன்ஸனைப் பார்த்துப் பொய் சொல்றாருன்னு சொல்றே கஸ்மாலம்!"

அப்புசாமிக்கு இதற்கு மேல் பொறுக்க முடியவில்லை; கபகபவென்று சிரித்து விட்டார்.

முக்கால் திடுக்கிட்டு, "என்னங்க சார் சிரிக்கிறீங்க?" என்றான்.

"ஐயோ! ஐயோ! ஐயோ!" அப்புசாமியால் சிரிப்பை அடக்க முடியவில்லை... "ஏண்டா நட்டு! போதுமாடா

உனக்கு? இன்னும் வேணுமா! யோவ் முக்காலு! எப்படி ஐயாவோட ஆக்டிங்கு! நீங்களே நம்பீட்டீங்க இல்லே!"

"அட கஸ்மாலம்!" முக்கால் பிளேடு மோவாயில் கை வைத்தான். "எய்யா... நீ அப்புசாமி வாத்யார்தானே?"

அப்புசாமி, "ஹி ஹி!" என்று இளித்தார். "அப்புசாமியேதான்! ஏன், மணவான மொதலியார்னு பயந்துட்டீங்களா! யோவ் நட்டு! வாத்தியார் கும்கும்னு எப்படி உனக்குக் குடுத்தார் பார்த்தியா பொசாதம்? அன்னிக்கி என்னியெ வாத்தியார் குத்தினப்போ எனக்கு இப்படித்தானே இருந்திருக்கும்..."

நட்டு பல்லை நறநறத்தான். "யோவ்! எங்ககிட்டேயே உன் டுப் வேலையைக் காட்டிட்டியா?"

அப்புசாமி மகாத் தெம்பில் இருந்தார். "உங்ககிட்டே என்னடா... உங்க அப்பன்கிட்டே கூடக் காட்டுவேன்..."

முக்கால் பிளேடு அப்புசாமியை நெருங்கினான். "சபாசு வாத்தியாரே சபாசு! நல்லா நடிச்சிட்டே! சரி துட்டை எடுய்யா... எத்தினி ஆயிரம் கெடச்சுது?"

அப்புசாமி, உறுமினார். "அட சீ! எடு கையை தோளிலிருந்து!"

முக்கால் அதிர்ச்சி அடைந்தான். "யோவ்! நான் யாரு தெரியுமில்லே!"

"அதுக்கு வேறு ஆளைப் பாரு! என்கிட்டே மருவாதியா நடந்துகிட்டா... உங்களுக்கு வேணும்கிற துட்டுகெடைக்கும். என்னன்டை பாய்ச்சல், உதாரு காட்டினீங்க... இதபார்த்தியா... கையிலிருக்கிற இந்த ஒற்றை ஆயிரத்தோடு சரி..."

முக்கால் பினேடு முறைத்தான். "இன்னாமா கன்னு! சேம் ஸைடு கோலு அடிக்கிறியே!"

"போவ்! மருவாதி குடுத்து மருவாதி வாங்கு" என்றார் அப்புசாமி. "உன் முறைப்பு கிறைப்பு எல்லாம் நம்ம கையில் வெச்சுக்காதே. . ."

"நீ நம்ம தோஸ்த்தாச்சே!"

"அந்த ஐஸ் வேலையெல்லாம் வேணாம். முதல்லே மன்னிப்புக் கேள்டா. . ." அப்புசாமி நாற்காலியில் உட்கார்ந்து காலை ஆட்டிக் கொண்டு நிபந்தனை விதித்தார்.

"கேள்டாவா?" முக்கால் திடுக்கிட்டான்.

"ஆமாண்டா! ஐயாடா இப்போடா துட்டுக்காரன்டா. என்கிட்டேடா மருவாதியாடா நடந்துடா சலாம் போட்டுங்கன்னாடா. . .நூறு நூறு ரூபாடா நோட்டாடா நான்டா கறப்பேன்டா. . . முறைச்சிங்கடா. . . அம்போதான்டா."

"இன்னா கன்னு. . . நாமெல்லாம் ஒன்னு இல்லியா?"

"மாட்டுச் சாணியை வாயிலே போட்டியே. அதுக்கு மன்னிப்புக் கேனு! ஏண்டா டேய்! பசங்களா. . . என்னை என்னென்னு நினைச்சிங்க?"

"வாத்யாரே! மன்னிப்பு கேட்டுக்கறோம். . ."

"வெறுமே கேட்டுகினா எப்படி? கீளே விழுந்து கும்புட்டுக் கேட்டுக்கனும். டேய் நட்டுப்பையா! என்னடா வாயைப் பொளக்கிறே? வுழுடா கீழே."

"டேய்! கஸ்மாலம்." அவன் பிடரியில் ஒரு தட்டுத் தட்டினான் முக்காலு. "ஐயா சொல்றாரே. . . காதுலே வுழலே. . . வுழுந்து கும்பிடுடா. . ."

"உன்னையும் தாண்டா முக்காலு. . .!"

பல்லை நறநறத்துக் கொண்டு முக்கால் சலாம் போட்டான்.

'பணத்துக்கு இத்தனை மதிப்பா? பணியாத ரௌடிய யெல்லாம் பணிய வைக்கிறது' அப்புசாமி பெருமிதத்தால் பூரித்தார். ஏனோ அவருக்குத் திடுமென்று சீதாப்பாட்டியின் நினைவும் அவளிடம் தான் விட்ட சவாலும் நினைவுக்கு வந்தது.

'பணிய வைக்கவேண்டிய அடுத்த ரௌடி - சீதே!', உள்ளம் துறுதுறுத்தது.





## 19

சாப்பாட்டுத் தட்டை விட்டெறிந்தார் அப்புசாமி, "முட்டைக்கோஸ் கறியா இது? மாடு தின்கிற தழை இதை நான் திங்கணுமா? வரவர உன் மனசிலே என்னதாண்டி நினைப்பு?"

சீதாப்பாட்டி குரல் கரகரக்க, பயந்தவாறு, "ம... ம... மன்னித்துக் கொள்ளுங்கள்... தேங்காய் வாங்கி வர மறந்து போச்சு!" என்று நடுங்கினாள்.

"மறக்கும்! டங்கு டங்குன்னு ஆடிகிட்டு உங்க கிழவிங்க கழகத்துக்குப் போறியே! அதுக்கு மறந்ததா?"

சீதாப்பாட்டியின் கன்னத்தில் ஓங்கி ஓர் அறை அறைந்தார்.

ஆ! என்று கன்னத்தைப் பிடித்துக்கொண்டாள் சீதாப்பாட்டி. "இனிமேல் நான் முட்டைக்கோஸ் கறிக்குத் தேங்காய் ஞாபகமாய் போடறேன்... தேங்காய் ஞாபகமா போடறேன்..."

"இனிமேல் என்ன, இனிமேல். இப்பவே வாங்கிவந்து போட்டாகணும்..."

"என்ன... இந்த ராத்திரியிலா! கடையெல்லாம் மூடியிருக்குமே" பரிதாபமாகக் கெஞ்சினாள் சீதாப்பாட்டி.

"சீ! கழுதை! எதிர்த்தா வாயாடறே? கடை மூடியிருந்தால் யார் வீட்டுத் தென்னை மரத்திலேயாவது ஏறு; இல்லாட்டிப் பிள்ளையார் கோவில் வாசலிலே சிதர்

தேங்காய் உடைத்திருப்பாங்க! பொறுக்கிட்டுவாடி பொறுக்கி!"

சட்! சட்! அப்புசாமி கனவு கலைந்தது. முகத்திலே சூடா ஏதோ பட்ட மாதிரி இருந்தது. கண்ணை விழித்தார். ஏழு மணி. வெய்யில் சுரீரென்று அவர் முகத்தில் அடிக்குமாறு சீதாப்பாட்டி ஜன்னலின் திரையை நன்றாகத் தள்ளிக்கொண்டிருந்தாள்.

வெள்ளிக்கிழமையாதலால் சீதாப்பாட்டி எண்ணெய்க் குளிப்புக் குளித்து, நெற்றிக் குங்குமம் பளிச்சிட கமகமவென்று ஒருவித தலாங்க மணத்துடன் ஃப்ரிஜ்ஜில் வைத்த பெங்களூர் தக்காளி மாதிரி குளுகுளுவென்றிருந்தாள். கொஞ்ச நாளாக வெள்ளிக் கிழமை பகல் பன்னிரண்டு மணி வரை மௌன விரதம் அனுசரித்து வந்தாளாதலால், கையால் சாடை காட்டிக் கண்டித்தாள் - இவ்வளவு நேரமா தூங்குவது? - கெட் அப் ஐ ஸே!

அப்புசாமி சந்தை வண்டிக்காரன் மாதிரி உட்கார்ந்த வாறே முன்னும் பின்னும், இடதும் வலதும் தூக்கக் கலக்கத்தில் ஆடியவாறு கண்ணை லேசாக விழித்துப் பார்த்தார்.

"சீதே, நீ இன்னும் தேங்காய் வாங்கப் போகலை!"

சீதாப்பாட்டி 'வாட் த ஹெல் ஆர் யூ டாக்கிங்' என்றாள் சாடையில்.

அப்புசாமிக்கு ஒரு வழியாய் பிரக்ஞை வந்து, தான் செய்த முட்டைக்கோஸ் அதிகாரமெல்லாம் கனவில்தான் என்பது புரிந்தது. ராத்திரி சாப்பிட்ட சகுந்தலா வரதன் வீட்டுப் பலமான விருந்தின் விளைவும், அதற்கப்புறம் முக்கால் பிளேடைத் தான் செய்த அதிகாரமும், பெரிய ரௌடிகளையே மண்டியிடப் பண்ணியானபின், நம்ம

சீதேத் கிழவியையும் காலிலே விழ வைக்க எவ்வளவு நேரமாகும் என்று தான் சிந்தித்ததன் விளைவுமே முட்டைக்கோஸ் கறியாகியிருக்கிறது என்பது புரிந்தது

சுவரில் மாட்டியிருந்த தன் பாட்மிண்ட்டன் மட்டையைக் கையில் எடுத்துக்கொண்டு சிதாப்பாட்டி அவரருகே வந்தாள். மட்டையால் அருவருப்புடன் அவர் துப்பட்டியைச் சுருட்டிப் பறித்துத் தூரப் போட்டாள். 'எழுந்திருங்க' என்று வெறுமே சாடை செய்திருக்கலாம். டென்னிஸ் மட்டையால் லேசாக இரண்டு தரம் அவரை 'டச்' பண்ணிவிட்டாள்.

அவ்வளவுதான்.

"அட சீ! காலங்காத்தாலே பேட்டாலே ஏன் ஓங்கி ஓங்கி அடிக்கிறே?"

சிதாப்பாட்டிக்குத் தூக்கி வாரிப்போட்டது. 'மை குட்னஸ்! அபாண்டமாயிருக்கிறதே! நான் உங்களை எங்கே அடித்தேன். . . ' என்று ஆட்சேபிக்க வேண்டும் போலிருந்தது. ஆனால் மௌன விரதம் அவள் வாயைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தது. சாடையால், 'ஐ நெவர் டச்ட் யூ!' என்று தெரிவித்தாள்.

"ஓகோகோ! பேச மாட்டியா? பேஷ்! பேஷ்! உன்னை நிரந்தரமா பேச முடியாதபடி பண்ணனும்தான் நேத்துக் கூட நினைச்சுட்டிருந்தேன். சரி சரி போய் டூத்பேஸ்ட்டையும் பிரஷ்ஷையும் தண்ணியையும் கொண்டா!"

ஐயோ இங்கேயே பல் தேய்க்கப் போறாரா!

அப்புசாமி காலை ஆட்டியவாறு அலட்சியமாகப் பதிலுக்குச் சிதாப்பாட்டியை அவள் மாதிரியே பழிப்புக் காட்டினார். "உன் முறைப்புக்கெல்லாம் பயப்படற காலம் மலையேறிப் போச்சடியம்மா. ஆனானப்பட்ட ரௌடிகளெல்லாம் ஐயோ அப்பா, சாமி காப்பாத்துன்னு

ஐயா காலிலே வந்து வுழுந்தாச்சு... நீ என்னாடி? தம்மாத் தூண்டு ரௌடி! பேட்டாடி தூக்கறே பேட்டு? உன்னைச் சீட்டாடிப்புடுவேன் சீட்டு! கொண்டா ஜல்தி பேஸ்டு. நேரம் இங்கே வேஸ்டு!" அப்புசாமி உணர்ச்சி வசப்பட்ட கவிஞராக ஆகிவிட்டார்.

சீதாப்பாட்டி பொருமினாள். தன் மௌன விரதத்தை உடைத்துக்கொண்டு விடலாமா என்று கூட ஒரு கணம் தோன்றியது. அப்புறம், சே; இவர் கிராக்தனமாக ஏதோ உளறிக்கொண்டிருக்கிறார் என்பதற்காக மௌன விரதத்தை உடைத்துக்கொண்டு இவரை சண்டை பிடிப்பானேன்! லெட் ஹிம் கோ டு ஹெல். இவர் பல் தேய்த்தால் என்ன?... மூக்கைத் தேய்க்காவிட்டால் என்ன? என்று கையிலிருந்த டென்னிஸ் மட்டையை ஆத்திரத்துடன் வீசி எறிந்துவிட்டுத் தன் அறைக்குப் புறப்பட்டாள்.

அடுத்த கணம், "ஆ! அம்மாடி! மாத்ருபூதா! மகா லிங்கா! போச்சே என் பிராணன்!" என்றொரு ஓலக்குரல் வீரிட்டது.

சீதாப்பாட்டி திடுக்கிட்டாள். அப்புசாமியும் கவனித்தார்.

சீதாப்பாட்டி மண்டையில் கையை வைத்துக் கொண்டு வாசற்படி அருகே துடிதுடித்துக் கீழே உட்கார்ந்திருந்தாள்.

அப்புசாமி கட்டிலிலிருந்து எழுந்து சீதாப்பாட்டியை நோக்கி ஓடினார். "அச்சச்சோ! சீதா மாமி! அடிப்பாவி, மாமி மண்டையைப் பேர்த்துட்டியேடி!"

சீதாப்பாட்டி நெற்றியில் வைத்துக்கொண்ட கையை எடுக்கவில்லை. பெருகி வரும் இரத்தத்தை அடக்க முயற்சி செய்பவள்போல் அழுத்திப் பிடித்துக்கொண்டு தவித்தாள்.

சீதாப்பாட்டிக்கு பதட்டத்தில் உதட்டுவரை, 'ஓ! மை காட்! ஐயம் எக்ஸ்ட்ரீமிலி ஸாரி!' என்ற வார்த்தைகள் வந்துவிட்டன. ஆனால் கட்டுப்படுத்திக்கொண்டாள்.

விரைந்து வந்து சீதாப்பாட்டியருகே உட்கார்ந்து நெற்றியைப் பாபரப்புடன் நீவி விட்டாள். ரத்தக் காயம் ஒன்றும் ஏற்பட்டிருக்கவில்லை. நெற்றியில் சிறு புடைப்புக் கூட இல்லை.

'தாங்க் காட்!' என்று கடவுளுக்கு சீதாப்பாட்டி மனதுக்குள் நன்றி செலுத்திக் கொண்டவள் 'திடீரென்று இந்தக் சீதா எங்கிருந்து வந்து முளைத்தாள்? ரொம்ப ட்ரபிள் ஸம் பர்ஸனாச்சே! வெனமஸ் நம்பர் ஒன் ஆச்சே!' என்று திகைத்தாள்.

ரசகுண்டுவின் பாட்டியான சீதாப்பாட்டிக்கு ஆரம்ப நாளிலிருந்தே சீதாப்பாட்டியையும், அவளுடைய நாகரிகத்தையும், அவளுடைய ஆங்கிலப் பேச்சையும், அவள் நடத்தும் பா. மு. கழகத்தையும், அதில் அவள் வகிக்கும் பதவியையும் கண்டு பொறாமை; எரிச்சல். பாட்டிகள் முன்னேற்றக் கழகத்தில் அங்கத்தினராகத் தானும் சேருவேன் என்று நாகரிகப் பெண்மணிகள் அங்கம் வகிக்கும் தன் கழகத்தில் படிப்பில்லாத நாட்டுப் புறமான அவளை 'அட்மிட்' செய்வது பற்றி சீதாப்பாட்டி ஆட்சேபித்ததால் அவளுக்கு ஏற்பட்ட ஆத்திரம் பற்றியும், அப்புசாமியைத் தன் கைக்குள் போட்டு கொண்டு, அதன் மூலம் சீதாப்பாட்டியை மட்டம் தட்ட அவள் அடிக்கடி முயன்று கொண்டிருந்ததும், கடைசியாக, அப்புசாமியைப் பிரித்து ஆப்பிரிக்க இளவரசிக்கே அவரை மணமுடிக்க செய்த மாபெரும் சதியும் சீதாப்பாட்டிக்கு கடகடவென்று அந்த ஒரு வினாடியில் ஞாபகத்துக்கு வந்து 'ஷி டிஸர்வ்ஸ் திஸ் ஸார்ட் அஃப் வெல்கம்' என்று எண்ணிக்கொண்டே குளிர்ந்த நீரினால் அவள் நெற்றியை நீவி விட்டு முதலுதவி செய்தாள்.

சீதாப்பாட்டியின் கையைப் பிடித்துக் கொண்டே சீதாப்பாட்டி மெதுவாக எழுந்தாள்.

சீதாப்பாட்டியின் தளதளவென்ற தோற்றம் சீதாப்பாட்டிக்கு வயிற்றெரிச்சலை ஏற்படுத்தியது. 'தொம் தொம்'மென்று எப்படி இருக்கிறாள்! கையைப் பிடித்துக் கொண்டு எழுந்திருக்கிறேன்... எலும்பே தட்டுப்படலையே. ஏதோ நிண்டு தலைகாணியைப் பிடிச்சுட்டு எழுந்திருக்கிறாப் பல அல்லவா இருக்கு. காதுலே வைரத்தோடு... புதுசா என்ன? பழக் ஒண்ணு மொச்சைக் கொட்டையா இருந்ததே அதே ஜோடியா... இது இன்னொரு ஜோடியா... பட்டுப்புடவைதான் எவ்வளவு அழுத்தம். காஞ்சிபுரம்... ஸ்பெஷல் தறியில் ஆர்டர் கொடுத்து நெய்யச் சொல்லியிருப்பாள்... இவளுக்கென்ன மகராஜி...

"உஸ்ஸ்... அம்மாடி! மாதுர்பூதா! மகாலிங்கா! என்னடீம்மா சீதே... நல்ல காலம் போ... வராதப்பட்ட மனுஷி எத்தனை வருஷம் கழிச்சி வந்திருக்கேன். வாங்கோன்னு வாயைத் தெறந்து ஒரு வார்த்தை சொல்லாட்டாலும் சும்புக் கட்டையாலே மண்டையிலே ஒண்ணு நல்லாத்தான் போட்டியேடிம்மா... அந்த மாத்ருபூதம் மகாலிங்கம்தான் மண்டையைக் காப்பாற்றினார்.... எனக்குத் தலையைச் சுற்றிட்டு வருது. அந்த மெத்தைக் குறிச்சி மேலே போய் உட்கார்ந்துக்கறேன் கொஞ்சம்... தலையை என்னம்மா சுற்றிட்டு வருது... நல்லாயிருக்கியாடிம்மா! என்னவோ நீ என்னைப் பாகற்காயா நினைச்சாலும்கூட, நான் வந்து எட்டிப் பார்க்காம போக மனசாகலே... உஸ்ஸ் அம்மாடி... பெரிய கண்டத்திலிருந்து பிழைத்தேன்..."

அப்புசாமி மனைவியை முறைத்தார். "நல்லவேளை! மாமி கண்ணு கிண்ணு போயிருந்தால் என்ன கதி ஆகியிருக்கும்?"

"கதி என்ன மாமா? கண்ணு ரெண்டும் போயிருக்கும். மாதுர்பூதா மகாலிங்கான்னு நாலு கோயில் வாசலிலே பிச்சைக்காரியா நின்னுக்கிட்டிருப்பேன். உங்க புண்ணியத்திலேதான் கண் பிழைச்சது. என்டியம்மா, தலையைச் சுத்தாச் சுத்தறது ஒரு வாய்க் காப்பி தர்ரயா? நிலைகலங்கிப் போயிட்டேன்டியம்மா. இப்படியே நான் கொஞ்சம் சாஞ்சுக்கட்டுமா? ஒரு வார்த்தை எப்படி இருக்குன்னுதான் வாயைத் திறந்து கேளேன். முத்தா உதிர்ந்துவிடும்."

அப்புசாமி குறுக்கிட்டு "அவன் பன்னிரண்டு மணிவரை பேசமாட்டான் மாமி. இன்னைக்கு மௌன விரதம். வாயைத் திறக்காமலே வர்ரவங்களையெல்லாம் மட்டையாலே அடிக்கிறது என்கிற விரதம்..."

"உஸ்ஸ்... அந்த விரதம் இந்த விரதம்னு ஆயிரம் விரதம் இருக்கிறதைவிட அகத்துக்காரர் முகம் கோணாமல் நடக்கறதுதான் பெரிய விரதம். நான் தப்பாச் சொல்லியிருந்தால் மன்னிச்சுக்கோடியம்மா... இந்த வாயை அடக்கி அடக்கி வெச்சாக்கூட நல்லது பட்டுபட்டுனு வந்துடறது... அதுதான் நான் இப்படி இருக்கேன் - உஸ்ஸ். தலையைச் சித்தே சாய்ச்சிகட்டுமா இப்படி - ஒரு தலைக்கு உசரப்பலகை இருந்தா தாரியாடியாம்மா."

அப்புசாமி பரபரப்புடன் "நான் கொண்டு வந்து தர்றேன் மாமி", என்று ஓடிச்சென்று சீதாப்பாட்டியின் ஃபோம் தலையணை இரண்டைக் கொண்டு வந்து தந்தார். "சோபாவிலே நல்லாச் சாய்ந்து கொள்ளுங்கள் மாமி, பரவாயில்லே. படுத்துக்கொள்ளுங்க... நல்ல வேளை... கண்ணு பிழைச்சுதே..."

"உங்களாட்டம் புண்ணிய புருஷர்களையெல்லாம் இன்னும் கொஞ்ச நாளாவது இந்தப் பாவி பார்க்கணும்னு

கடவுள் நெனச்சிருக்கான் ... நீங்க நல்லாயிருக்கீங்களா. .. எனக்கு ஒரே கவலையாயிட்டுது ... ராத்திரி - நீங்க பாயசம் உறிஞ்சனப்போ ரெண்டு இருமல் இருமினீங்களா . . ராத்திரி பூராத் தூங்கவேல்லே நான். என்னடாது ... மாமா பாவம் விருந்தைச் சாப்பிட்டுத் தொண்டையைக் கனைச்சிட்டுப் போறாரேன்னு. .. தொண்டையை ஒண்ணும் பண்ணலைலே ..."

சீதாப்பாட்டி அப்புசாமியை முறைத்துப் பார்த்தாள். ராத்திரி ... விருந்து, தொண்டை, இருமல்.... வாட் இஸ் ஆல்திஸ். . இவர் எப்போ போய் இவள்கிட்டே விருந்து சாப்பிட்டார்...?

சீதாப்பாட்டி அப்புசாமியை எரிப்பதுபோல் பார்த்தாள். அதைக் கொஞ்சமும் லட்சியம் செய்யாமல் அப்புசாமி சீதாப்பாட்டிக்கு கர்ம சிரத்தையாகச் சிசுருஷை செய்து கொண்டிருந்தார்.

"வெயிட் அன்டில் ட்வெல்வ். . ." சீதாப்பாட்டி புழுங்கினாள்.



## 20

மெத்து மெத்தென்று ஃபோம் சோபா, அப்புசாமியின் அதைவிட மிருதுவான உபசாரம் மேலே விசிறி, ஜன்னலிலே போனஸ் காற்று, மண்டையிலே மட்டை கொடுத்த லேசான விண் விண்

சீதாப்பாட்டி கொர் கொர்ரென்று குறட்டை விட்டே தூங்க ஆரம்பித்துவிட்டாள். ஆள் மெல்லிசாக இருந்தாலும் குறட்டை படு நிடகாத்திரம் நீளமாக மார்ச் செய்து கொண்டே போய் எதிர்பாராத நேரத்தில் 'ஹால்ட்' என்று அதட்டுவதுபோல், ஒரு நீளக் குறட்டை அதை அதட்டும் ஒரு சின்னக் குறட்டை நீளம் சின்னதுக்குப் பயந்து கட்டுப்பட்டதுபோல் ஒரு விநாடி மௌனம். போலீஸ்காரர் விரட்டிவிட்டு நகர்ந்ததும் பழையபடி அதே இடத்தில் கடையைப் பரப்பும் தேர்ந்த பிளாட்பார வியாபாரிகள் போல் நீளக் குறட்டைகள் மறுபடி தலைதூக்குகின்றன. சார்ஜண்ட் நடுநடுவே வருகிறார்.

சீதாப்பாட்டிக்கு நாராசமாயிருந்தது.

பன்னிரண்டு எப்போது ஆகும் மௌன விரதத்தைக் முடித்துக்கொண்டு அப்புசாமியை உண்டு இல்லை என்று ஆக்கலாம் என்று, அவள் பல்லைக் கடித்துக்கொண்டு பொறுமையாகத் தன் அறைக்குள் குறட்டை ஒலி கேளாதவாறு கதவை நன்றாகச் சாத்திக்கொண்டு கழக வேலை கொஞ்சம் கவனிக்கலானாள்.

'ஹாரிபிள்; மைகாட்!' என்று எண்ணிக்கொண்டாள். இரும்புக் கதவாய் இருந்தால்கூடத் துளைத்துக் கொண்டு

வருகிறதே... இப்படி ஒரு நேஸ்ட்டி ஸ்னோரிங்கா? யார் வீட்டிலே வந்து யார் குறட்டை விடுகிறது... அதுவும் ஜம்மென்று சோபாவில் படுத்துக்கொண்டு.

ஷி ஹாஸ் நோ பிஸினஸ் டு கம்ஹியர்... அவள் வந்ததால்தானே அடிபட்டுக் கொண்டான் ஐந்து பத்து கடனுக்கு வந்திருப்பாள் என்னவோ... விருந்து... பாயசம்... உறிஞ்சின பொதும் இருமல் என்று ஸம்திங் அவர்கிட்டே சொல்லிட்டு இருந்தானே.

பா. மு. கழகத்தின் தலைவர் பதவிக்கான எலக்ஷன் சமயம் இந்த எலிமென்ட் இப்போ பார்த்து இந்தப் பக்கம் வந்திருப்பது அவ்வளவு நல்லதில்லையே.

பன்னிரண்டடித்தது.

சீதாப்பாட்டி டப்பென்று கையிலிருந்த புத்தகத்தை மூடி வைத்தாள். சீதாப்பாட்டி குறட்டை விட்டுக் கொண்டிருந்த முன் ஹாலுக்கு வந்தாள். அப்புசாமி ஊஞ்சலில் உல்லாசமாகக் காலை ஆட்டியவாறு முன்னும் பின்னும் அசைந்து கொண்டே குறட்டை ஒலியை ரசித்தவாறு வேர்க்கடலையை சுவாரசியமாகக் கொறித்துக் கொண்டிருந்தார்.

கீழே ஒரே வேர்கடலைக் குப்பை.

மின் விசிறி நின்றது.

அப்புசாமி விசிறியை ஒரு நோக்கும் அதை அணைத்த மனைவியை மறுநோக்கும் பார்த்தார்.

"மனுஷி ஒருத்தி அடிபட்டுத் தூங்கிக்கிட்டிருக்கிறாளே, அதை ஏன் நிறுத்தற?"

சீதாப்பாட்டி சூடாகச் சொன்னாள். பன்னிரண்டு மணிவரை மௌன விரதத்தால் அடக்கி வைக்கப்பட்ட ஆத்திரம்...

"இஸ் திஸ் எனி செளல்டரி? யார் வீட்டிலே வந்து யார் குட்டைவிட்டுத் தாங்கறாது. ஆஸ்க் ஹெர் டு கெட் அவே. போதுமான ரெஸ்ட் எடுத்துக் கொண்டாகி விட்டது."

அப்புசாமி ஒரு வேர்கடலை மூக்கை உள்ளங் கையில் நெத்திக் கொண்டிருந்தார் "மூக்கைப்பாரு மூக்கை!"

சீதாப்பாட்டி தன்னைத்தான் அப்புசாமி குறிப்பிடுவதாக நினைத்து, "உங்க சமையல்காரி மூக்குக்கு என் மூக்கு ஒன்னும் அழகு குறைந்துவிடலை. சரி. சரி.. ஐந்தோ பத்தோ கொடுத்து அவளை விரட்டுங்க முதலிலே."

அப்புசாமி அலட்சியமாகச் சிரித்தார். "உன் மூக்கை யார்டி சொன்னாங்க. நான் வேர்கடலை மூக்கைச் சொன்னேன். இந்த மாதிரிதான் உன் மூக்கையும் உடைக்கப் போகிறேன். அதற்கு ஒத்திகை பார்க்கிற மாதிரி இல்லையா, நான் இப்போது வேர்க்கடலை மூக்கை உடைப்பது?"

'ரொம்பத் திமிரில்தான் இருக்கிறார்' என்று சீதாப்பாட்டி குமைந்தாள். "கையிலே நாலுகாசு வைத்திருக்கிறீர்களாக்கும். தெருவிலே போகிற சமையல் காரிகளுக்கெல்லாம் இங்கே இடமில்லை."

"மண்டையை உடைக்கிறதையும் உடைத்துட்டு விரட்டறியா? தெருவிலே போகிற சமையல்காரியாடி இவள்... நேற்று விருந்தை நீ சாப்பிட்டிருக்கணும்... ஐயோ அந்த முந்திரிப் பருப்புப் பால் பாயசம்... பொதினா வடை . கைக்கு ஏதாவது பண்ணிப் போட்டாக்கூடத் தப்பில்லை."

சீதாப்பாட்டி பல்லைக் கடித்துக் கொண்டாள் விதவிதமாக இப்படிச் சோற்றைப் போட்டுத்தான் முன்னே

இவரைக் கைக்குள் போட்டுக்கொண்டு ஆட்டம் காட்டினாள். ஹிஸ்டரி ரிபீட்ஸ் இட்ஸெல்ஃப்? இதை என்கரேஜ் பண்ணக்கூடாது. "பழையபடி பல்லை இளிச்சிட்டு இவள் வீட்டுத் திண்ணைக்குப் போய் விட்டீர்களாக்கும் பிச்சைச் சாப்பாட்டுக்கு... ஆர் யு நாட் அஷேம்ட்?"

"சும்மா ஓட்டாதே" அப்புசாமிக்குப்... பிச்சை என்றதும் ரோஷமாகிவிட்டது. "நான் ஏண்டி பிச்சைக்குப் போகிறேன். ராஜா மாதிரி உட்காரவைத்து ஒரு மகாப்பட்ட பணக்காரி கையைக் கட்டிட்டு உபசாரம் பண்ணிப் பண்ணி விருந்து போட்டாள்."

சீதாப்பாட்டிக்கு திக்கென்றது. பணக்காரி...! கை கட்டிட்டு உபசாரம் பண்ணி விருந்து... அந்த ஆப்ரிக்கப் பித்துக்குளி இளவரசி இடீலி மாதிரி யாரையாவது மறுபடி சிநேகம் பண்ணிக்கொண்டுவிட்டாரா? இந்த வெளமஸ் கிழவி வேறு ஸீனில் தலை காட்டியிருக்கிறாள்.

எந்தப் பணக்காரியை இவர் சிநேகம் பிடித்திருக்கிறார்? ஒன்றும் தெரியாதவன் மாதிரி படுத்துத் தூங்குகிற இந்தச் சமையல்காரக் கிழவி ஏதாவது பிளான் பண்ணிக்கொண்டுதான் வந்திருக்கிறாளா?

அவளைப் பார்க்க ஆத்திரமாக வந்தது சீதாப்பாட்டிக்கு. "சரி, சரி. உங்ககிட்டே ஏதாவது சில்லறை இருந்தால் அவள்கிட்டே கொடுத்தனுப்புங்க... உங்களை ஸ்டிரிக்டா வார்ன் பண்றேன். இவள்கிட்டே ஏதாவது நீங்க அக்வெய்ன்ட்டன்ஸ் வெச்சுகிட்டீங்க, நீங்க தொலைந்தீங்க..."

அப்புசாமி சிரித்தார். "ஆடு நனையுதேன்னு ஓநாய் அழுததாம். எனக்கு எப்படி ஜாக்கிரதையாக நடந்துக்கறதுன்னு தெரியும்... நீ சீக்கிரம் ஒரு முகூர்த்தம் பார்."

"வாட்டு யூ மீன்?"

"அதாண்டி... நம்ம பந்தயம் என் காலிலே நீ எல்லார் எதிரிலும் விழணுமில்லையா, அந்தப் பந்தயம், அதுக்கு தான்."

சீதாப்பாட்டி அலட்சியமாகச் சிரித்தாள். "என்னை ஜெயிக்கிறது அவ்வளவு சுலபம்னு நினைச்சுக்கிறீர்களா? உங்களுக்குக் கொஞ்சம் லாங் ரோப் கொடுத்திருக்கிறேன். தட்ஸ் ஆல்."

தூங்குவது போலிருந்த சீதாப்பாட்டிக்கு எப்போதோ விழிப்பு வந்துவிட்டிருந்தது. கணவனும் மனைவியும் என்ன விஷயமாக விவாதிக்கிறார்கள் என்பதைச் சுவாரசியமாகவும் கவனமாகவும் வார்த்தைக்கு வார்த்தை கேட்டுக் கொண்டிருந்தாள்.

என்னது... மாமா மறுபடி ஏதோ பந்தயம் போட்டிருக்கிறார் போலிருக்கிறது... இந்தக் கர்வம் பிடிச்ச கிழவி என்னவோ சவாலாச் சொல்றாளே, என்னை அப்படிச் சுலபமா ஜெயிக்க முடியாதுன்னு... என்ன ஆணவம்டாப்பா... அடி சீதே! நான் ஒருத்தி வந்திருக்கேண்டி - மாமாவை ஆதரிக்கணுங்கறதை மறந்துட்டே...

அப்புசாமிக்கு உடனடியாகத் தன் ஆதரவைத் தெரிவிக்க, அதுவும் சீதாப்பாட்டி எதிரில் பகிரங்கமாகத் தெரிவிக்க அவளுக்கு ஒரே துடிப்பாக இருந்தது.

கண் விழித்தாள்; ஒன்றும் தெரியாதவள்போல் தலையைப் பிடித்தபடி எழுந்து கொண்டாள். "அம்மாடி! இப்ப கொஞ்சம் தேவலை. என்னவோ சபதம்... அது இதுன்னு காதிலே விழுந்ததே. நம்ம வீட்டு விவகாரத்திலே தலையிடறாளே என்று மாமா நினைத்துக் கொண்டால் சொல்ல வேண்டாம்..."

சீதாப்பாட்டி பல்லைக் கடித்தாள். "ப்யூர்லி இது எங்கள் பர்சனல் மாட்டர். நீங்க அன்னெஸஸரியாகத் தலையிட வேண்டாம். நாங்குகிற மாதிரி ஒட்டுக் கேட்டீர்களாக்கும்... மைன்ட் யுவர் ஓன் பிஸினஸ்! கெட் அவுட்!"

சீதாப்பாட்டி சட்டென்று எழுந்துகொண்டாள்.

தாங்க முடியாத துக்கத்தைத் தாங்கிக் கொள்வது போல் அவள் மென்று விழுங்கியது ஏதோ தெரியாத்தனமாக ஒரு முழுப் பொருவிளங்காய் உருண்டை அவள் தொண்டையில் அடைத்துக்கொண்டு அவள் தவிப்பது போலிருந்தது.

வாசலை நோக்கிச் சில அடிகள் எடுத்து வைத்தாள். பிறகு அப்புசாமியைப் பார்த்து, "மாமா, நீங்க நேற்று விருந்திலே பாயசத்தைச் சாப்பிட்டுட்டு இருமினீங்களேன்னு கவலைப்பட்டுட்டு, ஒரு வார்த்தை விசாரித்துட்டுப் போக வந்தேன்... என் மண்டையிலே அடிபட்டது கூடப் பரவாயில்லை. மதியாதார் வாசலை மிதிக்கக் கூடாது... நான் மிதிச்சு கெட்டு அவுட்டை வாங்கிக் கட்டிக் கொண்டேன்..." என்றாள்.

அப்புசாமி மசாலா தோசை மேல் வைத்த பட்டர் மாதிரி உருகினார். "சீதா மாமி!" என்றார் உணர்ச்சி வசப்பட்டு. "நீங்க இன்னும் கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக் கொண்டு போகலாம்."

சீதாப்பாட்டி கோபமாக கார்க் கதவைத் திறந்து டமாரென்று அடித்துச் சாத்திக் கொண்டு கிளப்புக்குப் போய்விட்டாள் - அட்லீஸ்ட் திரும்பி வருகிறபோதாவது அந்த ஓல்ட் பாண்டிக்குட் இடத்தைக் காலி பண்ணியிருக்காதா என்று.

அவள் வீட்டுக்குள் நுழைந்தபோது 'கிகிகிகி' என்று சீதாப்பாட்டி கிச்சு கிச்சு மூட்டப்பட்ட ஆந்தைக் குஞ்சு

மாதிரி இளித்துக்கொண்டு வாய் பூராப் பல்லாக அல்லது பல் பூரா வாயாக அப்புசாமியுடன் என்னவோ ரசித்துக் கொண்டிருந்தான்.

அப்புசாமி, "ஆகா. உங்களுக்கு ரொம்ப எடுப்பாக இருக்கும்... பாருங்களேன்... எனக்கே எவ்வளவு அழகாக இருக்கிறது" என்றவாறு, சிதாப்பாட்டியின் விலையுயர்ந்த பட்டுப் புடவை ஒன்றைத் தன் உடம்பு மேல் வைத்துக் காட்டிக் கொண்டிருந்தார்.



## 21

டைரியை வீசி எறிந்தார் எஸ். ஐ. வாதன். "டயரி யாய்யா இது!"

தலையைக் குனிந்து தன் இரட்டை மண்டையைச் சொறிந்தவாறு நின்ற ஸி.ஐ.டி. ஆதிக்கு, எஸ். ஐயின் கோபத்துக்குக் காரணம் புரியவில்லை. "ஒழுங்காத் தானுங்களே எழுதியிருக்கேன்," என்றவாறு முகத்தில் விழுந்த டைரியை எடுத்துப் பார்த்தார். முதல் பக்கம் பக்கம் எரிதான். அப்புறம் அ. ஆ. இ. ஈ. ஒ. அக். ABCEDZYX படம்... பட்டம். ராக உளைப் பைய்யன்.

ஆதி அசடு வழியச் சிரித்துக் கொண்டு மூக்கை உறிஞ்சிக் கொண்டார். பிறகு டப்பென்று ஒரு சல்யூட் அடித்தார். அட்டென்ஷனிலிருந்து தளர்ந்தவர், "தப்பு சார்... எக்ஸ்யூஸ் சார்... என் பய சார்... சரியான வாலுங்க சார். எழுத நோட்டுப் புத்தகம் கேட்டுட்டு இருந்தான்... பாருங்களேன். தூங்கறப்போ நைஸா பிக்பாக்கெட் பண்ணி எடுத்துக்கிட்டிருக்கான்... கில்லாடிப் பய சார். ஒரு நாளைக்கு இட்டாறேன் சார்... போக்கிரிக் களுதைங்க..."

"எய்யா! ஆதி! ஒழுங்கா டியூடியைப் பார்க்கணுமய்யா. மூணு நாளா உருப்படியா என்ன பண்ணினே?... விரலை மடக்கு!"

ஆதிக்கு விரலில் நகச் சுற்று. ஆகவே மடக்க முடிய வில்லை. "டியூட்டியை ஒழுங்காத்தானுங்க பார்க்கறேன்.

மூந்தா நான் பூரா மிட்லண்ட் அண்டை வாட்ச் பண்ணினேன். . நேற்று பூரா அசோகா ஓட்டல். இன்னைக்கு சென்ட்ரல். . ."

"பீடிக்கட்டு செலவு பண்றியே தவிர, உருப்படியா ஒரு க்ளூ கொண்டு வந்திருக்கியா? மேலேயிருந்து குடையறாங்க. . . நாக்கைப் பிடுங்கிட்டுச் சாவற மாதிரி ஏ.ஸி. கேட்கறார். . . அவன் அவன் குடும்பத்தை ஏத்திகிட்டு ஜீப்பிலே சுத்தறதுக்குத்தான் பெட்ரோல் போட்டு நீங்கங்கற மாதிரி கேட்கறார். . ."

"செய்யுங்க. . ."

"டேய் ரசம்! நீ பார்த்து செலக்ஷன் பண்ணுடா."
ரசகுண்டுவுக்குப் பெருமையாயுமிருந்தது, திணறலாகவும் இருந்தது.

ஏஸி செய்யப்பட்ட குளுகுளு ஜவுளிக்கடை ஒன்றில் அப்புசாமி தன் நண்பர்களுடன் அமர்ந்திருந்தார்.

விதம் விதமான பட்டுப் புடவைகளைச் சிப்பந்தி கொண்டு வந்து தள்ளிக் கொண்டிருந்தார்.

ரசகுண்டு அப்புசாமியின் காதருகில் கிசுகிசு குரலில் "தாத்தா . . ஒரு நிமிஷம் எழுந்திருந்து அந்தப் பக்கம் வாங்களேன்," என்றான்.

சிப்பந்தி, "சார் . . . விலையைப் பற்றிக் கவலைப் படாதீங்க. இன்னும் சீப்பா வேணும்னாலும் இருக்கு" என்றார்.

அவ்வளவுதான். அப்புசாமி அந்த ஆளைப் பார்வை யாலேயே ஒரு பீரோ உயரத்துக்குத் தூக்கி எறிந்திருப்பார். "நாங்க ஒண்ணும் சீப் ஆளுங்க இல்லய்யா. . ."

"ஐயையோ . . . அப்படிச் சொல்லலீங்க. . . அவரு ஏதோ சொன்னாருங்களேன்னு. . ."

அப்புசாமி மன்னிக்கத் தயாராயில்லை. "இன்னும் உசத்தியா எடுய்யா... ஒரு புடவை ஆயிரம் ரூபாயானாலும் சரி..."

"தாத்தா..." ரசகுண்டு அவரை ஒருபுறம் கூட்டிப் போனான் பரபரப்புடன்.

"என்னடா ரசம்?"

"இவ்வளவு ஜரிகை போட்டதெல்லாம் எங்க பாட்டி கட்டிக்கலாமா? அவள் வின்டோ ஆச்சே..."

"வின்டோ இல்லேடா முண்டம்... விடோ..."

"சரி, சரி... விடோவோ வின்டோவோ... நான் என்ன சொல்றேன்னா... பேசாம இந்தப் புடவையை ருக்மணிக்கு எடுத்திடலாம் தாத்தா. எங்க பாட்டிக்கு நல்ல வெள்ளை வெளேர்னு திக்கா மல்லு ஒரு பீஸ் வாங்கிடலாம்..."

"சே சே! உன் ருக்குமணிக்கும் ஒரு பட்டுப் புடவை வாங்கிட்டாப் போகுது... ஆனால் உன் பாட்டி கண்ணைப் பறிக்கிற மாதிரி ஜிலுஜிலு ஜரிகை போட்ட பட்டுப் புடவை கட்டாயம் கட்டியே தீரணும். அதைக் கட்டிட்டு சீதேக் கிழவி கண்ணிலே போய்ப் பட்டே தீரணும்... என்ன ஒரு இதுவாப் பேசிட்டாள்... யார்... யாரைப் பார்த்து. கொதிக்குதுடா ரசம்..."

"பாட்டி கெடக்கறா. தாத்தா நீங்க விடுங்க..."

மனைவியின் பட்டுப் புடவை ஒன்றை எடுத்து அவள் இல்லாத நேரத்தில் அப்புசாமி வெகு தாராளமாக சீதாப்பாட்டிக்கு அன்பளிப்பு செய்து கொண்டிருந்த தருணத்தில் டாணென்று சீதாப்பாட்டி வந்துவிட்டாள்.

அடிபட்டுக் கொண்டு விட்டாளே, போனால் போகிறது பாவம், கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக் கொண்டு

தொலையட்டும் என்று அசிலென பண்ணினது எவ்வளவு பிசகு என்று சீதாப்பாட்டிக்குத் திக்கென்றது.

தன் அசட்டுக் கணவனிடம் தான் இல்லாதபோது நைச்சியமாகப் பேசி அவரை எப்படியோ கவர் பண்ணி மை குட்டாள்... ஒரு அருமையான பட்டுப் புடவையை அதுவும் அந்த காஞ்சீபுரம் ஸ்பெஷல் செக்ட்... அவள் விரும்பி ஆர்டர் கொடுத்து, இப்போதுதான் டூ மன்த்ஸ் பேக் வந்தது... அதை அடித்துக்கொண்டு போகத் திட்டமிட்டு விட்டாள் போலிருக்கிறது.

சீதாப்பாட்டிக்கு ஏர்கண்டிஷன் ரூமிலிருந்து வெளியே வந்தமாதிரி கலகலவென்று உடம்பு எரிந்தது. "ஐ டோண்ட் மைண்ட் த ஸாரி. பட்... மனைவியுடைய உடைமையை ஒரு ஹஸ்பெண்ட் இன்னொருத்திக்கு ஆசையாக எடுத்துத் தருகிறதென்றால்.

"மாமி!" என்று ஒரு பார்வை பார்த்தாள் சீதாப்பாட்டியை.

சீதாப்பாட்டி ஒரு கணம் நடுநடுங்கி விட்டாள்.

"நான் ஒண்ணும் கேட்கலையடிம்மா... மாமாவாகத் தான்... 'மாமி, இப்படிக் கந்தலைச் சுற்றிட்டு நிற்கிறீங்களே... என் கிழவிக்குப் புடவையான புடவை அம்பாரமா அலமாரி பூராத் தொங்கிட்டிருக்கு. உங்களுக்கு ஒண்ணு தர்றேனே'ன்னு எடுத்திட்டு வந்தார். நான் வேணாம் வேணாம்னுதான் சொல்லிட்டிருக்கேன்."

சீதாப்பாட்டி அப்புசாமியின் கையிலிருந்த புடவையை வெடுக்கென்று பறித்துக் கீழே போட்டாள். "நான் கொஞ்ச நேரம் வீட்டிலே இல்லையானால் வீட்டையே தூக்கித் தெருவிலே போகிறவங்களுக்குக் கொடுத்துடுவீங்க போலிருக்கே... என் பீரோவை நீங்க எப்படித் திறந்தீங்க? ஹௌ மெனி டைம்ஸ் நான்

சொல்லியிருக்கிறேன். . . நீங்க அதை டச் பண்ணக் கூடாதுன்னு. . . ஹௌ டேர் யூ கெட் த டீ?"

"ஹீ!" அப்புசாமி அலட்சியமாகச் சிரித்தார். "சாவியென்ன சாவி! இந்தக் கையிலே லெஃப்ட்லே ஒன்னு ரைட்லே ஒன்னு வைச்சா எந்த இரும்புப் பீரோவும் சடார்னு திறந்துக்கும். . . நான் சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு இருக்கிறவன். . . தெரிஞ்சுக்கோ. . ."

"ஓ! அந்தக் கள்ளச் சாவி வித்தையெல்லாம் தெரியுமா வெரிகுட். . . அதே வித்தையை வேறு எங்காவது காட்டி, உங்க அபிமானக் கிழவிக்குப் புதுப் பட்டுப் புடவையாகவே வேணும்னாலும் எடுத்துத் தாங்க. . . ஐ டோன்ட் கேர். . ."

சீதாப்பாட்டி குரல் தழுதழுக்க, "வேண்டாம் மாமா. . புடவை இல்லாட்டாப் போறது. . . எனக்காக இவள் வாயிலே பாவம் நீங்க விழுந்து எந்திருக்க வேண்டாம். நீங்க ஒரு வார்த்தை கரிசனமாச் சொன்னீங்களே. அதுவே போதும். . . புடவை வாங்கித் தரவேண்டாம். உங்களை இவள். . . வீட்டை விட்டே துரத்திவிடுவாள். . . என்றாள்.

அப்புசாமிக்கு ரோஷம் பொத்துக்கொண்டு வந்து விட்டது. "அதெல்லாம் அந்தக் காலம். . . உங்களுக்கு நான் புடவை வாங்கித் தர்ரேன். . . நீங்க அதைக் கட்டிட்டு இங்கே வர்றீங்க. இவள் கண்ணெதிரிலேயே நிற்கிறீங்க. . . எங்கே பார்க்கலாம், இவள் என்னை விரட்டி விடுவாளோன்னு. . ."

ரசகுண்டு இரண்டு புடவைகளை ஒருவழியாக செலக்ட் செய்தான்.

ஆயிரத்தைன்னூறு ரூபாய் பில். அப்புசாமி அலட்சியமாக ரூபாயை எடுத்து நீட்டிவிட்டு வெளியே வந்தார்.

வாசலில் டாக்ஸி காத்திருந்தது.

டிரைவர் டாக்ஸியருகே யாரிடமோ அரட்டை அடித்துக் கொண்டிருந்தவன், மரியாதையுடன் ஓடிவந்து கதவைத் திறந்துவிட்டான்.

மீட்டர் முப்பத்தி ஏழு ரூபாய் நாற்பது பைசா காட்டிக் கொண்டிருந்தது.

அப்புசாமி அலட்சியமாக ஏறிக்கொண்டார். அவரது ஜிப்பா ஜேபியிலிருந்து இரண்டு மூன்று ஐந்து ரூபாய் நோட்டுக்குள் கீழே விழுந்தன. அதை அவரோ, ரசகுண்டுவோ, டாக்ஸி டிரைவரோ கவனிக்கவில்லை.

இவ்வளவு நேரமும் டாக்ஸி டிரைவரிடம் பேசிக் கொண்டிருந்த குள்ளமான இரட்டை மண்டைப் பேர்வழியின் கண்ணில் அந்த ரூபாய் நோட்டுக்கள் பட்டன.

"ஆகா! அதிருஷ்டமே அதிர்ஷ்டம்! பயல் நோட்டுப் புத்தகம் நோட்டுப் புத்தகம் என்று அரித்துக் கொண்டிருந்தான். டயரியிலெல்லாம் எழுதிவெச்சுட்டான். ஒரு ஐந்து ரூபாய்க்கு நோட்டு வாங்கித் தள்ளலாம். . ."

ஆவலுடன் நோட்டை எடுத்துக் கண்ணில் ஒற்றிச் சட்டைப் பையில் வைத்துக்கொண்டார்.

சாயந்திரம் அவர் வீடு திரும்பியபோது கையில் நாலைந்து நோட்டுகள் பென்சில்கள் ரப்பர்கள் முகத்தில் மகிழ்ச்சி.

"நைனா? நோட்டு வாங்கிட்டு வந்தியா?"

"இந்தாடா கண்ணு பென்சில். . . ரப்பர். . ."

பையன் ஏ.பி.சி.டி எழுத உடனே தொடங்கி விட்டான்.

ஸி.ஐ.டி. அதிகாரியின் மனசு தன் அதிர்ஷ்டத்தைப் பற்றி நினைத்து மகிழ்ந்தது. அதே நேரத்தில் அவரது ஸி.ஐ.டி. மூளையின் ஒரு மூலையில் 'பீப்' 'பீப்' என்று ஒரு சிறிய சிவப்பு விளக்கு எரியத் தொடங்கியது.

அலட்சியமாக ரூபாய் நோட்டுக்கள்...

இந்திரா நகர் தெஃப்ட்... அண்ணா நகர் சேட்...

அந்த டாக்ஸி நம்பரை நோட் பண்ணாம போனோமே...

இல்லையில்லை. பண்ணினோம்... செவன் டு டு நாட்த்ரீயா... ஃபைவா... ஏதோ ஒண்ணு...



# 22

பொழுது பலபலவென்று விடிந்து கொண்டிருந்தது. இன்னும் சூரியன் உதிக்கவில்லை. ஆனால் பொன்னிறக் கிரணங்கள் கறுப்பு மேகத் திரள்களின் ஓரங்களைத் தங்கத்தால் இழைக்கத் தொடங்கி யிருந்தன. பெண் கறுப்பாயிருந்தாலும் ஒரு பணக்காரத் தந்தை வாரிக் கொட்டி அவளுக்குத் தங்கமாக இழைத் திருப்பதைப் போல் அந்த மேகக் கூட்டங்கள் அழகில்லா விட்டாலும் அந்தஸ்தாக விளங்கின.

சகுந்தலா வரதன் அந்த மேகக் கூட்டங்களையும் நீல வானத்தையும் பார்த்தவாறு மெதுவாக வாக் செய்து கொண்டிருந்தாள்.

வேலைக்காரி வாசல் தெளிக்கும் சத்தம் கேட்டது. சமையல்காரப் பாட்டி யாருடனோ நீட்டி முழக்கி விவாதித்துக் கொண்டிருந்தாள். 'காலங் காலையில் யாருடன் என்ன சத்தம் போட்டுக் கொண்டிருக்கிறாள்' என்று நினைத்த சகுந்தலா வரதன் மொட்டை மாடி கைப்பிடிச்சுவர் ஓரமாக வந்து தலையில் இடிப்பது போலிருந்த வாதா மரத்தின் கிளையிலிருந்த கம்பளிப்பூச்சி மேல் உரசிக் கொள்ளாதவாறு ஜாக்கிரதையாக ஒதுங்கிக் கீழே எட்டிப் பார்த்தாள். டிப்போ பால் கொண்டு வந்து தரும் சைக்கிள் பையனைக் கொப்பாட்டி மடக்கிக் கொண்டிருந்தாள்.

"நீ எஸ்டிரா பால் கேட்டால் குடுக்க வேண்டியது தானே? ஒரு விசேஷம்னாக் கூடக் கொண்டு வந்து தர வக்கில்லைன்னா என்னத்துக்குத் தாண்டாப்பா உன்கிட்டே இத்தனை நாள் பால் வாங்கியாறது?"

"இருந்தாத்தானேம்மா கொடுக்கலாம் நீங்க நேற்றே சொல்லியிருக்கணும் அது உங்க தப்பு."

"ஆமாண்டாப்பா நேத்து சொல்லலை, அதுக்குன்னு தோப்புக் கரணம் போடணும்கறியா காதைப் புடிச்சிட்டு? நாக்கை வசம்பு வெச்சுச் சுட?"

"நான் அப்படிச் சொல்லலீங்களே? பால் இல்லைனேன் அவ்வளவுதான்."

"அது எப்படி இல்லாமல் போகும்? அத்தனை பாட்டில் வெச்சிட்டிருக்கிறியே, என் கண்ணு என்ன அவிஞ்சிட்டுதுன்னு நினைக்கிறியா? காலையிலே என் சாபத்தை வாங்கிக்காதே . . போற வழியிலே டமால்னு கைக்கிளைப் போட்டுட்டு விழுந்து வெச்சு அத்தனை பாட்டிலும் உடைஞ்சு, கையை விட்டு நீ ஐம்பது நூறு கட்டறாப்பலே ஆயிடும். அப்புறம் பெரியம்மா சொன்னாங்களேன்னு வருத்தப்படுவே . . ."

பால்காரப் பையன் எரிச்சலுடன், "சரி, சரி. இந்தாங்கம்மா. . . காலங்காலையிலே உங்க வாயிலே வந்து விழுந்தேன் பாருங்க. . ." என்று ஒரு பாட்டில் பாலை எடுத்து வேண்டா வெறுப்பாகத் தந்து விட்டுப் புறப்பட்டான்.

சகுந்தலா வரதன் கீழே இறங்கியதும் தோப்பாட்டி ஒரு கையில் எண்ணெயும் இன்னொரு கையில் சியக்காய்ப் பொடியும் ஏந்தியவாறு எதிர்கொண்டு அழைத்தாள். "மாமித் தோட்டைக் கழற்றுங்கள். . இன்னணைக்கு நீங்க எண்ணெய் ஸ்நானம் பண்ணணும். . ."

"எண்ணெய்க் குளியலா... ஏன்" சகுந்தலா வரதனுக்கு ஆச்சரியமாய் இருந்தது. எனக்கு வழக்கமில்லை. உடம்புக்கு ஒத்துக்காது. நான் தலையிலேயே எண்ணெய் வைத்துக் கொண்டு வருஷம் இருபதாகிறது. ஷாம்பூ போட்டு அலசிக் கொள்வேன் எப்போதாவது!"

"ஷாம்பூவும் வேண்டாம் சாமந்திப்பூவும் வேண்டாம். நாகரீகம் நாகரீகம்னு என்னத்தையாவது தேய்க்கறது... நீங்க இன்னைக்குக் கட்டாயமா ஒரு கை எண்ணெய் வெச்சுட்டுத்தான் தீரணும். உங்களுக்கு இன்னைக்குப் பொறந்த நாள்... எழுபதாவது பொறந்த நாள்..."

"என்னமோ காலத்தைத் தள்ளியாச்சு... பிறந்த நாள், அது இது எல்லாம் நான் கொண்டாடறதில்லை."

"கொண்டாடணும் மாமி. ஆயுசுக்கு நல்லது. அமகலியோ சுமங்கலியோ எல்லோருக்கும் ஒரே வெய்யில்தான் அடிக்கிறது. அமங்கலின்னு குளு குளுன்னு வெய்யில் அடிச்சால் தேவலை... உங்ககிட்டே இப்போ சொல்றேனே. நான் எந்த வீட்டு சமையல் வேலைக்குப் போனாலும் வந்த பாவம் வாட்டும்னு வாரத்திலே ரெண்டு எண்ணெய்க் குளியல் பண்ணிடறது... மத்த நாளிலே பண்ணாட்டாலும் பரவாயில்லை. இன்னைக்கி நீங்க கட்டாயம் பண்ணியாகணும்... அப்புறம் முந்திரிப் பருப்புப் போட்டுப் பால் பாசயம் பண்ணப் போறேன். எனக்குச் சர்க்கரை ஆகாது அது இதுன்னு சொல்லி சாப்பிட மாட்டேன்னு சொல்லாதீங்க... பிறந்த நாளைக்குப் பால் பாயசம் கட்டாயம் பண்ணணும்... அந்தக் கட்டால போற பால் கடன்காரன் எக்ஸ்ட்ரா தரமாட்டேன்னான்... ஒரு அதட்டுப் போட்டு வாங்கிட்டேன். நீங்க வந்து ஸ்னானம் பண்ணுங்க... ஊம்... வெந்நீர் ரெடி."

எண்ணெய் தேய்த்துக் குளித்துத் தலையை ஆறப் போட்டபடி சகுந்தலா வரதன் ஊஞ்சலில் படுத்திருந்தாள்.

சாம்பிராணியை ஊஞ்சலுக்குக் கீழே தணலில் ஒரு தட்டில் போட்டு மேலே ஒரு கூடையைப் போட்டு மூடிப் புகை கிளப்பியிருந்தாள்.

ஊஞ்சல் லேசாக அசைந்து கொண்டிருந்தது.

சகுந்தலா வாதனுக்கு அடிக்கடி வரும் அந்த நகைகள் நினைப்பு இப்போது வந்துவிட்டது. ஊஞ்சலிலிருந்து மெதுவே எழுந்து நிலைக்கண்ணாடி முன் நின்றாள். எல்லா நகைகளையும் போட்டுப் பார்க்க வேண்டும் என்ற வழக்கமான ஆசை அவளுக்குத் தோன்றிவிட்டது.

இரும்புப் பீரோ வைத்திருந்த பெட்டக அறைக்குச் சென்று கதவைச் சாத்திக் கொண்டு பீரோவைத் திறந்தாள்... அப்புறம்தான் அவளுக்கு ஞாபகம் வந்தது. 'நான் ஒரு சரியான ஞாபக மறதிக்காரி. ஜ்வல் பாக்ஸிலிருந்த அத்தனை நகைகளையும்தான் வருமானவரி ரெய்டுக்குப் பயந்து மிஸ்டர் முதலியாரிடம் கொடுத்து வைத்திருக்கிறோமே...'

திரும்பினாள்.

முதலியார்தான் சமயத்தில் எவ்வளவு பெரிய உதவியைச் செய்தார்! டெலிபோனில் ரெய்டுக்கு வரப்போகிறார்கள் என்ற செய்தியைக் கேட்டு அவன் பதறின பதற்றம் முதலியாருக்கு உடனே போன் செய்து அவரை வரச் சொன்னது. அவர்வசம் நகைகளை ஒப்படைத்தது, அவர் பொறுப்பேற்றுக் கொண்டது, இவையனைத்தும் அவளுக்கு ஞாபகம் வந்தது.

இனிமேல் ரெய்டு பயம் இருக்காது. நகைகளை மறுபடி வரவழைத்து வீட்டிலேயே வைத்துக்கொண்டு விடலாம் என்று அவளுக்குத் தோன்றியது.

தன் நகைகளையெல்லாம் உடனே பார்க்கவேண்டும் போன்ற ஆவல் அவளுக்கு வினாடிக்கு வினாடி அதிக

மாகியது. அடேயப்பா. நகைகளைப் பார்த்து நீண்ட நாளாகிவிட்டது.

டெலிபோனைச் சுழற்றினாள்.

"மிஸ்டர் முதலியார் - . . ." டயல் செய்து அழைத்தாள்.

டெலிபோன் அடித்துக் கொண்டிருந்தது கொஞ்ச நேரம்.

சில வினாடிகள் கழித்து மறுபடி போன் செய்தாள் வேலைக்காரன் எடுத்தான். "ஹலவ்! நீங்க யாருங்க?. . . ஐயா குளிச்சிட்டிருக்காரு."

"சகுந்தலா வரதன் பேசினேன்னு சொல்லுப்பா. . ."

"சொல்றேங்க. இதோ. ஐயாவே வந்துட்டார் பேசுங்க"

"மிஸ்டர் முதலியார். . . வணக்கம் வணக்கம், உங்களைத் தொந்தரவு பண்ணிட்டேன். . ."

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. சௌகியம்தானே. ."

"நல்லாயிருக்கேன். . . அப்புறம். . அந்த ஐ. டி. சமாச்சாரம். ."

"எந்த ஐ டி சமாச்சாரம்?"

"அதுதான். . அந்த ஐ. டி. ஃபோன் மெஸேஜ் வந்ததே. ."

"ஃபோன் மெஸேஜ்? கொஞ்சம் விளக்கமா சொன்னிங்கன்னா பரவாயில்லை."

சகுந்தலா வரதன் மறுமுனையில் சிரித்தாள், "ஆர். ஏ. ஐ. டி."

"ஆர் எ. ஐ. டி?... புரியலீங்களே?"

"மிஸ்டர் முதலியார் நீங்க 'இதிலே' தானே இருக்கீங்க?.... ரெய்ட் சமாச்சாரம் சொல்றேன்..."

"ரெய்டா! என்ன ரெய்டு?"

"இன்கம்டாக்ஸ் ரெய்டு."

"ஓ...ஓ...ஓ!" முதலியார் கட கடவென்று சிரித்தார். இன்னைக்கி பேப்பரிலே யாரோ சினிமா நடிகர் வீட்டு ரெய்டைப்பற்றி போட்டிருந்ததே அதை சொல்றீங்களா?"

"இல்லை மிஸ்டர் முதலியார். என் வீட்டை ரெய்ட் பண்ணப்போறதா மெஸேஜ் வந்ததே லாஸ்ட் மன்த். நான் உங்களை அரக்கப் பறக்கக் கூப்பிட்டு... நீங்க மட்டும் சமயத்துக்கு வந்து உதவலைன்னா..."

"எனக்கு ஒரே கன்ஃப்யூஷனா இருக்கு... நான் என்ன உதவி செய்தேன் உங்களுக்கு? உங்க வீட்டை ரெய்ட் பண்ணப்போறதாக மெஸேஜ் வந்ததா? நீங்க எனக்குச் சொல்லவே இல்லையே?"

"மிஸ்டர் முதலியார் எனக்கு ஒரே குழப்பமாயிருக்கிறது. நீங்க கொஞ்சம் தெளிந்த பிறகு பேசினீங்கன்னா நல்லது..."

"ஸாரி நான் தெளிவாத்தம்மா இருக்கேன். நீங்க ஏன் பதட்டப்படறேங்க? ஏன்னவாவது மிஸ்டேக் நடந்துட்டுதா?"

"மிஸ்டர் முதலியார்! நான் போன் பண்ணினதும் நீங்க வந்து... நகைகளை யெல்லாம் நான் உங்ககிட்டே ஒப்படைக்க..."

"நகைகள்? நீங்க என்னம்மா சொல்றீங்க?"

"மிஸ்டர் முதலியார்... எனக்கு ஒரே படபடப்பா வருது. ஓ... ஓ... நீங்க ஜோக் அடிக்கிறீங்க நான் பயந்தே போயிட்டேன் மிஸ்டர் முதலியார்..." சகுந்தலா வாய்தன் சிரிக்கிறாள். "ஒன்னுமில்லை... எனக்கு இன்னைக்கு பர்த் டே... செவண்டியத் பர்த் டே... நீங்க நேரில் வந்து வாழ்த்தனும்... வர்ரப்பொ ஜ்வல் பாக்ஸைக் கொண்டு வந்துடறீங்களா... பீரோவைத் திறக்கறபோதெல்லாம் வெறிச்சினு மொட்டையா இருக்குது..."

"ஜ்வல் பாக்ஸா... என்ன ஜ்வல் பாக்ஸ்..."

"மிஸ்டர் முதலியார். என் நகைகளைச் சொல்றேன். உங்ககிட்டே ஒப்படைச்ச நகைகள்! நீங்க வந்து வாங்கிக் கொண்டீர்களே..."

"என்னம்மா இது. நானாவது... வந்தேனாவது... நகைகளை வாங்கிக் கொண்டேனாவது... ஏதோ நடந்திருக்கிறது..."

"மிஸ்டர் முதலியார், நீங்க வந்தீங்க... நான் தந்தேன். உங்களுக்கு இவ்வளவு ஞாபக மறதியா? ப்ளீஸ் பதட்டப் படாமல் உங்க பீரோவை திறந்து பாருங்க..."

"நானும் அதையே சொல்றேன். நீங்களும் பதட்டப் படாமல் பீரோவைத் திறந்து பாருங்க. உங்களுக்கும் வயசாச்சு... மறதி, குழப்பம் வரலாம்..."

"மிஸ்டர் முதலியார். எனக்கு உங்ககிட்டே எப்படி பேசறதுன்னே தெரியலை... என் நகைகள். பத்து லட்சத்துக்கும் அதிகம் பெறுமான நகைகள்..."

"பதட்டப்படாதீங்கம்மா... நீங்க பட படக்கிறதையும் ஒரு மாதிரியாய்ப் பேசறதையும் பார்த்தால் உங்களுக்கு என் மேலே ஏதோ சந்தேகம் ஏற்பட்டிருக்குன்னு தெரியுது. பரவாயில்லை... நம்ம சிநேகம் ரொம்ப முக்கியம். நான்

சிநேகிதத்துக்காக உயிரைக்கூடத் தரத் தயங்காதவன். உங்க வீட்டுக்காரர் எனக்கு அந்த நாளில் எவ்வளவு செய்திருக்கிறார்... நான் அதை மறக்கலை... பத்து லட்சம் என்கிறது ரொம்ப ரொம்பச் சின்னத் தொகை... நான் இன்னைக்கே ஒரு செக் உங்களுக்கு அனுப்புச்சுடுறேன்... நீங்க இந்தச் சின்ன விஷயத்துக்காக வொர்ரி பண்ணிக்காதீங்க" அப்புறம் வேறு ஒன்னும் விசேஷம் இல்லையே."

"மிஸ்டர் முதலியார்... நீங்க... நீங்க ஒன்னும் பணம் அனுப்ப வேண்டாம் ஆனால்... ஆனால் எனக்கு ஒரே புதிராயிருக்கிறது. நான் நிச்சயம் உங்ககிட்டேதான் நகைகளைக் கொடுத்தேன்... அப்புறம்... அன்னைக்கி உங்களை நீங்க செய்த ஒத்தாசைக்காகப் பாராட்டி அதுக்குத்தான் ராத்திரி விருந்துகூட..."

"விருந்தா... என்ன சொல்றீங்க...?"

"அன்றைக்கு ராத்திரி விருந்துக்கு வந்திருந்த போதுகூட உங்களுக்குத் தாங்க்ஸ் சொல்ல நினைத்தேன்..."

"மிஸஸ் சகுந்தலா வாதன்!... என்னவோ ஒரு பெரிய விபரீதமான தப்பு நடந்து விட்டிருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது. நீங்க பதட்டப்படாமல் அமைதியாக இருக்கணும்..."

"நீங்க என்ன சொல்றீங்க?"

"நீங்க சொல்றீங்களே... விருந்துன்னு என்னவோ அப்படி ஒரு விருந்துக்கு நான் வரவே இல்லை."

"மிஸ்டர் முதலியார்... எனக்குத் தலையைச் சுற்றுகிறது..."

"எனக்கும்தான். எனக்கொரு சின்ன சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது... என் மாதிரியே தோற்றமுள்ள

ஒருத்தன், என் பேரைச் சொல்லிக் கொண்டு ஸிடியில் சில மோசடிகள் செய்து வருவதாக எனக்கு அடிக்கடி செய்தி வந்து கொண்டிருக்கிறது. ஓட்டல் சோழாவில் கூட நான் போகாத போது, என் மாதிரி ஒரு நாள் போய் ஏதோ கலாட்டா செய்ததாகத் தெரிகிறது. விருந்துக்கு வந்தான்னு சொன்னீங்களே... அந்த ஆள் எப்படி இருந்தான்... என்ன டிரெஸ் பண்ணியிருந்தான்..."

"மிஸ்டர் முதலியார்... எனக்கு நெஞ்சை அடைக்கிறது. அசலாக, அச்சாக உங்க மாதிரியேதான் இருந்தான்..."

"என்ன டிரெஸ் போட்டிருந்தான்?"

"சுமாராத்தான் கவனிச்சேன்... உங்க மாதிரிதான் டிரெஸ் பண்ணி இருந்தான்..."

"என்ன சாப்பிட்டான்?"

"பால் பாயசம்... பொதினா வடை..."

"ஓ! என்னம்மா... நீங்க? உங்களுக்குக் கொஞ்சம்கூடச் சந்தேகம் வரலியா... நான் எப்பவாவது பாயசம் சாப்பிட்டு பார்த்திருக்கீங்களா... நான் கிரானிக் டயபடிக் பேஷண்ட் டாச்சே... நிச்சயம் இது அந்த ஆள்தான்..."

"மிஸ்டர் முதலியார்!"

"தைரியமாயிருங்க... ப்ளீஸ்... தைரியமாயிருங்க... அந்த ஆளை நான் ட்ரேஸ் செய்து..."

"இப்பவே போலீசுக்கு..."

"எதற்கும் கம்ப்ளெயிண்ட் கொடுத்து வைப்பது நல்லதுதான்..."

சகுந்தலா வரதன் மோவாயில் கை வைத்து இடிந்து உட்கார்ந்து விட்டான்.

மணவாள முதலியார் ஒரு புன்னகையுடன் டெலிபோனைக் கீழே வைத்தார்.





# 23

அதிர்ச்சி அடைந்தாலோ உணர்ச்சி வசப் பட்டாலோ சகுந்தலா வாதனுக்கு வழக்கத்தைக் காட்டிலும் அதிகமாக மூச்சிரைக்க ஆரம்பித்து விடும்.

டெலிபோனில் முதலியாருடன் பேசி முடித்த அவளுக்குப் படபடப்பு நொடிக்கு நொடி தாங்க முடியாததாகி விட்டது. பல லட்சம் பெறுமான அவள் நகைகள்... ஆசை ஆசையாக அவள் வாங்கிச் சேர்த்தவை - விதவையான பின்னும்கூட வாங்கிச் சேர்த்தவை - அந்த முத்து மாலை, அந்தக் கெம்பு வளையல்கள், பவளத்தைச் சுற்றி ப்ளூஜாகர் வைரம் இழைத்த தோடுகள்... சங்கிலிகளில் எத்தனைவித பாட்டர்ன் உண்டோ அத்தனை... திராட்சைக் கொடி.

"மிஸ்டர் முதலியார்... மிஸ்டர் முதலியார்..."

முதலியார் அங்கு இல்லை. ஆனாலும் இருப்பது போல சகுந்தலா வரதன் தட்டித் தடுமாறிப் பேசினாள். "என் தலையில் இடியைப் போட்டுட்டீங்களே, ஐயோ... இப்போநான் என்ன பண்ணுவேன்?"

"கூப்பிட்டீங்களா மாமி..." சமையல்காரக் கோப்பாட்டி உள்ளே வந்தாள்.

அவள் வந்ததோ கேட்டதோ சகுந்தலா வரதனின் காதிலும் கண்ணிலும் விழவில்லை...

"ஐயோ... பறிகொடுத்துட்டு இப்படி நிற்கிறேனே..." புலம்பிக்கொண்டிருந்தாள்.

சீதாப்பாட்டிக்கு எஜமானியைப் பார்க்க ஐயோ பாவம் என்றிருந்தது. சே நானும் இருக்கிறேனே கம்மனாட்டி. பூமிக்குப் பாரமாக? ஒரு நாளாவது இப்படி என் புருஷனை நினைத்துப் புலம்பியிருப்பேனா? எவ்வளவு பணக்காரியாக இருந்தாலும் இவளுக்குத் தன் காலஞ்சென்ற புருஷன்மீது எவ்வளவு அன்பு... பறி கொடுத்திட்டேனே பறி கொடுத்திட்டேனே என்று கதறிக் கதறி என்னமாக கண்ணீர் விடுகிறாள்.

சீதாப்பாட்டி கிராமத்தில் இழவு வீடுகளுக்குப் போனமாத்திரத்தில் கிளிசரின் இல்லாமல் அழக்கூடிய சில வரப்பிரசாதிகளில் ஒருத்தி. "ஐயோ மாமி! கரைஞ்சு போயிட்டாரே... உங்களை இப்படித் தவிக்க விட்டுட்டு... என் வயிற்றைப் பற்றிக்கிறதே... நீங்க அழுதா வருவாரா... புரண்டால் வருவாரா... அழாதீங்க மாமி அழாதீங்க..."

சகுந்தலா வரதனை மரியாதையுடன் அணைத்துத் தோளைப் பற்றிச் சமாதானப் படுத்தினாள். "மனுஷங்களாப் பொறந்தவா ஒருநாள் போக வேண்டியது தான்... பூவும் பொட்டுமா நம்மை அனுப்பிச்சிட்டு அவுங்க போயிருக்கலாம்... தலையெழுத்து மாமி தலையெழுத்து..."

பல்லைக் கடித்துக்கொண்டு சமையல்காரியைப் பார்த்தாள் சகுந்தலா வரதன். "நீங்க போய் உங்க வேலையைக் கவனியுங்க... என் துக்கம் என்னோடு..." என்று சொன்னவளுக்குச் சட்டென்று ஏதோ தோன்றியது.

"சமையல்கார மாமி! உங்களை ஒன்று கேட்கிறேன்... நல்லா நினைவுபடுத்திச் சொல்லுங்க..."

"சொல்றேண்டியம்மா. எதைக் கேட்டாலும் சொல்றேன்."

"அன்றைக்கு ஒரு நாள் ராத்திரி விருந்து பண்ணினீங்களே... மிஸ்டர் மணவாள முதலியார்னு என் சிநேகிதர் வந்து சாப்பிட்டாரே..."

"முதலியாரா?"

"அதான் மாமி, பாண்ட், கோட். அன்னைக்கிக்கூட நீங்க பால்பாயசம் பண்ணி பொரிஞா வடை பண்ணலியா?"

"ஆமாம். ஆமாம். அன்னைக்கு ஒரு முதலியாரும் வரலியே..."

"நாசமாய்ப் போச்சு?" பல்லை நறநறத்தான் சகுந்தலா வரதன். "இங்கே உட்கார்ந்து சாப்பிட்டாரே... நீங்க பரிமாறினீங்க... நான்கூட மூச்சு இழுக்கறதுன்னு வெறுமே நின்னு பார்த்துட்டிருந்தேன்."

"ஆமாம். ஆமாம். ஆனால் அவர் முதலியார் இல்லையே. எங்க அப்புசாமி மாமா அல்லவா? நல்லா நாக்கைச் தொட்டை விட்டுட்டுப் பாயசம் வாங்கி வாங்கிக் குடித்தார். இப்பத்தான் ஞாபகம் வரது. நான்கூடக் கேட்டேன் அவர்கிட்டே. உங்களோட யாரும் வந்திருக்காங்களான்னு. யாரோ முதலியார்னா வரப் போறதாக எஜமானி அம்மா சொல்லிட்டிருந்தார்னு கேட்டேன். அவர் சொன்னார் - அவருக்குச் சௌகரியப் படலே நான் அவர் ஃபிரண்டு வந்திருக்கேன்னு சொன்னார்... தங்கமான மனுஷன்..."

மூச்சு இறைத்தது சகுந்தலா வரதனுக்கு... முதலியார் சொன்னாற்போல் நிச்சயம் ஏதோ பெரிய மோசடி நடந்து விட்டிருக்கிறது.

"சமையல்கார மாமி, அன்னைக்கி வந்து விருந்து சாப்பிட்டாரே அவரை உங்களுக்கு ஏற்கனவே தெரியுமா? அவர் பெயர் என்னவென்று சொன்னீங்க?"

"பெயரா? போங்க மாமி. பெரியவங்க பேரை யெல்லாம் சும்மாச் சும்மாச் சொல்லக் கூடாது."

"இப்போ சொல்றீங்களா இல்லையா?"

"ஏன் வள்ளுனு விழறீங்க. அவர் பேர் அப்புசாமி. தங்கமான குணம்..."

சகுந்தலா வரதன் பல்லைக் கடித்துக் கொண்டாள். "அந்த ஆசாமி எங்கே இருக்கிறவர்? தெரியுமோ உங்களுக்கு?"

"தெரியாதா என்ன? நீங்க கூட ஒரு நாள் பாட்டிகள் முன்னேற்றக் கழகம்னு ஒரு கழகத்துக்குப் போய் பாதியிலே திரும்பி வந்துட்டீங்களே - திடீர்னு யாரோ பந்தை அடிச்சு அது உங்க நெஞ்சிலே வந்து மோதி பிராணனே போகத் தெரிஞ்சதுன்னு வந்துட்டீங்களே... நான்கூடக் கோதுமைத் தவிட்டை மெல்லிசாச் சலிச்சு ஒத்தடம் கொடுத்தேனே ராத்திரி பூரா பக்கத்திலே உட்கார்ந்திட்டு... அந்தக் கழகத்துக்கு ஒரு அகங்காரம் பிடிச்ச கிழவி தலைவியா யிருக்கிறாள்... சீதான்னு பேரு... அவள் புருஷன் இந்த வாயில்லாப் பூச்சி... ரொம்ப ரொம்ப நல்லவர்... பெண்டாட்டி சல்லிக்காசு கண்ணில்காட்ட மாட்டாள். திடீர்னு சீமானாட்டம் கோட்டும் சூட்டும் போட்டுட்டு வந்ததும் எனக்கு ஆச்சரியமான ஆச்சிரியம்... எங்க ருக்குவுக்குக் கூட ஒரு சங்கிலி கேட்டேன்... தாராளமாசுத் தர்ரேன்னாரே..."

சமையல்காரியை அனுப்பி விட்டு சகுந்தலா வரதன் டெலிபோன் டைரக்டரியை எடுத்தாள்.

'வந்திருப்பது சாதாரணக்கேஸல்ல. பெரிய அதிகாரியே நேரில் ஜீப்பில் வந்து விசாரிக்கும்படி உத்தரவிட்டு விட்டார். அசமஞ்சம் மாதிரி இருக்கக் கூடாது. சுறுசுறுப்பைக் காட்டி சீக்கிரம் கேஸைப் பிடித்தால் பதவி உயர்வுக்கு ஒரு சிபாரிசு கூடக் கிடைக்கலாம்.'

சப் இன்ஸ்பெக்டர் பெட்ரோல் மீட்டரைப் பார்க்காமல் வேறு சிந்தனையில் மூழ்கியிருந்ததால் பெட்ரோல் பங்க் பையனிடம் கேட்டார்.

"எத்தனை லிட்டர் போட்டே?"

"பதினைந்து லிட்டர் சார். "

சொன்னது பெட்ரோல் பங்க் பையனல்ல. குள்ளமான இரட்டை மண்டை டப்பாக் கட்டிப் பேர் வழி.

"அட? யோவ்! ஆதி? நீரா? என்னய்யா பண்ணிட்டி ருக்கிறீர் பங்கில்?"

"பெட்ரோல் தீர்ந்து போச்சுங்க. . ." ஆதி இளித்தார்.

"பெட்ரோல்! வண்டியிலா வந்தே! ஏது வண்டி? எங்கே ஓ சி அடித்தீர்?"

"இல்லை சார் . . வண்டிப் பெட்ரோல் இல்லை. பாக்கெட் பெட்ரோல். ஹிஹி? பஸ் சார்ஜுக்கு துட்டு இல்லை. நாஷ்டா பண்ணித் தொலைச்சிட்டு நடந்து வந்து கிட்டிருந்தேன். . ஐயா வோட பைக்கைப் பார்த்ததும் நின்னுட்டேன் ஹிஹி?"

ஆதியிடம் கொஞ்சம் சில்லறை இல்லாமலில்லை. எஸ்.ஐ. வண்டியைப் பார்த்ததும் அந்தச் சில்லறை அடுத்த வேளை நாஷ்டாவுக்கோ அல்லது ஒரு பாக்கெட் சிகரெட்டுக்கோ உதவக் கூடுமே என்று அவருக்குத் தோன்றிவிட்டது.

"சரி.. சரி... பின்னாலே தொற்றிக்கப் போறியா? உட்காருய்யா... உன்னைப் பார்த்தால் யாரும் ஸிஐடின்னு சொல்ல மாட்டாங்க... கொல்லுத்து மேஸ்திரின்னுதான் சொல்வாங்க... நீயும் உன் டப்பாக்கட்டு அழுக்கு வேட்டியும் சரி... சரி ஏறி உட்காரு."

"எக்ஸ்க்யூஸ் சார்..." ஏறும் போது எஸ். ஐ மீது தான்கால் பட்டு விட்டதற்கு மன்னிப்புக் கோரிக் கொண்டு, அழுக்கு ஸிஐடி ஆதி பின் ஸீட்டில் பக்கத்துக்கு ஒரு கால் போட்டு சம்பிரமமாக உட்கார்ந்தார். வண்டி புறப்பட்டது. "உன்னை எங்கேய்யா பிடிச்சுத் தள்ள வேணும்?" என்றார் தாண்டவன்.

ஆதியின் காதில் மோட்டார் சைக்கில் சத்தத்தில் அது விழவில்லை.

"அண்ணாநகர் கேஸ் விஷயம் கவனிச்சுட்டுத்தான் சார் இருக்கேன்."

"காது ஒண்ணுதான் கொஞ்சம் உருப்பிடியாயிருந்தது. அதுவும் போய்விட்டது போலிருக்கு."

"அதெல்லாம் ஒண்ணும் மாட்டேன் சார் ஆதிகிட்டே ஒரு கேஸ் வந்ததுன்னா பாதியிலே விடமாட்டான். கருவாடு காய்றமாதிரி ரெண்டு நாளாக் காஞ்சதுலே ஒரு க்ளூ கெடச்சிருக்குது சார்...."

"காது காதுன்னா வேது வேதுன்னு. நீ எங்கேய்யா எறங்கோணும்?"

"ஆமாங்க நீங்கவேற கேட்டுட்டீங்களா? வெக்ஸாப் போய் அலையோ அலையோன்னு அலைஞ்சதுக்கு ஒரு துப்பு கெடச்சுட்டுதுங்க."

"உன் துப்பும் நீயும் நாசமாய்ப் போகட்டும். உன்னை எங்கே உருட்டி தள்ளட்டும்... சொல்லு."

"ஜவுளிக்கடை வாசல்லேயே நின்னிட்டிருக்கேன். ஒரு பெரிய டாக்ஸி பாருங்க... ஒன் அவருக்கும் மேலே வெயிட்டிங்... ஒரு பார்ட்டி உள்ளிருந்து வருது... செயல லாட்டம் இருக்குது கூடக் குண்டா கட்டை குட்டையா - என்னியவிடக் குட்டை - ஒரு ஆளு ஜவுளிக்கடையி லிருந்து வந்து எறிக்கிறாங்க பாருங்க -

அந்த ஆள் ஜேபிலிருந்து நோட்டுங்க கீழே விழுது - சினிமா நோட்டீஸ் மாதிரி கபால்னு நோட் பண்ணினேன்... ஜவுளிக்கடைக்குப் போய் பில்லை செக் பண்ணினேன் நைனா... ஆள் பேர் அப்புசாமி. அவன் பேரிலேதான் பில்லு. பணம் இப்படித் தண்ணியா செலவு பண்ணனும்னா..."

"என்னவோ பேர் சொன்னியே கடைசியா... சரியாக் காதிலே விழலை..."

"பேரா?"

"ஆமாய்யா... ஜவுளிக்கடை அது இதுன்னு சொல்லிட்டு ஒரு பேர் சொன்னியே... என்னது"

"அப்புசாமி"

சப் இன்ஸ்பெக்டரின் முகத்தில் பிரகாசம்!

"பணத்தைத் தாராளமாய்ச் செலவு பண்ணினதை நீ உன் கண்ணாலே பார்த்தியா?"

"ரெண்டு கண்ணாலும் பார்த்தேன். ஒரு புடவை ஏறக்குறைய ஆயிரம் ரூபாய் சார்... ரெண்டு, மூணு புடவையிருக்கும்... கீழே போகிற போக்கிலே ஜேபிலிருந்து நோட்டு விழுது. டாக்ஸி மணிக்கணக்காக வெயிட்டிங் போட்டுட்டு உள்ளாற போறாங்க..."

"ஆல்ரைட்!"

"சார்... இன்னும் ஒரு சின்ன க்ளு சொல்லலாமுங்களா?"

"சொல்லுய்யா. . . ."

"அந்த பழைய கேடி முக்கா பீனோடு இல்லீங்க? அவன்கிட்டக் கூடக் கொஞ்சம் நட்டு நடமாட்டம் தெரியுது. நம்மவூட்டுக்கு பால் சப்ளை அவன்தான். மேோக்கா ஒரு செயினு போட்டுக்கிட்டு வர்ரான் கொஞ்ச நாளா. அவனையும் கொஞ்சம் டச் பண்ணினால் ஏதாச்சும் துருப்புச்சீட்டு கிடைக்கும். நாலு இடத்திலே கல்லை விட்டெறிஞ்சா ஏதாவது ஒண்ணு படுமில்லீங்களா? எப்படியாவது அண்ணாநகர் கேஸ்லே நான் க்ளூ கொடுத்து ஐயா அந்தக் கேஸைப் பிடிச்சதாக இருக்கணும். . . ."

"சீதே!" அப்புசாமி கூவினார். "இங்கே வந்து பாரேன். யார் வந்திருக்கிறது என்று. . . ."

சீதாப்பாட்டி நெருங்கிவரும் பா.மு.க. பிரசிடெண்ட் தேர்தலுக்காகத் தனக்கு சாதனைப் பட்டியலை நாசூக்காக எப்படிக் குறிப்பிடுவது என்பது பற்றிக் குறிப்பெடுத்துக் கொண்டிருந்தாள். டமாரம் மாதிரியும் போய்விடக் கூடாது. அதே சமயம் அவள் உருப்படியாகக் கழகத்துக்கு செய்த காரியங்களையும் குறிப்பிட்டுவிட வேண்டும். பொன்னம்மா டேவிட் ஹார்ட் நட்டு டு க்ராஷ் அவள் இந்தத் தடவை ஃபுல் ஸ்விங்கில் வேலை செய்வதாகக் காரியதரிசி அகல்யா சந்தானத்தின் மூலம் அறிந்தாள்.

அகல்யா சந்தானமேகூட எங்கே டிஃபெக்ட் செய்து விடுவாளோ என்ற சந்தேகமும் சீதாப்பாட்டிக்கு நடு நடுவே எழுந்து கொண்டிருந்தது. அவளுக்கு ப்ளீஸிங்காக இருக்கும் என்று இரண்டு நாள் முன்னேகூட அவள் வீட்டுக்குப் போய் வந்தாள் - ஜஸ்ட் இந்தப் பக்கம் வந்தேன் என்று.

"சீதே!" அப்புசாமி மீண்டும் கூவினார். "வந்து பாரேன். . . ."

சீதாப்பாட்டி பல்லைக் கடித்துக்கொண்டாள். "யார் வந்திருக்கிறது?"

"வந்து பாரேன். . ."

"பெரிய நியூஸென்ஸாகப் போச்சு உங்களுடன்."

சீதாப்பாட்டி சுழல் நாற்காலியிலிருந்தபடியே லேசாக சுழன்று திரும்பினாள். புத்தம் புதிய பட்டுப் புடவை ஜாஜ்வல்யமாக ஜொலிக்கச் சீதாப்பாட்டி!

"மாமாவுக்கும் உங்களுக்கும் நமஸ்காரம் பண்ணிட்டுப் போகலாம்னு வந்தேன். . . என்னவோ கிருஷ்ணபரமாத் மாவுக்குக் குசேலர் ஒரு பிடி அவல் கொடுத்ததற்கு அவர் சொர்ணமா அள்ளிக் கொட்டினாரே அதுமாதிரி நான் எந்த ஜென்மத்திலோ ஒரு சப்பாத்தியும் கொத்சுவும் பண்ணி உப்புக் காரமா மாமாவுக்குத் தந்ததற்கு ஒரு பட்டுப் புடவையே வாங்கித் தந்துவிட்டார். . . தீமா இருக்கு. . . ஆயிரம் ரூபாயாம். அப்புறம் என்னவோ டாக்ஸி வேறு போட்டுட்டாங்களாம்."

சீதாப்பாட்டியின் கண்கள் செக்கச் சிவந்தன. அட்ரோஷியஸ் என்று அவள் உள்ளம் அலறியது. தௌஸண்ட் ருபீஸுக்குப் புடவை. . . வைர ஊசி ஜரிகை. . . இந்த நாஸ்டி ஓல்ட் விட்ச் லைக் வுமனுக்கு. . .



# 24

"ஒன் மினிட்... இப்படி வர்ரீங்களா?" சீதாப்பாட்டி குமுறலை அடக்கிக்கொண்டு அப்புசாமியை அழைத்தாள்.

"அவரை ஏன் கூப்பிடறே?" என்று பரிந்தாள் கீதாப் பாட்டி... ஏன் இந்தக் கிழவிக்கு இவ்வளவு ரூபா போட்டு இத்தனை ஒசத்தியா ஒரு பட்டுப் புடவை வாங்கிக் கொடுத்தீங்கன்னு மிரட்டறதுக்காகக் கூப்பிடறியாக்கும்?"

"ஷட் அப்!" சீதாப்பாட்டி வெடித்தாள். "இட் இஸ் நன் ஆஃப் யுவர் பிஸினஸ்!"

"உன் திமிரை எங்க அப்புசாமி மாமா அடக்கத்தான் போகிறார்... அதற்குத்தான் நாள்கூட வைத்துவிட்டாரே?"

சீதாப்பாட்டி அப்புசாமியைப் பார்த்தாள். அப்புசாமி கூட்டுக் கட்சிகள் தயவு இல்லாமல் வெற்றி பெற்ற அபேட்சகர் மாதிரி அலட்சியமாகப் புன்னகைத்தபடி, "ஓ! உனக்கு நான் தேதியைச் சொல்லலையோ? எல்லாக் கிழவிங்களுக்கும் அழைப்பிதழ் அச்சுப் போட்டுக் கொண்டிருக்கிறேன். வெறும் காகிதத்திலே அச்சடிக்கலாமா... ரூபாய் நோட்டிலே அச்சடிக்கலாமான்னு யோசிக்கிறேன்... ஏ கிழவிங்களே... உங்க தலைவி மகா மகா சீதேக் கிழவி என்கிட்டே வாலாட்டி, ஒரு மகா மகா பந்தயத்திலே மூக்கறு பட்டு என்னுடைய மகா மகா காலிலே விழப்போகிற மகாமகா காட்சியைக் கண்டு ஆனந்தியுங்கள்... ஏன் சீதே... வாசகம் இப்படி இருக்கலாமா... விழாவுக்குத் தலைமை யார்

தெரியுமோ ... நம்ம சீதாமாமி! அதுக்குத்தான் பிரமாதமான பட்டுப் புடவையாக வாங்கித் தந்திருக்கிறேன் . . ."

சிதாப்பாட்டி வேறு சமயமாயிருந்தால் அப்புசாமியின் இத்தகைய உதார்களைப் பொருட்படுத்தியிருக்கமாட்டாள். ஆனால் பா. மு. க. வின் தேர்தல் நெருங்கிவரும் சமயத்தில் பித்துக்குளித்தனமாக கணவர் ஏதாவது பண்ணிவைத்து அது தன் இமேஜையும் எலெக்‌ஷனையும் பாதித்துவிட்டால், "காலிலே விழுகிற வைபவம்" என்று பலத்த ப்ராபகண்டா பண்ணினாலும் பண்ணுவார் - அசட்டுக் கணவர் விசிறிவிட இந்தக் கிழவி வேறு.

அப்புசாமி அதிகாரமாக, "சீதே!" என்றார், "இப்பக் கூட உனக்கு ஒரு சான்ஸ் தர்றேன். இன்று போய் நாளைவான்னு அந்தக் கும்பகர்ணனைப் பார்த்து ராமரோ லட்சுமணரோ அனுமாரோ சொன்னாரே அந்த மாதிரி சொல்றேன் . . . சம்பாதிக்கத் துப்பற்றவன்னு உங்களை நான் சொன்னது தப்பு தப்புன்னு கன்னத்திலே இந்தச் சீதா மாமி சாட்சியா என் எதிரில் போட்டுக் கொண்டுவிடு . . . நான் விட்டுடறேன் சவாலை. . . "

தனியாக இருந்திருந்தால் சிதாப்பாட்டி ஒப்புக் கொண்டிருப்பாளோ என்னவோ, சீதாக் கிழவியின் எதிரில் அப்படிச் செய்யவேண்டும் என்று அப்புசாமி நிபந்தனையிட்டது அவளுடைய தன்மானத்துக்கு ஒப்புக் கொள்கிற மாதிரி இல்லை.

சிதாப்பாட்டிக்கு அங்கு ஒரு நிமிஷம் நிற்கக்கூட வெறுப்பாக இருந்தது. ஆத்திரத்தைச் சாமர்த்தியமாக அடக்கிக் கொண்டாள். "கொஞ்சம் கழக வேலை இருக்கு, அட்டெண்ட் பண்ணிட்டு வருகிறேன். . ." என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டுவிட்டாள்.

அப்புசாமி "உய்!" என்று விசில் அடித்தார். "சீதே! நீய்" என்றார்.

சீதாப்பாட்டி அந்தண்டை போனதும் சீதாப்பாட்டி விசிறி விட்டாள். "மாமா, நீங்களும் பாவம் எத்தனை தரம் குட்டுப்பட்டு குட்டுப்பட்டு, உங்க மூன் மண்டையே வழுக்கையாகிவிட்டது. இந்தத் தடவை நீங்க கட்டாயம் ஜெயித்து, நீங்களும் ஒரு ஆண் பிள்ளைங்கறதை எல்லோர் எதிரிலும் நிரூபிக்கணும்கறதுதான் எனக்கு ஆசை. பொம்மனாட்டி என்கிறவள் புருஷன் கீறிய கோட்டைத் தாண்டப் படாது. உங்க சீதா என்னடான்னா, உங்களுக்கல்லவா கோட்டுக்கு மேலே கோடாகக் கீறு கீறுன்னு கீறுகிறாள்!"

அப்புசாமி அவள் வைத்த ஐஸால் குளிர்ந்து விட்டார். "ஆகா, என்னமாகச் சொல்றீங்க... சீதேக்கு இதிலே ஆயிரத்திலே ஒரு பங்கு புரியமாட்டேன் என்கிறது..."

சீதாப்பாட்டி நாணத்துடன் "நான் உன்னைத்தான் சொன்னேன் உங்களை மாதிரி சாமர்த்தியம் அவளுக்கு உண்டா என்ன? உங்களை அடக்கி அடக்கி வைத்து விட்டுத் தனக்கு வெளிச்சம் போட்டுப் பிரகாசம் காட்டிக்கிறாள்... சம்பாதிச்சுக் காட்டறேன்னீங்க. சம்பாதிச்சீங்களா இல்லையா? எனக்குப் புடவை வாங்கிக் கொடுத்ததற்காகவோ ருக்குமணிக்கு ஒரு ரெட்டை வடம் சங்கிலிதர்ரேன்னு சொன்னீங்களே, அதை எப்படியும் தருவீங்க என்கிற ஆசைப்பட்டோ இப்படி உங்களைப் புகழலை..."

"அடே!" என்றார் அப்புசாமி. "ருக்குமணி விஷயம் அடியோடு மறந்துட்டுது... ஒரு சங்கிலி தர்றேனேனே. இதோ இப்பவே தந்துடறேன்..."

பீரோ சாவியை எடுத்தார். திறந்தார். சீதாப் பாட்டியின் இரட்டை வடச் சங்கிலி ஒன்றை எடுத்தார்.

"இந்தாங்க... பிடியுங்க."

"அச்சச்சோ! சிதேயுடையதா... வந்து கத்தும் போறது"

"ஹ ஹ! அவள் ஒரு தாசி மாத்திரம் எனக்கு. நீங்க பிடியுங்க சொல்கிறேன்."

ஜோப்பாட்டி இனிப்புடன் சங்கிலியை இரு கை நீட்டி வாங்கிக் கொண்டான். அப்போதுதான் அந்த வீட்டுக் காம்பவுண்டுக்குள் நுழைந்த ஒரு குட்டையான இரட்டை மண்டை டப்பாக்கட்டு உருவம் ஜன்னல் வழியே அந்தக் காட்சியையும் கவனித்துக் கொண்டிருந்தது. ஸி. ஐ. டி. ஆதி.

ஜூடோவுக்கு ஒரே கலக்கமாயிருந்தது. முகத்தை உர்ரென்று வைத்துக் கொண்டிருந்தது.

எஜமானர் முதல் நாள் இரவு கதவையெல்லாம் சாத்திக்கொண்டு யாருடனோ உரக்க டெலிபோனில் கத்திப் பேசிக் கொண்டிருந்தது அதன் நினைவுக்கு வந்தது.

"அனேகமாக முடிந்துவிட்டது. . . ஸெண்ட் பர்சண்ட் ஸக்ஸஸ். . . என் பிளான் எப்பவாவது தவறியிருக்கிறதா. . ஓகே. . ஓகே. . நத்திங். . . ஒரு டிரபிளும் இல்லை. . . ஆனால் அவனைச் சிக்கவைத்த பிறகு புறப்படறதுதான் பரவாயில்லைன்னு டிலே பண்ணிட்டிருக்கிறேன். நான் நினைத்த படியே நடந்திட்டிருக்கிறது. அனேகமாக பதினேழாம் தேதி டேக் ஆஃப். மீதியெல்லாம் நேரிலே பேசுவோம்."

ஜூடோ காதருகே ஏற்பட்ட ஓர் அரிப்பை வறக்வறக் கென்று சொறிந்து கொண்டு யோசித்துப் பார்த்து. "எஜமானரான மிஸ்டர் முதலியார் டேக் ஆஃப் அது இது என்கிறாரே. . . டேக் ஆஃப் என்றால் விமானத்தில் புறப்படுகிறதாக அல்லவா அர்த்தம்? விமானத்தில் என்னை அனுமதிப்பார்களா? எஜமான் தன்னுடன் கூட்டிப் போவாரா. . . அல்லது கப்பிலில் கிப்பலில் அப்புறம்

வரும்படி ஏற்பாடு பண்ணியிருக்கிறாரா. அப்படியானால் கப்பலில் தன்னைக் கூட்டிப்போக இந்த வேலைக்கார முனியப்பன்தான் கூட வருவானா? இவன் ஒரு மடையனாச்சே. . . பொறுப்பாக என்னைக் கூட்டிப் போவானா!"

ஜூடோவின் சிந்தனையை எஜமானரின் குரல் கலைத்தது. வேலைக்கார முனியப்பனை அழைத்து ஏதோ கட்டளையிட்டுக் கொண்டிருந்தார்.

பிறகு ஹாலுக்கு வந்தார். "இந்தா முனியப்பா. . . நம்ம ஜூடோவை அந்த வெடரினரி டாக்டர் பிரியமாக கேட்டுட்டிருந்தாரே. . . அவருக்கே கொடுத்திடறதுன்னு தீர்மானித்துட்டேன். . . நாளைக்கு நீ அவர் வீட்டிலே கொண்டுபோய் விட்டுடு. . ."

"சரிங்க எஜமான். ஆனால் உங்களை விட்டு அது பிரிஞ்சு இருக்காதுங்களே. . . ரொம்ப அவதிப்படும்."

"பாவம்தான். . . ஆனால் அந்த வெடரினரி டாக்டர் ரொம்ப ஆசைப்படறார். நல்லா வளர்ப்பார். ஆமாம் நீ ஊருக்குப் போகணும்னியே. பொண்ணு கல்யாண விஷயமாய்."

"ஆமாங்க எஜமான். ஆனால் பணம்தான் புரட்ட முடியாமல். . ."

"எல்லாம் காலாகாலத்திலே பண்ணிடணுமப்பா. . . பொண்ணுக்கு வயசென்ன?"

"இருபதுங்க."

"அடேயம்மா. இருபது! ரொம்ப மெத்தனமா நீ இருந்திட்டே. இந்தா. . ."

முனியப்பன் கண்கள் வியப்பால்விரிந்தன.

அவர் தந்த இருநூறு ரூபாயை வாங்கிக்கொண்டு காலில் விழுந்து கும்பிட்டான். "எஜமானுக்கு என் தேகத்தைச் செருப்பாகத் தைத்துப் போடணுங்க."

"நாளைக்கே ஊருக்குப் போய்க் கல்யாண வேலையைப் பார்."

முன்னால் சைடு தாராமல் சென்ற காரில் தெரிந்த கூடைக் கொண்டை சிதாப்பாட்டியின் கவனத்தைக் கவர்ந்தது.

பொன்னம்மா டேவிட் மாதிரியல்லவா இருக்கிறது? அவளேதான். கார் நம்பர் ஞாபகம் இல்லாவிட்டாலும் சந்தேகமில்லை. வண்டியை ஓடித்துத் திருப்பியபோது பொன்னம்மாவின் அந்த ஊட்டி உருளைக்கிழங்கு முகம் பக்கவாட்டில் சிதாப்பாட்டிக்கு நன்கு தெரிந்தது.

"யார் யாரைக் கான்வஸ் செய்யப் புறப்பட்டிருக்கிறாளோ?" என்று எண்ணிக்கொண்டே காரின் பின்னாடியே சிறிது தூரம் சென்றவளுக்குக் கார் மணவாள முதலியாரின் பங்களாவுக்குள் நுழைந்ததும் ஆச்சரியமாயிருந்தது.

"ஓ மை குட்னஸ்!"

சிதாப்பாட்டி பல்லைக் கடித்துக்கொண்டாள். மிஸஸ் பொன்னம்மா. உன்னுடைய சாமர்த்தியத்தை மெச்சுகிறேன். மிஸ்டர் மணவாள முதலியார் என்பவரிடம் நான் டொனேஷன் கேட்டு வாங்கமுடியாமல் போய்விட்டது. அதை நீ வாங்கிக் காட்டி, என்னைவிட நீ சாமர்த்தியசாலி என்பதை உன் அச்சீவ்மெண்ட்ஸில் ஒன்றாக மெம்பர்களிடம் டமாரம் அடித்துக்கொள்ளப் போகிறாயாக்கும்?"

மணவாள முதலியாரின் பங்களாவிலிருந்து சிறிது நேரத்தில் பொன்னம்மாவின் கார் வெளியே புறப்பட்டுச்

சென்றது. அந்த ஜோரைப் பார்த்தால் அட்லீஸ்ட் ஒரு டென் தௌஸண்ட் வசூலித்திருப்பான் என்று சீதாப்பாட்டிக்குத் தோன்றியது.

அந்தத் தொகை எவ்வளவு என்று தெரிந்துகொள்ளா விட்டால் உடனே மண்டை வெடித்துவிடும் போலிருந்தது சீதாப்பாட்டிக்கு. பொன்னம்மா வசூலித்த அந்தத் தொகையைப் போல் இரட்டை மடங்காகத் தான் கழகத்துக்கு வசூலித்துக் காட்ட வேண்டும்.

தன்னிடம் தாக்குறைவாக நடந்துகொண்ட முதலியாரை அவள் மீண்டும் சந்திக்க விரும்பவில்லை. ஆனால் டொனேஷன் தொகை எவ்வளவு என்பதைத் தெரிந்துக்கொள்ள வேண்டியது தனது எலெக்ஷன் பிரசாரத்துக்கு முக்கிய பாயிண்ட்டாக உதவக்கூடியது என்பது மாத்திரம் அவளுக்குப் புரிந்தது.

மணவாள முதலியார் பங்களாவில் மானேஜர் என்றோ, காரியதரிசி என்றோ ஒரு பேர்வழி இருப் பாரல்லவா? அவர் வாயை நைசாகப் பிடுங்கினால் தீர்ந்தது என்று தீர்மானித்தாள்.

முதலியார் புறப்பட்டு வெளியே செல்லும்வரை பொறுமையாகக் காரைத் தெரு முனையிலே ஒதுக்குப் புறமாக நிறுத்தி அதற்குள்ளேயே உட்கார்ந்து கொண்டிருந்தாள். முதலியாரின் கார் வெளியே புறப்பட்டதும் சீதாப்பாட்டியின் கார் உள்ளே பிரவேசித்தது.

கடமை உணர்ச்சியுடன் வேலைக்கார முனியப்பன் விரைந்து வந்தான். "ஐயா இப்போதுதான் கிளப்புக்குப் புறப்பட்டுப் போகிறார்," என்றான்.

சீதாப்பாட்டி காரிலிருந்து இறங்கினாள். "தாங்க்ஸ் ஃபர் த இன்ஃபர்மேஷன்... உஸ்... அம்மாடி... கொஞ்சம்

வெயிட் பண்ணிப் பார்த்திட்டுப் போகிறேனே. . ." அவன் பதிலுக்கு எதிர்பார்த்துக் கொண்டிராமல், உள்ளே ஹாலுக்கு வந்து அமர்ந்துகொண்டாள். "ஐயாவோட மானேஜர், காரியதரிசி யாரும் இல்லையா? ரொம்ப தஸ்ட்ரியா இருக்கு என்ன வெய்யில் பார்த்தியோ? ஐயாவோட மானேஜர் இருக்கிறாரில்லையா. . . எனக்குத் கொஞ்சம் கூலா வாட்டர் தர்ரியா!"

"கொண்டு வரேங்க. . ."

"அப்படியே மானேஜர் கிட்டயோ காரியதரிசி கிட்டயோ. . ."

"மானேஜருங்களா? ஐயாவுக்கு ஐயாவேதான் மானேஜர். . . காரியதரிசி. . ."

சிதாப்பாட்டிக்கு ஏமாற்றமாகிவிட்டது. வேலைக் காரன் தண்ணீர் கொண்டு வரப்போனவன் யாரிடமோ, "தே சும்மா இருக்க மாட்டே நீ. அதை ஏன் கடிக்கிறே?" என்று விரட்டிவிட்டுப் போனான்.

சிதாப்பாட்டிக்கு நாய்களென்றால் ஒரு அலர்ஜி.

ஜூடோ ஒரு சிறிய தோல் பெட்டியைக் கடித்துப் புரட்டிக்கொண்டிருந்தது. 'ஓகோ. . .என்னை விட்டுவிட்டுப் புறப்படறீங்களோ. . . " ஜூடோவுக்குப் பெட்டி மீது ஆத்திரமாக வந்தது.

'ரொம்ப நல்ல பெட்டியாயிருக்கிறது. இந்த நாய் அதை இப்படிக் கடித்துக் குதறுகிறதே. . . எஜமானரைப் போலவே அதற்கும் எந்த வித மானர்ஸூம் ஒழுக்கமும் யாரும் கற்றுத் தரவில்லை போலிருக்கிறது.' என்று சிதாப்பாட்டி எண்ணிக் கொண்டாள்.

பெட்டி ஒரு மூலையில் பிய்ந்து உள்ளிருந்து எதையோ கயிறு மாதிரி அது இழுத்துக் கொண்டிருந்தது கயிறா? ஊஹூம். . . கயிறு மாதிரி.

ஹாலில் உட்கார்ந்திருந்த சீதாப்பாட்டிக்குத் தெளிவாகத் தெரியவில்லை கயிறு அல்ல. ஏதோ சங்கிலி மாதிரி பளபளப்பாக இருந்தது.

ஜூடோ அதை முழுசாக வெளியே இழுக்க முழு மூச்சுடன் முயன்று கொண்டிருந்தது.

"வர்ரேம்பா... ரொம்ப தாங்ஸ்..." வேலைக்காரன் கொண்டு வந்த குளிர்ந்த தண்ணீரைக் குடித்துவிட்டுச் சீதாப்பாட்டி புறப்பட்டாள்.

அவளை அறியாமல் அவளிடமிருந்து பெருமூச்சு புறப்பட்டது. பா. மு. க. எலெக்ஷனில் தனக்குப் பாதகமான ரிஸல்ட் ஏதாவது சம்பவித்து விடுமோ? ஒரு பக்கம் பொன்னம்மா டேவிட்டின் சுறுசுறுப்பான முயற்சி. இன்னொரு பக்கம் அசட்டுக் கணவர் விட்டிருக்கும் சவால். இதெல்லாம் தன் எலெக்ஷனை பாதிக்குமோ? நிஜமாகவே தன்னை எல்லார் முன்னிலையிலும் காலில் விழும்படி கணவர் செய்து விடுவாரோ?

ஏதாவது செய்தாகவேண்டும். நாம் ரொம்ப அசட்டையாக இருந்து விட்டோமே... இப்போது டு லேட்டோ?



## 25

ரசகுண்டு முகத்தை உர்ரென்று வைத்துக் கொண்டிருந்தான்.

அப்புசாமி சமாதானம் செய்து கொண்டிருந்தார். "டேய் ரசம்! பீமா யார் நீ யார் இரண்டு பேரும் இரண்டு கண்களில்லையா எனக்கு?"

மூன்றாவதாக ஒருகுரல் கேட்டது. "இன்னா வாத்யாரே. என்னியே வுட்டுட்டியே. நான் உன் தோஸ்து இல்லியா?" அரை பிளேடு அருணாசலம்.

"ஆமாம் ஆமாம். நீயும் எனக்கு ஒரு கண்தான்." அப்புசாமி ஒப்புக்கொண்டார். "நெற்றிக் கண்ணுன்னு வெச்சுக்கோயேன். நீங்க மூணு பேரும் என் கண்கள். இன்னும் கண்மணிகள் இருந்தாலும் சேர்த்துக் கொள்கிறேன். நீங்கதான் நடக்கப் போகிற விழாவுக்கே தூண்கள் நீங்க ஒற்றுமையாயிருந்து பாடுபட்டாத்தான் இந்த விழாவே நடக்கும். . ."

"நடக்காது!" முறைத்தான் ரசகுண்டு. "தாத்தா நான் என் மனச்சாட்சியைத் கொன்னுட்டு உங்களுக்காகப் பாடுபட்டிருக்கேன். . . அதை நீங்க மறந்திடக்கூடாது."

"மறக்கலே. . . மறக்கலே. . ."

"நான்தான் உங்களுக்குப் போஸ்டர் ஐடியாவே சொன்னேன்."

"சொன்னே, சொன்னே."

"இந்த பீமா என்ன பண்ணினான்? ஒரு துரும்பைக் கிள்ளிப் போட்டானா? என் கூட ரூமிங்கில் தட்டி வாங்க வாடான்னதுக்குக் கூட நைஸா நழுவிவிட்டான். சாயப்பவுடர் வாங்கிட்டு வாடான்னு பத்து ரூபாய் கொடுத்தீங்களே இதுவா பத்து ரூபாய் பவுடர்? மூணு ரூபாகூட இருக்காது. மீதி ஏழு ரூபாய் எங்கே? நான் கேட்க ஆசைப்படுகிறேன்"

அப்புசாமியின் பார்வை பீமாராவின் பக்கம் சென்றது. பீமாவின் பார்வை அரை பிளேடுக்குத் தாவியது.

அரை பிளேடு அலட்சியமாக ரசகுண்டுவைப் பார்த்தான். "அட இஸ்கி! பெரிய ஊழலைக் கண்டு பிடிச்சுட்டாரய்யா ஊழலை! டவுனுக்குப் போக வர ஆட்டோ என்னாச்சி? உங்க பாட்டன சவாரி அடிக்கிறானோ கேக்குராரய்யா உனக்கு?"

"நீங்க எங்கே ஆட்டோவிலே போனீங்க. அவர் சைக்கிள் எடுத்துக்கிட்டு டபிள்ஸ் போனீங்க."

பீமாராவ் அவசரமாக மறுத்தான் "தாத்தா. ரசா ஹேளுது பச்சைப் பொய்! டப்பில் நாங்கள் போகலை."

அப்புசாமி தலையைப் பிடித்துக் கொண்டார். என் கண்மணிகளா. உங்களுக்குள் ரகளை வேண்டாம். கமிட்டிக்கு நானே தலைவராக ஆயிடறேன் என்னுடைய வெற்றி விழா கமிட்டிக்கு நானே தலைவராக இருக்கிறது அவ்வளவு நல்லாருக்காதேன்னு பார்த்தேன். ஆனால் நீங்க அடிச்சிக்கிற ரகளையாலே விழாவே நின்னுடும் போலிருக்கு. எல்லோருக்கும் ஒற்றுமை அலவன்ஸ்னு தினமும் பத்துப்பத்து ரூபாய் அதிகமாகக் கொடுத்துடறேன். கொஞ்சம் ஊக்கமா விழாக் காரியத்தைக் கவனியுங்க. "

அப்புசாமி தினசரி பேட்டாத் தொகையை உயர்த்தியதும், உயர்த்தியதோடு ஸ்தலத்திலேயே துட்டை

எண்ணித் தந்ததும் விழாக் கமிட்டியினரிடையே வேற்றுமை மறந்து, முகங்கள் மலர்ந்தன.

"இன்னாமா ரசம்! பெரீவரு சொல்றாரே! அனுசரிச்சுப் போவோம். ஒரு டமாஸுக்கு உன்னியே முறைச்சேன். நீ நிசம்னு நெனச்சுக்கிட்டியா!" என்று அரை பிளேடு ரசத்துடன் தோளில் கை போட்டான். ரசம் பீமாவின் தோளில் கை போட்டான். "பீமா, அந்த சைக்கிள் கடைக்காரன் ஏதோ புளுகினதைக் கேட்டு நான் உன்னைக் கணக்குக் கேட்டுட்டேன். தப்பா நினைச்சுக் காதே"

கிதாப்பாட்டியின் முகம் மலர்ந்தது. "நமக்குள்ளே ஆயிரம் இருந்தாலும் நாம இந்த விழாவை ஒற்றுமையா நடத்தி அப்புசாமி மாமாவுக்குப் பெருமை தேடித்தானும். மணங்கொம்பு இருக்கே, அது உதிரி உதிரியா இருக்கு. ஆனால் பாகு வெச்சுப் பிடிச்சுட்டா எப்படி ஒற்றுமையா யிருக்கு."

"அது இன்னாமே மணங்கொம்பு?" அரை பிளேடு கேட்டான்.

"அது ஒரு பலகாரம்" என்று சுருக்கமாக விளக்கின கிதாப்பாட்டி, உள்ளிருந்து ஒரு தேங்காயைக் கொண்டு வந்தாள். "ருக்குமணி, ஒரு வில்லை சூடம் கொண்டா டிம்மா. எல்லோரும் நில்லுங்கோ. நமக்குள்ளே இந்த மனபேதமெல்லாம் போய் நம்ம ஒண்ணாயிட்டோம். பூசணிக்காய் இல்லாட்டால் பரவாயில்லை, தேங்காயைச் சுற்றிப் போடறேன்"

கிதாப்பாட்டி தேங்காயின்மீது கற்பூர வில்லையை ஏற்றி அணியினருக்குச் சுற்றிப் படீரென்று வாசலில்போய் உடைத்துவிட்டு வந்தாள். "சிதறி ஆயிரம் சுக்கலா உடைஞ்சிட்டது. எவ்வளவு பெரிய திருஷ்டின்னு இப்பல்ல தெரியறது!"

"தாத்தா! அசையாதீங்க! அப்படியே இருங்க. யோவ் அரை! தாத்தா கழுத்தை அப்படியே பிடிச்சுக்கிட்டு நில்லுய்யா . . இந்தா பீமா . . சாயத்தைக் கரை . . ம ருக்குமணி எங்கேடி தொலைந்தே? இப்படித் பக்கத்திலே வந்து நில்லு!" ரசகுண்டு ஆர்ப்பாட்டம் பண்ணிக் கொண்டிருந்தான்.

அப்புசாமி கழுத்துச் சுளுக்குப் பிடித்த கொக்கு மாதிரி சிரமப்பட்டுத்தலையை உயர்த்தி போஸ் கொடுத்துக்கொண்டிருந்தார். இன்னும் ஒரு கோடுகூடத் தன்னைப் பார்த்து அவன் வரையவில்லையே என்ற எரிச்சலுடன், "அதுக்குள்ளே பெண்டாட்டி நினைப்பா? இப்போ எதுக்குடா ருக்குமணியைக் கூப்பிட்றே? அவள் உன்னைத் தொட்டு நின்னாத்தான் படம் வரைய முடியுமாக்கும்?" என்றார்.

"ஐயய்யோ! அதுக்கில்லே தாத்தா! வியர்த்துக் கொட்டுது . . அவளை விசிறச் சொல்லி . . ." ரசகுண்டு விளக்கினான்.

"யோவ்! மூக்கு இன்னாபா மாங்கா மாதிரி போட்டிருக்கே. . வாத்யாரு மூக்கு இப்படி இல்லையே!"

அப்புசாமி "எங்கே . . எப்படிப் போட்டிருக்கிறான்!" என்று பார்க்கப் பக்கத்திலே வந்தார்.

"நீங்க அங்கே போய் நில்லுங்க தாத்தா. . பக்கத்திலே வந்துட்டா எப்படிப் போடறது?"

"மூக்கைத் தப்பா போட்டுட்டா எப்படி? கொஞ்சம் ரைட்டாப் போடுடா"

"அரைபிளேடுக்கு ஒரு இழவும் தெரியாது. கையிலே எழுதற படம்னா மூக்கு வாய் எல்லாம் கொஞ்சம் கூடக் குறையத்தான் இருக்கு."

"சரி. சரி. கொஞ்சம் அழகாகவே போட்டுடு."

அப்புசாமி பொறுமையாகப் போஸ் கொடுத்தார்.

அரை மணி நேர வியர்வை சிந்தியதற்குப் பிறகு போஸ்டர் ரெடி. சீதாப்பாட்டி அப்புசாமியின் காலில் விழுந்து கும்பிட்டுக் கெஞ்சுவதுபோல ரசகுண்டு போட்டு முடித்தான்.

"எப்படி தாத்தா போஸ்டர்?"

அப்புசாமி முகத்தில் ஒரு அதிருப்தி "டேய் ரசம்! பாட்டியை மட்டும் நல்லா வரைஞ்சிருக்கே. என்னைத் தாண்டா கெடுத்துட்டே"

"என்ன தாத்தா அப்படிச் சொல்லிட்டே?"

"பாட்டி என்னைக் கெஞ்சற மாதிரி இருக்கணும்னா மெரட்டற மாதிரி இருக்கு கண்ணிலே நிறையத் தண்ணி வரணும். 'நாதா, நாதா நான் பண்ணியது தப்பு'ன்னு அவள் வாயிலிருந்து வரி வரியா வரணும்."

"இன்னா வாத்யாரே! சூடா எதானச் சொல்வாயா.. நாதா நாதான்னா பேசறது இன்னா மாதிரியெல்லாம் போஷ்டர்லே எழுதறாங்க நீ இன்னும் நாதா கீதான்னு. நல்லா சூடா இருக்கோணும் பேச்சு. 'ஐயோ ஐயோ அண்ணாச்சி, நீ போட்ட சபதம் என்னாச்சி! இப்படிப் போடுவியா."

அப்புசாமி, "சபாஷ் அரே! பெரமாதமா கீதப்பா... டேய் ரசம்! அரை சொல்ற வாக்கியத்தையே எழுதிடு!" என்றார்.

ரசகுண்டு தலையைச் சொறிந்தான்.

"அது சரி... ஆனால் அண்ணாச்சின்னா ஆம்பிளை கிட்டே கேட்கறமாதிரி ஆயிடுதே. நம்ம தாத்தாவைக் கேட்கிற மாதிரியல்ல இருக்கும்?"

அரை பிளேடு அலட்சியமாக மாற்று ஐடியா தந்தான்.

"அட இன்னாய்யா பெரமாதம்... 'அடியே சீதேச்சி! நீ போட்ட சபதம் இன்னாச்சி'ன்னு மாத்திக்க."

ரசகுண்டு அவ்வாறே எழுதினான்.

அப்புசாமி மறுபடியும் போஸ்ட்டரைப் பார்த்தார்.

"எங்கே, தூரக் கொண்டுபோய்க் காட்டு."

"ஏண்டா ரசம்! பளிச்சனு பார்த்ததுமே தெரியற மாதிரி ஏதாவது பழைய கால சினிமா பேர் ஏதாவது போட்டுடலாமா? தவறாதீர்கள் பி. யு. சின்னப்பா நடிக்கும் திருநீலக்கண்டர்னு போடுவோமா? பக்கத்திலே வந்ததும் தான் படிப்பாங்க." கமிட்டி அவர் யோசனையை ஏற்றுக் கொள்ளவில்லை.

பீமாராவ் யோசனையாயிருந்தான்.

"நான் ஒந்து ஐடியா ஹேளுதனே!"

"உனக்குத் தமிழ் தடுமாற்றம்... நீ பேசாம சாயம் கரைச்சிட்டுச் சமர்த்தா இரு." என்று ரசம் அடக்கினான்.

பீமா முகத்தை உர்ரென்று வைத்துக் கொண்டான். அப்புசாமி மறுபடி ஏதாவது ரகளை கிளம்பப் போகிறது என்று சமாதானப் படுத்தினார்.

"சில சமயம் தமிழ்ப் படத்தைவிடக் கன்னடப் படம் நல்லா ஓடறது உண்டு. பீமா சொல்லட்டும் ஐடியா."

"தாத்தன் அவ்வாவை நோடி, 'பாட்டி, எல்லி உன் பியூட்டி'ன்னு கேட்கணும்."

கமிட்டி அதையும் நிராகரித்தது. கடைசியில் அப்புசாமி சொன்ன, 'நாதா, நாதா, நான் பண்ணிய தப்பை'யே அங்கீகரித்தது.

"ஷீதேக் குட்டி! ஒரு நிமிஷம் இரேன்."

கார் சாவியை எடுத்துக்கொண்டு காரேஜை நோக்கி நடந்த சீதாப்பாட்டியிடம் அப்புசாமி விரைந்து வந்தார்.

சீதாப்பாட்டி அவசரமாகப் புறப்பட வேண்டியிருந்தது. காரியதரிசி அகல்யா சந்தானத்தை அழைத்துக் கொண்டு, கடைசி நோத் தேர்தல் வேலைகள் சில செய்ய வேண்டியிருந்தது.

"வாட் இஸ் த மேட்டர்? நான் வெளியே புறப்பட்டுக் கொண்டே இருக்கிறேன்."

"ஹி ஹி! வந்து சீதே! உனக்கு இந்த எம்.எஸ். ப்ளூபட்டுப் புடவை இன்னா ஜோரா இருக்கு தெரியுமா?"

"ஆல் ரைட். ஆல் ரைட்! சுற்றி வளைக்காமல் சொல்லுங்க. என்ன விஷயம்?"

"வந்து சீதே... ஊ ம்... சொல்லத் தயக்கமாயிருக்கு."

"சொல்லுங்க. எனக்கு டயம் ஆயிட்டே இருக்கு டோன்ட் வேஸ்ட் மை டயம், அஸ் வெல் யுவர்ஸ்."

"வந்து சீதே..."

சீதாப்பாட்டி காரை நோக்கிப் புறப்பட்டுக் கொண்டிருந்தாள். கொஞ்சமும் எதிர்பாராத விதமாகப் பாட்டியின் கையை அப்புசாமி அன்புடன் பிடித்துக் கொண்டு விட்டார்.

"சே! சே! வாட் இஸ் திஸ்!" கையைச் சட்டென்று உதறினாள்.

அப்புசாமி கெஞ்சினார்.

"சீதே! ஏன் இப்படி சள் புள்ளென்று விழுறே? ஒரு வார்த்தை என்கிட்டே பிரியமாய் பேசக்கூடாதா?"

"வாட் ஹாப்பண்ட் டு யூ?"

"சீதே கொஞ்சம் உள்ளே ஒரு நிமிஷம் வந்துட்டுப் போகக் கூடாதா? நேற்று ராத்திரி ஒரு சினிமா போயிருந்தேன் அதைப் பார்த்ததில் ஒண்ணு தெரிஞ்சுக் கிட்டேன்"

சீதாப்பாட்டி வாட்ச்சைத் திருப்பிப் பார்த்தாள். "இல்ஸ், காலையில் என்ன போர் அடிக்கிறீர்கள்? இட் இஸ் கெட்டிங் லேட் . . ."

"சீதே . . ." அப்புசாமி சீதாப்பாட்டியின் கையைப் பற்றிக் கொஞ்சலாக இழுக்கத் தொடங்கினார்.

"சிசி! எடுங்க உங்க டர்ட்டி கையை."

"சீதே!" அப்புசாமி குரல் கெஞ்சியது. நடுவே ஒரு தரம் ஜன்னல் வழியாக கராஜிலிருந்த காரைப் பார்த்துக் கொண்டார்.

கையை உதறிக் கொண்டாள் சீதாப்பாட்டி.

"சீதே! இதுதான் காதல் பார்வை நீ என்னைப் புரிஞ்சிட்டு எப்பவாவது பார்த்திருந்தால்தான் உனக்குப் புரியும். காதல் என்கிறதே ஒரு திருட்டுத்தான். கண்ணன் ராதையின் உள்ளத்தைத் திருடினான். ராமன் சீதையின் உள்ளத்தைத் திருடினான். ராதா ருக்குமணி கண்ணனுக்காக. ஆகா . . . யாருக்காக . . புன்னகை மன்னன் பூவிழி கண்ணன் பாமா ருக்குமணிக்காக . . .

"அய்யய்யோ! என்னப் பேத்தறீங்க?"

"சீதே! உன் கையால் எனக்குப் பூ வைக்க வேண்டும். இல்லே, இல்லே, என் கையால் உனக்குப் பூ; தயவு செய்து மாட்டேன்னு சொல்லிவிடாதே. எப்படிப் பலாச்சுளை பழுக்கப் பழுக்கத்தான் ருசியோ அதுமாதிரி வயசானாத் தான் காதல் ருசியாயிருக்குமாம்."

"சீசீ! உங்க உளறலை கேட்டுக்கிட்டிருக்க டயமில்லை. நான் புறப்படுறேன்."

அப்புசாமி ஒரு தரம் ஜன்னல் வழியே காரைப் பார்த்தார். காரின் பின்னால் அவசர அவசரமாகத் தட்டியைக் கட்டிக் கொண்டிருந்த பீமாவும் ரசக்குண்டுவும் 'வேலை ஆயிற்று!' என்று உற்சாகமாகக் கையை ஆட்டினார்கள்.



## 26

"அப்படியா? அவ்வளவு பொல்லாதவளா உங்க பிரிசிடெண்ட்?"

"உங்க பிரிசிடெண்ட் என்ன உங்க பிரிசிடெண்ட்? இன்றைக்குச் சாயந்தரம் ஆறு மணியோடு இவள் ஆட்டம் குளோஸ். சும்மா சொல்லக்கூடாது. அந்தக் கிழவர் அசடாட்டம் இருந்தாலும் உள்ளுக்குள்ளே பெரிய ஆள் தான். . . பவுடர் ரொம்பத் தெரிகிறதா கொஞ்சம் பாருங்க. . ."

டேவிட், மனைவியின் பிடரியில் செயினுக்கு அருகே அதிகப்படி அடைசலாக இருந்த பவுடரைக் கைக்குட்டையால் நாசூக்காகத் தட்டி விட்டார். "ஆறு மணிக்குச் சர்ச்சுக்குப் போய்விட்டு ஆறரைக்குப் போகலா மில்லையா?"

பொன்னம்மா டேவிட்டுக்குப் பொறுமையில்லை. "நீங்க நோட்டீஸைப் பார்க்கலீங்களா? ஆறு மணிக்கெல்லாம் எல்லாரும் கூடிடுவாங்க. . . லேட்டாப் போய் அந்த நிகழ்ச்சியைப் பார்க்க முடியாமல் போயிடப் போகுதுங்க. . . வரும்போது சர்ச்சை வைத்துக் கொள்ளலாம்."

ஜுரம் கொஞ்சம் விட்டிருந்தது. அகல்யா டெலிபோனைச் சுழற்றினாள். . . "யாரு, பார்வதியா? எனக்கு உடம்புக்கே முடியலை. . இப்பக் கூட ஜுரம் தான். . . உன் மருமகளுக்கு ரெட்டைக் குழந்தை

பிரசவமாமே... எந்த நர்ஸிங் ஹோம்... நான் வந்து பார்க்கணும்... உடம்பு சரியில்லாததாலே... நீ இந்தப் பக்கம் காரிலே வந்தால்... என்னது... ஆறு மணிக்கு நம்ம கழகத்திலே ஃபங்க்ஷனா? என்ன நிகழ்ச்சி..."

அகல்யா சந்தானத்துக்குப் படபடத்தது. "அநியாயமாயிருக்கிறதே." போர்வையைச் சுருட்டித் தூர எறிந்தாள்.

"என்ன அநியாயம்... நான் ஒருத்தி காரியதரிசின்னு பேரு... எனக்கு யாருமே சொல்லலை... ஒரு வாரம் ஒருத்தி படுத்திட்டால்... என்ன, செத்தா போயிட்டாள். பார்வதி சொன்னாளோ எனக்குத் தெரிந்ததோ... பாவம் பிரசிடெண்ட் எப்படி அவளால் இந்த அவமானத்தைத் தாங்கிக் கொள்ள முடியப் போகிறதோ?"

"ருக்குமணி! பூட்டை இழுத்துப் பாருடின்னு சொல்லிட்டேயிருக்கேனோ இல்லியோ? அடி பரக்கா வெட்டி! காலிலே சலங்கையைக் கட்டிட்டு சதிராடக் கௌம்பிட்டவள் மாதிரி துடிக்கிறியே... சாவியைக் கொண்டாடி... பொறுப்பற்ற கழிசடை... துக்கிரித்தனம்... இங்கே வாடி... கொள்ளை போகத் தெரிஞ்சுது நான் பூட்டை இழுத்துப் பார்த்தேன்."

"என்ன பாட்டி. பிராணனை வாங்கறே? பஸ்ஸு ஒவ்வொண்ணாப் போயிட்டிருக்கு. ஆறு மணிக்கெல்லாம் அவர் அங்கிருக்கணும்னார். நீ இப்போ தான் பூட்டை இழு இழு இழுன்னு இழுக்கறே?"

"அதுக்குன்னு அவசரக்கோலம் அள்ளித் தெளி, சாப்பாடாச்சு சட்டியை உடைன்னு அப்படி அப்படியே போட்டுட்டுப் புறப்பட்டுடறதா? நான் போயித்தான் எல்லாமே ஆகப் போகிறது..."

"ஆறு மணிக்கெல்லாம் பாட்டி அப்புசாமிமாமா காலிலே விழுந்துடுவாளாமே?"

"அசடே! என்னவோ பாம்புப் பஞ்சாங்கத்திலே கிரகணம் கணிச்சுப் போட்டது மாதிரி ஆறுன்னா டான்னு ஆறுக்கு அந்த ராங்கிக்காரி வந்துடுவாளா... முன்னே பின்னேதான் வருவா... நாம் போறதுக்குச் செரியா இருக்கும். அப்படி எட்டாக்கையா ஆயிட்டுதானா ஒரு டாக்ஸி வண்டி வெச்சுட்டுப் போயிடறது - தொலையறான் அவன்தான், ரெண்டோ மூணோ குடுத்துடறது... தஸ்ஸாம்பஸ்ஸான்னு இந்தப் பட்டுப் புடவையைக் கட்டிக்கவே எனக்கு நேரம் கொள்ளையா யிட்டது... என்னடி ருக்குமணி... வைர ஊசி நல்லாப் பளபளக்கிறதோ வாழைத்தண்டு விளக்கிலே அவ்வளவு நல்லாத் தெரியாது... யார் இருக்கிறா நமக்கு? அந்த அப்புசாமி மாமா நல்லாயிருக்கணும். சங்கிலியைப் போட்டிட்டியோ எடுத்து?"

"ஓ... போட்டுட்டிருக்கேன்..."

"ஆயிரம் சொல்லு அப்புசாமி மாமாவுக்கு ரசத்து மேலேயும் என் மேலேயும் உன் மேலேயும் ஒரு தனிப் பிரியம், பாசம். பாரேன்... உன் பட்டுப் புடவை தொள்ளாயிரம்... என்னது ஆயிரம்..."

"இல்லேல்லே... என் புடவைதான் ஆயிரம்... உங்களுது தொள்ளாயிரத்து அறுபது... நான்தான் சீட்டைப் பார்த்தேனே..."

நாலு நாட்களுக்கு முன்... ரீடர்ஸ் டைஜஸ்ட் ஒப்புக்குக் கையிலிருந்ததே தவிர கவனம் அதில் துளியும் செல்லவில்லை சீதாப்பாட்டிக்கு. அன்று அவள் சந்தித்து கான்வஸ் செய்த அங்கத்தினர்கள் சிலரது முகங்களில் என்னவோ ஒரு கேலிச் சிரிப்பு - இன்வர்ட் லாஃப்டர். தெரிந்ததே. அது ஏன் ஏன் என்று அவளுக்குப் புரியவில்லை.

அவன் காரின் பின்னாலேயே அப்புசாமி கோஷ்டியினர் தங்கள் பிரசாரத் தட்டி ஒன்றைக் கட்டி விட்டுவிட்டது அவளுக்குத் தெரியவில்லை. பா. மு. கழகம், பீச், மயிலாப்பூர் கிளப் இன்னும் ராஜம்மா, மிஸஸ் செல்வ நாயகம், காந்தாமணி, பார்வதி இப்படிப் பல அங்கத்தினர்களின் வீடுகளுக்குச் சென்று பேசிய போதெல்லாம் அவள் காரின் பின்னால் அந்தப் பிரசாரத் தட்டி அப்படியே இருந்தது என்பதையோ அதைப் பார்த்துவிட்டுத்தான் சிலபேர் முகத்தில் கேலி தவழ்ந்தது என்பதோ அறியாமல், எதற்கு அந்த மாதிரி சிரித்தார்கள் என்று குழம்பிக் கொண்டாள். பொன்னம்மா டேவிட் ஏதாவது ஸ்கேண்டல் கிளப்பியிருக்கிறாளா?

சீதாப்பாட்டியின் கால் விண் விண்ணென்று வலித்தது. அவ்வளவு நேரம் அந்தப் புதிய அங்கத்தினருடன் டென்னிஸ் விளையாடியிருக்க வேண்டாமோ என்று தோன்றியது. ஆனால் எந்தப் புற்றில் எந்தப் பாம்போ, எலெக்ஷன் டைம். எந்த அங்கத்தினரையும் அலட்சியப் படுத்துவதற்கில்லை. புதிய அங்கத்தினரான பரிமளாவுக்கு ஆட்டமும் சுமார்தான். ஆனால் அவள் மூலம் அவளுடைய சினேகிதிகளின் பத்து ஓட்டுக்கள் வரக்கூடிய சந்தர்ப்பத்தைச் சீதாப்பாட்டி இழக்க விரும்பாததால் 'கண்ட்ரி அடியாக' பரிமளா அடித்தாலும் பொறுமையாக ஆடி விட்டு வந்து சேர்ந்தாள்.

படுக்கை அருகிலிருந்த மணிக்கயிற்றைப் பிடித்து இழுத்து விளக்கை அணைத்தாள். வாட்டர் பேக்கில் வென்னீரை நிரப்பிக் காலில் வைத்துக் கொண்டால் ஆறுதலாக இருக்கும் போலிருந்தது. ஆனால் எழுந்திருப்பதற்கு முடியாமல் பாதி சோம்பலாகவும், பாதி சோர்வாகவும் இருந்தது. யாராவது காலை லேசாகப் பிடித்து விட்டால் கூட வலிக்கு இதமாக இருக்கும். . .

என்ன ஆச்சரியம். அவள் காலை யாரோ இதமாகப் பிடித்து விட்டார்கள். அம்மாடி! என்ன ஆனந்தமாய் இருக்கிறது அந்த ஆடுசதை. அம்மாடி கணுக்கால். முழங்கால். கொஞ்சம் அயோடெக்ஸ் போட்டு நீவிவிட்டால் கூட இன்னும் நன்றாக இருக்கும். அட யாரோ அயோடெக்ஸ் போட்டு நீவி விட்டார்கள்.

சீதாப்பாட்டி ஆச்சரியத்துடன் தன் களைப்பு நீங்கிய கண்களால் கால்மாட்டில் இருந்த உருவத்தைப் பார்த்தாள்.

"நீங்களா? மை குட்னஸ்... அடடே!" சீதாப்பாட்டி சட்டென்று எழுந்து உட்கார்ந்தாள். "சே சே! நீங்க பண்ணலாமா இப்படி?"

"சீதே?" என்றார் அப்புசாமி உணர்ச்சிகரமாக. "உன் காலைப் பிடித்து விட்டு எவ்வளவு நாளாகிறது. களைத்துப் படுத்திருந்தே. என்னவோ தோணித்து. பிடித்து விட்டேன்."

"நோ நோ... தப்பு..." என்ற சீதாப்பாட்டிக்குச் சாயந்திரம் அப்புசாமி அசடு வழியத் தன்னை வழிமறித்துச் சிலபல சேஷ்டைகள் செய்ய முயன்றது ஞாபகத்துக்கு வந்தது.

என்னவோ சினிமா பார்த்தேன் அது இது என்று கூடச் சொன்னாரில்லையா? டூ பேட்

குரலில் கண்டிப்பை வரவழைத்துக் கொண்டாள். ரொம்ப தாங்ஸ்... நீங்க போகலாம்..."

"ஹி ஹி!" என்றார் அப்புசாமி "என்ன சீதே விரட்டறயே? கொஞ்சம் அன்பா ரெண்டு வார்த்தை பேசக்கூடாதா? என்னவோ போன ஞாயிற்றுக்கிழமை அந்தச் சினிமாவைப் பார்த்ததிலிருந்து எனக்கு இருபத்து நாலு மணி நேரமும் உன் நினைப்பேதான்."

சிதாப்பாட்டிக்குச் கூச்சமாயிருந்தது. அசட்டுத் தனமாக இவர் பாட்டுக்கு என்ன பேத்த ஆரம்பித்து விட்டார்.

"கட்டிலிலேயிருந்து கெட் டவுன் பர்ஸ்ட். உங்க ரூமுக்குப் போய் படுங்க. . . என் ரூமுக்குள்ளே நீங்க வர்ராதுன்னா பர்மிஷன் கேட்டுட்டு வாணும்னு எத்தனை தடவை சொல்லியிருக்கேன்."

அப்புசாமி மனைவியின் கன்னத்தைத் தொட முயன்றார். சிதாப்பாட்டி விலகிக் கொண்டாள்.

'சீதே! நீ விலகி விலகிப் போகப் போக என் மனசு உன்கிட்டே இன்னும் பக்கத்துலே பக்கத்திலே வருது சீதே, துன்னலைப் பார்! இன்னிக்குப் பௌர்ணமி. . . சட்னி சாம்பார் இல்லாத வெறும் இட்லி மாதிரி நிலா வீணாப் போகுது சீதே. . . ஞாயிற்றுக் கிழமை நான் பார்த்த படத்துலே. . ."

சிதாப்பாட்டி பல்லைக் கடித்துக் கொண்டாள். . டௌன் வித் யுவர் ஸண்டே ஷோ. . ஆர் யூ கெட்டிங் அவுட் ஆர் நாட்? ரொம்ப ஸீரியஸாச் சொல்கிறேன்."

"வருகிற ஞாயிற்றுக்கிழமை ஆறு மணிக்கு நீ என் கூட அந்தச் சினிமாவுக்கு வாணும். . ."

"உங்களோட சினிமாவுக்கா? நெவர் நெவர்."

"அப்படியானால் உன்னையே கொஞ்சம் கொஞ்சமா விழுங்கிட்டு இங்கேயே ராத்திரி பூரா உட்கார்ந்து உன்னைக் குளவி கொட்டற மாதிரி கொட்டிட் டிருப்பேன். . ."

சிதாப்பாட்டிக்கு உடம்பு ரொம்பக் களைப்பாக இருந்தது. ஒருவகையாக ஆசாமியை எப்படியாவது டிஸ்போஸ் பண்ணினால் போதும் என்று தோன்றிவிட்டது.

"ஆல்ரைட்! ஸண்டேதானே? அதுக்கு இப்போ பிடித்து என்ன? இன்னும் ரெண்டு மூணு நாள் இருக்கிறதே?"

"நீர் வர்றேன்னு ஒப்புக்கோ. அது போதும். சும்மா ஜில்லுனு டிரஸ் பண்ணிட்டு ஜாலியாய்ப் போய்ட்டு வரணும் ஞாயிற்றுக் கிழமை சரியா ஐந்தரை மணிக்கெல்லாம் கிளம்பிடணும். . ."

"சரி சரி வருகிற ஸண்டே ஈவினிங் ஃபைவ் ஓ க்ளாக் . . அவ்வளவுதானே. . ."

"அய்ஸலகும்மா." அப்புசாமி விசில் அடித்தார் உற்சாகமாக.

ரசகுண்டு ஆவலுடன் கேட்டான். "என்ன தாத்தா. பாட்டியைச் சரிக்கட்டிட்டீங்களா? கடோசியிலே வெண்ணெய் திரண்டு தாழி உடைஞ்சாப்பலே ஆயிடப் போகுது."

"தடியா, ஏன்டா உடையுது? வெண்ணெய் திரண்டு ரெண்டு கால் முளைச்சி, தாழியிலிருந்து இறங்கி நம்ம கூட வருது."

"அப்போ ஞாயிற்றுக்கிழமை ஆறு மணிக்குப் பாட்டி நிஜமாக வர்றாள். பா. மு. கழகத்துக்கு முன்னாலே எல்லாப் பாட்டிகள் முன்னாலேயும் உங்க காலிலே விழுறாள். அச்சா பஹுத்!"

"ஒரு சின்ன இக்கு இருக்குதுடா அதிலே. நீ உதவி செய்யணும் . . ."

"அதானே பார்த்தேன்!"

அப்புசாமி தன் திட்டத்தை உற்சாகமாக விவரித்தார்.

"சீதே ஒரு சினிமாவுக்கு என்னுடன் வர்றதுக்கு ஒப்பு கிட்டிருக்கிறாள். அந்தச் சினிமாக் கொட்டகை

பா மு. கழகத்தைத் தாண்டி இருக்கு. காரிலே சீதையும் நானும் ஜில்லுனு வந்து கொண்டிருப்போம். அப்போ கார் பா. மு. கழகத்துக் கட்டிடத்து கிட்டே வர்ரப்போ நீ தடால்னு காருக்குக் குறுக்கே வந்து விழுறே?"

"ஐயையோ. தாத்தா? நான் செத்து கித்துப் போயிட்டால்..."

"சீ கழுதை! காருக்குக் கொஞ்சம் முன்னாடியே வேணும்னாலும் விழு. உடனே சடால்னு சீதே பிரேக்கைப் போடுவாள். நீ கார் எறிட்ட மாதிரியே மூச்சுத் திணற ஆக்ட் பண்ணனும்... நான் உடனே, 'அடடே! பக்கத்தில் தண்ணீர் சோடா கூட இல்லையே...' என்பேன்... சோடா வரும்..."

"கிரஷ்ஷாக் கொண்டு வந்துடுங்க தாத்தா."

"சரி கிரஷ்... கிரஷ்ஷைக் குடிச்சிட்டு... நீ... ஐயோ... எங்காவது படுத்துக்கறேன்னு முனுமுனுக்கணும்..."

"ஏன்?"

"நான் உடனே, 'சீதே... சீதே... பையனைக் கொஞ்சம் பிடி... அதோ உங்க கழகக் கட்டிடத்துக்குக்குள்ளே கூட்டிப் பாட்டியும் பிடிச்சிட்டுக் கழகக் கட்டிடத்துக்கு வருவோம்... பாட்டி கழகக் கட்டிடத்துக்கு வந்ததும் திகைத்துப்போவாள். அங்கே ஜே ஜேன்னு கூட்டமான கூட்டம் கூடியிருக்கும்... எதுக்கு அந்த கூட்டம்னு அவ முழிக்கிறப்போ ஐயோ சடால்னு அறிவிப்பை செய்வேன்... எப்படி ஐயாவோட ஐடியா!"

ஒன்... டூ... த்ரி... மைக் டெஸ்ட்டிங்...

ஒருத்தர் மைக்கில் முழங்கினார்.

"ஹல்லாவ்! ஹல்லாவ்! மகா ஜனங்களே... தொட்டவரே எல்லோருக்கும் சிக்கு ஹ¬டுல பீமா

வணக்கம் ஹேஜருதனே. இன்னைக்கு ஆறு மணிக்கு இங்கே ஒந்து விசேஷம்... ஹல்லாவ்... சென்னா கேளுதா நான் மாதாடது... ஹல்லாவ். இன்னைக்கி ஆறு மணிக்கு இங்கே பந்த்ரி. குடும்பத்தோடு பந்த்ரி. ஆறு மணிக்கு... தூட்டு இல்ல, ஒந்து இல்லா... இனாமா உள்ளே வந்து நோட்ரி. ஆறு கண்ட்டா கி அவசியம் பந்த்ரி..."



# 27

தெரு முனையிலிருந்த டீக் கடை சொல்லப் போனால் டீ ஈக் கடை.

ஸி.ஐ.டி ஆதி டீக்கடைக்காரரிடம் டம்ளரைத் திருப்பித் தந்தார்.

"இன்னா வாத்யாரே. . டீ சாப்பிடலை?"

"டீயா? கண்ணைத் திறந்து பாருய்யா என்ன மொதக்குது பாரு!"

"அட! ஒண்ணுமில்லே. . எறும்பு மாதிரி."

"ஏய்யா. . எறும்புன்னா குடிச்சுடலாமாக்கும். . ."

"என்ன வாத்யாரே . . . உங்க வூட்லே விழுந்திருந்தா எடுத்துப் போட்டுடுவேயில்லே."

"வூட்டுலே நான் துட்டு தரமாட்டேன். . . ஈ விழுந்த டீயெல்லாம் சாப்பிட எனக்கு என்ன தலையிலே எழுத்து?"

"வாத்யாரே. . நீ உடனே குடிக்கலைன்னா என் தப்பா."

"நீ டீயை வெச்சுட்டு, அந்தக் கோடி வூட்டுலே எந்தப் பொம்பளைங்கோ புறப்படறாங்களோ. . அவுங்களையே நோட்டம் விட்டுகிணு இருந்தே. . ஈ வுழுந்திட்டுது."

"அந்தக் கதையெல்லாம் நம்ம கைலே வெச்சுக்காதே . . . நான் டம்ளர் மேலே ஒரு கையை மூடிக்கிட்டுத்தான்

அந்தப் பக்கம் பார்த்துக் கிட்டிருந்தேன். சரி, சரி... வேறு ஒண்ணு போடுய்யா..."

டீக்கடைக்காரர் முணுமுணுத்துக் கொண்டே வேறு டீயைப் போட்டுத் தந்தார். ஆதி அவசரம் அவசரமாக உறிஞ்சினார்.

"நான் வர்ரேன்யா... இதையும் சேர்த்தால் மூணு ரூபா முப்பத்தஞ்சு பைசா... சரிதானே கணக்கு... ஒரு சிகரெட் எடுத்துக்கறேன்..."

"கணக்கிலே டீ குடித்தாலும் கெத்து என்னவோ பெரிய கெத்து."

"என்னய்யா தாயர் சொன்னே?"

"ஒண்ணியுமில்லே... நெருப்புக் கயிறு அதோ அந்தண்டை இருக்குதுன்னேன்..."

சி. ஐ. டி. ஆதி சிகரெட்டைப் பற்ற வைத்து கொண்டே தெருக் கோடியைப் பார்த்தார். டீக்கடையிலிருந்த அழுக்குக் கடிகாரத்தில் மணி ஐந்தரை யாகியிருந்தது.

என்ன இன்னும் அந்த முருகேசனைக் காணலே. செரியான சோம்பேறி. கேஸைக் கபால்னு இன்னைக்கி மறிச்சிப் புடிச்சுப்படறதுன்னு பார்த்தால் ஆள் வரலியே.

ஆதியின் முகம் மலர்ந்தது. அவர் எதிர்பார்த்த கான்ஸ்டபிள் முருகேசன் மஃப்டி உடையில் சிறிது தூரத்தில் சைக்கிளில் வந்து கொண்டிருந்தார்.

"நடுவிலே எஸ்.ஐ. ஒரு வேலை வெச்சுட்டாரு அவுரு வூட்டு பால் கூப்பன் தாரை வாந்துட்டுது. டிப்போக் காரனை கொஞ்சம் சத்தாச்சு வேறு கார்டுக்கு ஏற்பாடு பண்ணிட்டு வந்தேன்."

"சரி, சரி. அதோ அவங்களைத்தான் நாம் ஃபாலோ பண்ணணும் வா."

ரிடையர் ஆகிற வயது நெருங்கினால் கூடச் சிலபேர் சுறுசுறுவென்று உழைத்துக் கொண்டிருப்பது போல மாலைச் சூரியன் தணியாமல் பிரகாசித்துக் கொண்டிருந்தான். சூரியக் கதிர்கள் சாலையில் சென்ற வாகனங்களின் கண்ணாடிகளில் மட்டுமல்ல, மெதுவாக நடந்து வந்து கொண்டிருந்த இரு பெண்களின் ஜரிகைப் புடவைகளின் மீதும் பட்டு, அவைகளைத் தகதகவென்று பிரகாசிக்கச் செய்தன.

"ஏண்டி, ருக்கு! கீழே போட்டு உட்காரக் கொள்ள ஒரு மணை கிணை எடுத்திட்டு வந்திருக்கலாமோ?" என்றாள் சீதாப்பாட்டி.

"என்ன பாட்டி! அங்கே கீழேயா உட்காரப் போகிறே? நாற்காலிகள் வேண்டியது இருக்கும். ஏன் பாட்டி செயினைக் கொஞ்சம் எடுத்து மேலே வுட்டுக் கட்டுமா? தெரியவே இல்லே . . ." ருக்மிணி மார்புச் சேலையை ஒழுங்கா மடித்துவிட்டு, இரட்டை வடம் சங்கிலி தெரியும்படி வெளியே கொஞ்சம் எடுத்து விட்டாள்.

சீதாப்பாட்டிக்கு அது சம்மதமில்லை. "பொல்லாத பட்டணம். போகிற இடத்திலே கும்பலிருக்கும். நல்லவங்களும் வருவாங்க... பொல்லாதவங்களும் வரலாம்... நீ நல்லா இழுத்துப் போத்திக்கோ. . . இப்பத்தான் புதுவிதமாத் திருட்டு நடக்கிறதாமே இந்தப் பாழாப் போற பட்டணத்திலே. ரசம் சொன்னான். . . யாராவது பொம்மனாட்டிகள் தனியாப் போனா, பின்னாடியே சைக்கிள்லே ஒருத்தனும், நடந்து ஒருத்தனுமா வாரதாம். . நடந்து வாரவன் நைஸா நல்லவனாட்டம் 'ஏம்மா

என்னம்மா, ன்ன மாதிரி பேச்சு லபக்குனு அவன் கழுத்திலேயிருக்கிற சங்கிலியை புடிச்சு ஒரு இழுப்பு இழுத்து அறுத்துக் கொண்டு விடறதாம். கண்ணை மூடித் திறக்கறதுக்குள்ளே ரெண்டு பேரும் சைக்கிளிலே சங்கிலியோடு பறந்துடறதாம்..."

ருக்மணி அலட்சியமாகச் சிரித்தாள். "அதெல்லாம் இங்கே இல்லே பாட்டி. புறநகர்ப் பகுதியிலே"

"அதென்ன நகர்? எங்கிருக்கு? சரி, சரி எங்கேயிருந்தால் என்ன? ஒரு இடத்திலே நடக்கிற திருட்டு மாதிரி இன்னொரு இடத்திலே நடக்கக்கூடாதுன்னு சட்டமான்னா? கழுத்துக்கு இந்த ரெட்டை வடம் ரொம்ப பாந்தமாயிருக்கு. அதுவும் அதுக்கி வெச்ச ரசச் சொம்பு மாதிரி உனக்குக் கழுத்து அவ்வளவா இல்லாததுக்குச் சங்கிலி ரொம்ப எடுப்பா இருக்கு."

"பாட்டி, நேரமாயிட்டது போலிருக்கு. டாக்ஸியிலே வேணும்னாப் போயிடலாமா?"

கோப்பாட்டி பதில் சொல்ல வாயெடுக்குமுன் அவளுக்குப் பின்னால் யாரோ மிக நெருக்கமாக வந்து கொண்டிருக்கும் உணர்வு ஏற்பட, சற்றே எரிச்சலுடன் திரும்பிப் பார்த்தாள்.

இரட்டை மண்டை, வழுக்கைத் தலையாக டப்பாக்கட்டு கட்டிக்கொண்டு குள்ளமா ஒருத்தன் சைக்கிளிலே வாட்ட சாட்டமாக மீசையும் உருவமுமாய்-

"அம்மாக்கள் எங்கே போகணும்? டாக்ஸி ஸ்டாண்டு இன்னும் கொஞ்ச தூரத்திலே இருக்கு..."

பாட்டி அவசரமாகப் பேத்திக்குச் சாடை கட்டினாள்... சட்டென்று கழுத்தை இழுத்துப் போர்த்துக் கொள்ளும்படி சங்கிலி பளபளவென்று தெரிந்து

கொண்டிருக்கிறதே . . . அடி . . இந்த அசமஞ்சப் பொண்ணுக்குப் புத்தி சூட்சமம் துளியுமில்லையே.

பேத்தியின் கையை நறுக்கென்று ஒரு கிள்ளு கிள்ளினாள். "ஐயோ!" ரோடென்றும் பாராமல் ருக்மிணி ஓர் அகாரக் கூத்தல் கூத்திவிட்டாள்.

"என்னங்கம்மா? என்னங்க . . ஏதாலும் கௌாஸ் கிளாஸ் காலைக் குத்திட்டுதா? சோமாரிக் கழுதைங்க . . சோடாப் புட்டியை வீசிக் கிட்டாங்கன்னா . . அப்படியே வுட்டுட்டுப் போயிடறாங்க, சண்டை முடிஞ்சதும் . . . பெரிம்மா . . . பேத்தி காலைப் பாருங்க . . "

சைக்கிள்காரரைச் சீதாப்பாட்டி ஒரு முறை முறைத்தாள். "ஏண்டாப்பா, எத்தனை பேரு கிளம்பி யிருக்கிறீங்க? ஆடு நனைறயதேன்னு ஓனாய் அழுததாம். காலிலே கண்ணாடி குத்தினா எடுத்துக்க எங்களுக்குத் தெரியும் போக்கிரிக் கழுதேளா . . . ஏன் எங்க பின்னாடியே வந்திட்டு இருக்கிறீங்க?"

ஆதி இளித்தார் . . "ஹி ஹி! பெரியம்மா! ராங்கா நெனைச்சுக்காதிங்க நாங்க போக்கிரிங்க இல்லை. நல்லவங்கதான்."

"எந்தக் கட்டேலே போறவங்ளா இருந்தாலும் எங்களுக்கு அனாவசியம் . . உங்க ஜோலியைப் பார்த்திட்டு நீங்க போங்க . . தனியாப் போகிற பொம்மனாட்டி பின்னாலேயே வர்ரது . . பேச்சுக் குடுக்கிறது. ஏமாந்த சமயம் பார்த்து செயினை அறுத்திட்டு ஓடிடறது. மரியாதையா இப்போ போறீங்களா . . கூப்பாடுப் போட்டு ஊரைக் கூட்டட்டுமா?

"பெரியம்மா, நீங்க தப்பா நினைச்சிக்காதிங்க. இவுரு என் சிநேகிதரு, முருகேசன். இவரு பொண்ணுக்குக் கல்யாணம் . . "

"கல்யாணமானா என்ன? கருமாந்திரமாயிருந்தா என்ன? நானா முறுக்கு சுற்ற வரப்போறேன்? என்கிட்டே ஏன் சொல்றே?"

ஆதி சாடையாக முருகேசனைப் பார்த்தார்.

"பெரியம்மாவுக்கு முறுக்கு சுத்துர வேலையாக்கும்?"

"நான் முறுக்கைச் சுத்தறேன், ஊரைச் சுத்தறேன். நீ ஒண்ணும் எங்ககிட்டே வாய் கொடுக்க வேண்டாம். "

"பெரியம்மா கோவிச்சுக்கக் கூடாது; இவரு பொண்ணுக்கு ஒரு சங்கிலி ஆர்டர் பண்ணனும்னு சொல்லிட்டிருந்தார். உங்க பேத்தி கழுத்திலே போட்டிருக்கிற செயினு பளபளன்னு புதுபேட்டனா நல்லாயிருக்கு."

சீதாப்பாட்டி ருக்மணியைப் பார்த்துக் கண் சாடை செய்ய, ருக்மணி பயத்துடன் கழுத்தை இறுக்கிப் போர்த்துக் கொண்டான்.

"ஏண்டா கழிசடைகளா? நீங்க இப்போ போறீங்களா? இல்லையா? ஐயோ, ஐயோ திருடன்! திருடன்!"

"ஏன் கெயவி கத்தறே? நாங்க போலீஸ் டிபார்ட்மெணட்! அனாவசியமாக கத்துனே, ஸ்டேஷனுக்குத் தள்ளிக்கினு போயிடுவோம்."

சீதாப்பாட்டிக்குத் திக்கென்றாகியது. போலீஸா?

"போலீஸாடாப்பா? . நீங்க போலீஸாடாப்பா? தெரியாம ஏதோ வயசானவள் திட்டிட்டேன். டூட்டிக்கு வந்திருக்கீங்களா?. . போறாத வேளை எனக்குப் பிடிச்சுண்டு ஆட்டறது. நாக்குல சனி இருந்திருக்குது.

திருடனுங்களோனு சந்தேகப்பட்டு அசடாட்டமா ஏதோ கேட்டுட்டேன்...

"ஏய் செயவி!" முருகேசன் அதட்டுப் போட்டார். "நீ என்ன வேலை செய்யறே?"

"நானா... எல்லா வேலையும் பண்ணுவேன்... ஒரு நல்லது பொல்லாததுக்குச் சமைப்பேன். தீமா முறுக்குச் சுற்றுவேன். கல்யாணம், கார்த்திகை சீமந்தம்னா போய் எத்தனை வேலையின்னாலும் மாடாட்டம் இழுத்துப் போட்டுட்டுச் செய்வேன்."

"அதெல்லாம் சரி. கட்டிட்டிருக்கியே புடவை... என்ன விலை?"

"ஏன், எதுக்குக் கேட்கிறீங்க?"

ருக்மிணிக்குப் பெருமை தாங்கலை... "என்னது ஆயிரம் ரூபாய் மாமா... பாட்டியிது தொளாயிரம்!"

"ஏ, கிழவி உன் பேத்தி கழுத்திலேயிருக்கிற செயின் எந்தக் கடையிலே வாங்கினது? பாப்பாலாலா!... வி.கம்ஸியா... நாதள்ளவா?"

"யார்ராப்பா அவங்கள்ளாம்?"

"பில்லு வெச்சிருக்கியா பில்லு."

"பில்லா? தெரியாதேடாப்பா. ஏண்டி ருக்மிணி, ஏதாவது வெச்சிருக்கியா... மகாலிங்கா மருந்தீஸ்வரா... என்னடாப்பா சோதனை."

"ஏய் கிழவி! புலம்பாம பதில் சொல்லு! இல்லே... லாட்டி உன் முட்டியைப் பதம் பார்த்திடும். இந்த சங்கி... உங்களுக்கு ஏது?"

"வந்து வந்து... அப்புசாமி மாமா கொடுத்தார்."

"அவரு ஏன் உங்களுக்கு இதைத் தாரணும்? இது மாதிரி இன்னும் எவ்வளவு கொடுத்து வெச்சிருக்கார்?"

"ஐயோ, அப்படியெல்லாம் ஒண்ணும் தரலை. இது ஒண்ணே ஒண்ணுதான்."

"எனக்கு ஒரு நிமிஷத்திலே தெரிஞ்சாகணும். இது சகுந்தலா வரதன் வீட்டு நகைதானே?"

"சகுந்தலா வரதனா! ஐயோ! அவுங்க என் எஜமானி யாச்சே!"

ஆதி, முருகேசனுக்குக் கண் ஜாடை காட்டினார்.

சகுந்தலா வரதன், வெய்யிலிலே போட்ட பழைய பிரம்பு நாற்காலி மாதிரி வெளிறிச் சாம்பல் பூத்து நைந்து கிடந்தாள்.

கணவர் அடிக்கடி அவளைக் கேலி செய்தது ஞாபகம் வந்தது. "சகுந்தலா, நகைகள் மீது வைக்கிற பிரியத்திலே கால்வாசி என்மேல் வைக்கக்கூடாதா? நகைகள் என்ன நகைகள்! எவனாவது திருட்டுப்பயல் ஒரு ராத்திரி புகுந்து பீரோவை உடைத்து எடுத்துட்டுப் போனாலும் தீர்ந்தது. அப்போ நீ அழுது புலம்பினால் ஆறுதலா ஒரு வார்த்தை உனக்குச் சொல்றதுக்கு யார் இருக்கிறா?"

பஸ்ஸர் கிறீச்சிட்டது.

சமையல்காரக் கிழவி மத்தியானத்துக்கு மேல் லீவ் சொல்லிக் கொண்டு போனது மெதுவே ஞாபகத்துக்கு வந்து, தானே எழுந்து சென்று கதவைத் திறந்தாள்.

கண்ணை இடுக்கிக் கொண்டு மூக்குக் கண்ணாடியை மேல் ஏற்றிக்கொண்டு, "கேஸ் ஒண்ணும் பார்க்கிறதில்லே" ன்றாள்.

யாராவது போர்டைப் பார்த்து இப்படி எப்பவாவது வந்து நிற்கிறது உண்டு.

"வணக்கம் டாக்டரம்மா... நாங்க போலீஸ் டிபார்ட்மெண்ட்... நீங்க ஒரு கம்ப்ளெய்ண்ட் கொடுத்திருந்தீங்க இல்லையா?"

கம்ப்ளெய்ண்ட்... போலீஸ்...

"ஆமாம். வாங்க... வாங்க."

"இப்பத்தான் ஒரு சின்னத் துப்பு கிடைச்சுது. இந்தச் சங்கிலி உங்க நகைகளிலே ஒண்ணா பாருங்க. அடையாளம் தெரியுமில்லியா உங்களுக்கு!"

"எங்கே... எங்கே காட்டுங்க அதை..."

ஆதி தன் கட்டம் போட்ட மூக்குப் பொடிக் கைக்குட்டையிலிருந்து இரட்டை வடம் சங்கிலி ஒன்றை எடுத்துக் காட்டினார்.

சங்கிலியை வாங்கினாள் சகுந்தலா வரதன்... ஓர் அரைப்பிடி நீளம் கம்மியாயிருக்கிறதோ என்று லேசான சந்தேகம் தோன்றியது. இல்லை இல்லை... என் சங்கிலி தான்...

"என் சங்கிலியேதான்... நன்றாக அடையாளம் தெரிகிறது... ஆசாமி அகப்பட்டுட்டானா? எல்லா நகைகளும் கிடைத்துட்டுதா?"

"எல்லாம் கிடைத்துடும்மா. திருட்டு ஆசாமியைப் பிடித்திடுவோம். கவலையேபடாதீங்க..."

அப்புசாமி, சீதாப்பாட்டி ஏறுவதற்காகக் கார்க் கதவை வினயமாகத் திறந்துவிட்டார்.

'அட கணவருக்கு இந்த எடிகட்டெல்லாம்கூடத் தெரிகிறதோ?' என்று சீதாப்பாட்டி எண்ணிப் புன்னகையுடன் 'தாங் யூ' என்றவாறு ஏறி அமர்ந்து ஸ்டியரிங்கைப் பிடித்தாள்.

அப்புசாமி மில்க் குக்கர் மாதிரி விசில் அடித்தார்.



ஸம்திங் அன்யூஷுவலாக இருக்கிறதே.

கழக வாசலிலிருந்த கார்களின் கும்பல்... விளக்கு அலங்காரம்... ஒலிபெருக்கியிலிருந்து ஏதோ அறிவிப்பு. கூடியிருந்த அங்கத்தினர்களின் அதிகப்படி எண்ணிக்கை...

'வாட் இஸ் கோயிங் ஆன் ஹியர்?' வியப்பும் குழப்பமும் ஏற்பட்டவளாக சீதாப்பாட்டி தனக்குத்தானே கேட்டுக் கொண்டாள். 'பலவீனமான' ரசகுண்டுவைக் கையைப் பிடித்து நிதானமாக அப்புசாமி நடத்திக் கூட்டிக் கொண்டு ஒன்றும் தெரியாத சாதுப்பிள்ளை மாதிரி சீதாப்பாட்டியுடன் நடந்து வந்துகொண்டிருந்தார்.

'என்ன விசேஷம்? மை குட்னஸ்... ஸ்போர்ட்ஸ் மீட்டோ? அதை நான் போஸ்ட்போன் பண்ணி சர்க்குலர் அனுப்பச் சொல்லி அகல்யா கிட்டே சொன்னேன்... அவள்கூட அனுப்பியாயிற்று என்றாள்...'

அப்புசாமி ரசகுண்டுவைப் பார்த்துக் கண் அடித்தார்.

'ஐயோ பாவம், கெயவிக்கு இன்னும் தெரியலைடா!'

சீதாப்பாட்டிக்குக் கழகத்தில் என்ன விசேஷம் என்று தெரிந்துகொள்ள ஆவல் ஏற்பட்ட அதே சமயம், ஓர் எரிச்சலும் ஏற்பட்டது.

சாதாரணமாக அங்கத்தினர்களின் சுதந்திரத்தில் அவள் தலையிடுவதில்லை.

ஒருகால் இன்றைக்கு வேறு ஏதாவது ஃபங்ஷன் இருந்து தனக்குத்தான் ஞாபகமறதியா? அப்படி ஃபங்க்ஷன் இருந்தால் அகல்யா அட்லீஸ்ட் ஒரு போன் பண்ணி யிருப்பாள்.

திடீரென்று இன்னொரு பெரிய சந்தேகம் வந்து விட்டது.

எலக்ஷனே ஒருகால் இன்றுதானோ? சேசே! தட் மச் ஆஃப் ஞாபக மறதியா தனக்கு இருக்கும்? எலெக்ஷன் ட்வென்ட்டி செகன்ட்தானே? ஒருகால் பொன்னம்மா டேவிட் தன் சொந்த ஹோதாவில் அங்கத்தினர்களைக் காக்கா பிடிக்க ஏதாவது ட்ரீட் தருகிறாளோ என்னவோ? ட்ரீட் என்கிறதெல்லாம் ஆஃப்டர் ஆல் ஒரு சாக்குத்தானே? கோரம் காம்பெடிஷனில் லாஸ்ட் வீக் பொன்னம்மா சாம்பியனாக ஸெலக்ட் செய்யப்பட்டா ளில்லையா?

"உங்களைத்தானே? நீங்க ரசகுண்டுவை மெதுவா நடத்தி அழைச்சிட்டு வாங்க. . நான் முதலில் போகிறேன் என்னவோ ஃபங்க்ஷன் போலிருக்கு மை குட்னஸ் எனக்கு மறந்தே போய்விட்டது. . ரசம், இப்போ எப்படிப்பா இருக்கு? தேவலாமா? டோன்ட் வொர்ரி. கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக் கொண்டால் யு வில் பி ஆல் ரைட்"

"ஐயோ பாட்டி!" மாய் மாலம் செய்தான் ரசம். "எனக்கு எனக்கு மூச்சே மூச்சே. . "

அப்புசாமி தாயினும் சாலப் பரிந்து, "என்னடா கண்ணா. . மூச்சா, வருதா?" என்றார்.

ரசகுண்டு, "மூச்சு. . மூச்சு இரைக்கிறது தாத்தா. . " என்றான்.

"சீதே! நீயும் அந்தப் பக்கம் பிடி. . பயல் இங்கேயே விழுந்துடுவான் போலிருக்கு ஏன் சீதே, சொல்றியே தவிர.

இவன் மேலே - மோதினானனுட்டுத்தான் நீ பிரேக் போட்டிருப்பேன்னு தோணுது..."

சீதாப்பாட்டி எரிச்சலுடன் பார்த்தாள். ஏற்கனவே கழகத்தில் தனக்குத் தெரியாமல் ஏதோ ஒரு ஃபங்க்ஷன் நடக்கிறதே என்று எரிச்சலிலிருந்தாள்.

"ரசத்து மேலே கார் துளி கூடப் படலை படலை என்று ஐ ஹாவ் டோல்ட் யூ எ தௌஸண்ட் அண்ட் ஒன் டைமஸ்... திருப்பித் திருப்பி அதையே கேட்கறீங்க!"

"சரி, சரி... கோபப்படாதே. பையனுக்கு ஒண்ணுகிடக்க ஒண்ணு ஆயிட்டதுன்னா விவகாரமாப் போயிடுமில்லையா? ஏற்கனவே பாவம் நீ" அப்புசாமி சிரித்தார்.

"ஏற்கனவே வாட்?" என்றாள் சீதாப்பாட்டி.

"ஒன்றுமில்லே... ஒன்றுமில்லே. நீ பையனைக் கொஞ்சம் நல்லாப் பிடி... டேய் ரசக்குண்ணு... என்னடா ராஜா பண்றது?"

"பரவாயில்லே தாத்தா... கொஞ்ச நேரம் படுத்திருந் தேனானால் சரியாகிவிடும்..."

"யூ டூ ஒன் திங்..." என்றாள் சீதாப்பாட்டி. "நீங்க மெதுவா இவனைப் பிடித்து என் ஆபீஸ் ரூமிலேயிருக்கிற சோபாவிலே படுக்க வையுங்க... அதற்குள் நான் போய் அசுல்யா கிட்டே சொல்லி எதற்கும் டாக்டரை வரவழைச் சுடறேன்..."

"ஹாய்! பிரசிடெண்ட்ஜி!"

ஓர் அங்கத்தினர் சீதாப்பாட்டியை வரவேற்றாள். வரவேற்றவள் முகத்தில் ஓர் ஆச்சரியமும் வியப்பும் ஏன் ஏற்பட்டது என்று சீதாப்பாட்டிக்குப் புரியவில்லை. திடீரென்று பரபரப்புடன் அவள் உள்ளே ஏன் வேகமாகச் செல்லவேண்டும் என்பதும் தெரியவில்லை.

''ஹலோ! பிரசிடெண்ட்ஜி! வந்துட்டீங்களா?'' பொன்னம்மா டேபிள் டென்னிஸ் விளையாடிக் கொண்டு இருந்தவள் அவளுக்கே உரிய கர்வமான புன்னகையுடன் சிட்டாட்டத்திலிருந்து எழுந்து வந்தாள். ''யாரோ சொன்னீங்களே, பிரசிடெண்ட் சீதா வரமாட்டாள்னு. இப்போ வந்தாளா இல்லையா?''

'அவள்' என்று 'ள்' போட்டு பொன்னம்மா பேசியது சீதாப்பாட்டிக்கு ஒரு மாதிரியாயிருந்தது.

ஆகவே அவளை இக்னோர் செய்வதுபோல அலட்சியமாக ஒரு பார்வை பார்த்துவிட்டு அருகிலிருந்த காரியதரிசி அகல்யாவிடம் "அகல்யா.. ஜஸ்ட் எ மினிட்" என்றாள்.

அகல்யா சந்தானம் ஏன் இப்படி வெளிறிப்போய்ப் பயந்தவள் மாதிரி இருக்கிறாள் என்பது சீதாப்பாட்டிக்கு புரியவில்லை. "அகல்யா, ஏன் ஒரு மாதிரி இருக்கிறாய்? ஆர் யூ நாட் ஃபீலிங் வெல்..?"

''பிரசிடெண்ட்ஜி!'' ஆபீஸ் அறையை நோக்கி சீதாப்பாட்டியுடன் நடந்த அகல்யாவுக்கு நா தழுதழுத்தது. ''நீங்கள் வரமாட்டீர்களென்று நினைத்தேன். நீங்க வந்திருக்கக்கூடாது பிரசிடெண்ட்ஜி...''

"வாட் ஆர் யூ டாக்கிங்? நான் வந்திருக்கக்கூடாதா ஏன்?"

அவர்கள் பேசிக்கொண்டு செல்லும்போது எதிர்ப் பட்ட பல அங்கத்தினர்கள் ஒரு மாதிரி விசித்திரமாகப் பார்ப்பது போலிருந்தது சீதாப்பாட்டிக்கு.. ஸம்திங் இஸ் கோயிங் ஆன் ஹியர்...

"அகல்யா! இன்றைக்கு என்ன விசேஷம்?"

அகல்யா பதில் சொல்லவில்லை. அப்புசாமி சொன்னார்.

"சிதேக்குட்டி! இன்றைக்கு என்ன விசேஷமா? விஷ்!" அவர் ஒரு விசில் அடிக்க படுத்திருந்த ரசகுண்டு விருட்டென்று எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

"லலால லா. . ." அப்புசாமி பாடினார்.

ரசகுண்டு ஒரு மாதிரியாகச் சிரித்துக்கொண்டு அப்புசாமி அருகே நின்றான். சிதாப்பாட்டி திகைத்தாள்.

"ஹேய்! யூ ஆர் ஆல் ரைட்?"

"சிதே! அவன் ஆல் ரைட்! நான் ஆல்ரைட்! இங்கிருக்கிற எல்லா ஆளும் ஆல் ரைட்! நீதான் ரைட் டில்லே. . ."

"என்ன சொல்றீங்க? ஐ காண்ட் காச் யூ."

"ரசத்துக்கு ஒரு அடியும் படலை. . . ஒரு நுனியும் படலை. . . ஊட்டி உருளைக் கிழங்காட்டம் அவன் நல்லாத் தானிருக்கான். . . உன்னை இங்கே தள்ளிகினு வர்ரதுக்குத் தான் அப்படி ஒரு நாடகம்! புரியுதாம்மே? இல்லாட்டி நீ வருவியா? டபாய்த்திட்டிருப்பியே?"

"வாட் நான்சென்ஸ் ஆர் யூ டாக்கிங்?"

"நான்சென்ஸ் கீன்சென்ஸ் எல்லாம் அந்தக் காலம். . நினைத்ததை முடிப்பவன் நான். . . நான். . . நான். . ."

"டோன்ட் ஷௌட் ஐ ஸே! இது ஆபீஸ். . . கொஞ்சம் கௌரவமா நடந்து கொள்ளுங்க. . . நல்ல பிள்ளையாட்டம் நடந்துகிட்டீங்க. . . . திடீர்னு வாட் ஹாப்பண்ட் டு யூ?"

"ஆமாண்டி கண்ணு! நல்ல பிள்ளையாட்டம் நடந்து கிட்டால்தான் நீ வலையிலே வந்து விழுவே. டேய் ரசம்! விஷ்ஷ்!"

அப்புசாமி இரண்டாம் விசில் கொடுத்தார். அதற்குள் பொன்னம்மா டேவிட்டும் இன்னும் சில

கிழவிகளும் ஆபீஸ் அறைக்குள் வேகமாக வந்தனர். அப்புசாமியின் கையை பொன்னம்மா டேவிட் குலுக்கினாள். "ஓ! நீங்க இங்கே இருக்கீங்களா? (சிரிப்பு) கன்கிராஜுலேஷன்! எங்கள் மனமார்ந்த பாராட்டுக்கள் உங்களுக்கு - (பெரும் சிரிப்பு) - நீங்க உண்மையிலே பெரிய ஆள்." சிரிப்பு - மேலும் சில கிழவிகள் அப்புசாமிக்குக் கை கொடுத்தனர். கை குலுக்கியபின் அப்புசாமி, "என்ன, மேடையெல்லாம் ரெடியா? அம்மாவைக் கூட்டிட்டு வரலாமா?" என்றார்.

பொன்னம்மா டேவிட்டுக்கு வாயெல்லாம் பல். "கூட்டிட்டு வரலாம். ரெடி..."

"அம்மா? ஹூ இஸ் அம்மா? எங்கேருந்து கூட்டிட்டு வரப்போறீங்க?" சீதாப்பாட்டி கேட்டாள்.

அப்புசாமி ரசகுண்டுவின் உதவியுடன் பாடினார் "அம்மாவும் நீயே... அப்பாவும் நீயே என்னை அவமதித்த எல்லாமும் நீயே... முருகா!! ஓ! முருகா! அம்மாவும் நீயே... அப்பாவும் நீயே..."

சீதாப்பாட்டிக்கு நாராசமாயிருந்தது. "கொஞ்சம் டீஸண்டா பிஹேவ் பண்ணிக்குங்க. அசிங்கமா நடந்துக்காதீங்க; இது ஒரு கௌரவமான இடம்."

"சீதே!" என்றார் அப்புசாமி மிடுக்காக. "நான் குட்டிக் கரணம்கூடப் போடுவேன்... அடிக்கட்டுமா ஒரு அந்தர்! டேய் ரசம்! ஒதுங்குடா!" அப்புசாமி ஒரு குட்டிக்கரணம் போட்டார்.

கூடியிருந்த கிழவிகள் கையைத் தட்டி ஒரே மகிழ்ச்சி ஆரவாரத்துடன் அப்புசாமியின் குட்டிக் கரணத்தை ரசித்தார்கள்.

"தாத்தா! ஒன்ஸ் மோர்!" என்றான் ரசகுண்டு. "ரசிகப் பெருமக்கள் ரொம்ப ரசிக்கிறாங்க தாத்தா உங்க குட்டிக்கரணத்தை!"

"அச்சா!" என்றார் அப்புசாமி. "கைவச்ச கர்ணமா, கை வைக்காத கர்ணமா? எதுடா போடட்டும்?"

"கையை வெச்சே போடுங்க தாத்தா."

"ஹய்! ஒதுங்குங்க! ஒதுங்குங்க எல்லாரும்! அத்திரி கும்மா!"

அப்புசாமி எல்லாக் கிழவிகளையும் ஒதுக்கிவிட்டு இன்னும் ஒரு அந்தர் போட்டார்.

சீதாப்பாட்டிக்கு மானமே போய்விட்டது போலிருந்தது. முகம் சிவுசிவுவென்று சிவந்துவிட்டது. அப்புசாமியைக் கண்களால் இவ்வளவு சூடாக என்றுமே அவள் முறைத்ததே கிடையாது.

பல கிழவிகள் அப்புசாமியைப் பாராட்டினர். "உங்கள் குட்டிக்கரணம் பலே பலே! இத்தனை வயசிலும் நீங்கள் எப்படி இளமையாக இருக்கிறீர்கள்? அதன் ரகசியம் என்ன?"

"ரகசியம்?" அப்புசாமி யோசித்தார். "மசால் தோசை! வெங்காய ரவா! போண்டா சாம்பார்! ஏண்டா ரசம்! கரெக்ட்தானே?"

"தாத்தா! தயிர் வடையை வுட்டுட்டீங்களே?"

"கரீக்ட்! தயிர் வடையும் சேர்த்துக்குங்க!"

பொன்னம்மா டேவிட் குதூகலமும் சிரிப்புமாக அவசரம் அவசரமாக வந்தாள் "நேரமாச்சு! நேரமாச்சு! பொண்ணை அழைச்சிட்டு வாங்க மேடைக்கு."

அப்புசாமி சீதாப்பாட்டியைப் பார்த்தார். அந்தப் பார்வையில் ஒரு அசுவமேத யாகக் குதிரையை ஜெயித்த அனாயாசம், கூப்பிட்ட இடத்துக்கு வர மறுத்த டாக்ஸி காரரை அதே இடத்துக்கு வரப் பண்ணிய வெற்றி மதர்ப்பு.

அப்புசாமி பாடினார். ரசகுண்டுவின் பின்னணி இசையுடன் "மணமகளே மணமகளே வா... உன் இடது காலைத் தூக்கி வைத்து (வலது கால் தாத்தா...) சரி... வலது காலைத் தூக்கி வைத்து... பிப்பீபீ... பீபீபீ உன் வலது காலைத் தூக்கி வைத்து வா... வா உன்னைத் தாண்டியம்மா. உன்னைத்தான் மேடைக்கு வரச் சொல்றேன்."

"மேடைக்கா? வாட் டு யூ மீன்?"

"மீன்? திமிங்கலம்! புரியலியா? டேய் ரசம்! விஷ்!" அப்புசாமி ஒரு விசில் கொடுத்தார். ரசகுண்டு அருகிலிருந்த ஸ்விட்சைப் போட்டான்.

இவ்வளவு நேரமும் இருட்டிலிருந்த ஒரு படத்தைச் சுற்றிப் பளிச் சென்று சீரியல் விளக்குகள் எரிந்தன.

"மை குட்னஸ்!" சீதாப்பாட்டிக்குத் தூக்கி வாரிப் போட்டது; "வாட் இஸ் ஆல் திஸ்?"

சீதாப்பாட்டி அப்புசாமியின் திருவடிகளில் விழுந்து கெஞ்சிக் கொண்டிருக்கிற படம் அவளைப் பார்த்து கேலி செய்வது போலிருந்தது.



## 29

ஒரே பரபரப்பு வண்ண வண்ண ஸ்டைல் கிழவிகள். ஆர்தரைட்டிஸ் அழகிகள், சாலேஸ்வரிகள், வாயுப் பிடிப்புகள், லொக்லொக்குகள், வென்னீர் பிளாஸ்குகள்... சில கிருஷ்ணாராமா கான்ஷியஸ்கள்.

அப்புசாமி போலீசைப் பார்த்தார்.

இந்த ரசம், பீமா, இவர்களுடைய தீர்க்க ஆலோசனையும், ஆர்வமும்தான் என்னே, என்னே! ஒரு காரியத்தை நம்பி ஒப்படைத்தால் பயல்கள் சிங்கம்தான் எந்த ஒரு சின்ன விஷயத்தைக்கூட மறக்கவில்லையே.

போஸ்ட்டர் எழுதினது, பிரசாரம் செய்தது, விளக்கு அமைப்பு மைக் ஏற்பாடு... எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற் போல்... நெரிசலைக் கட்டுப்படுத்தப் போலீஸ் ஏற்பாடு?... பலே! பலே,

அப்புசாமிக்குப் பெருமையாயிருந்தது.

ஜீப்பிலிருந்து இன்ஸ்பெக்டரும் சில கான்ஸ்டபிள்களும் இறங்கி ஹாலுக்குள் நுழைந்தனர்.

''வாங்க! வாங்க'' அப்புசாமி பூரிப்போடு சப்இன்ஸ்பெக்டரை வரவேற்றார். "இந்த மேஜைகிட்டே ஒரு ஸ்பெஷல் போலீஸ்காரரைப் போடுங்க. இங்கேதான் கிழவியை உட்காரவெச்சுத் தலையிலே நோட்டுக்களைக் கொட்டப்போறது. டேய் ரசம்! சார்களுக்குக் கிரஷ் கொண்டு வா. இல்லே, காபி கொண்டு வரச் சொல்லட்டுமா?"

சப்இன்ஸ்பெக்டர் முறுவலித்தார். "பரவாயில்லே. டியூட்டியிலே இருக்கிற போது இப்படிப்பட்ட உபசாரங்களையெல்லாம் ஏற்றுக்கிறது சரியில்லே."

"அட இஸ்கி!" என்றார் அப்புசாமி. "என்னவோ நான் லஞ்சம் கொடுக்க வந்த மாதிரி பேசறீங்களே - கிரஷ்தான் சார் கொடுக்கிறேன். . பரவாயில்லே சாப்பிடுங்க . . "

"தாங்யூ மிஸ்டர் அப்புசாமி! அந்த ரூமுக்கு வாரீங்களா கொஞ்சம்?"

கப்பென்று அப்புசாமியின் கையைப் பிடித்தார் சப்இன்ஸ்பெக்டர். அந்தப் பிடியிலிருந்த உறுதி அப்புசாமியின் மணிக்கட்டை உடைப்பது போலிருந்தது. "அய்யாங்!" என்று கத்தி விட்டார்.

"மன்னியுங்கள் மிஸ்டர் அப்புசாமி, நீங்கள் ஸ்டேஷனுக்கு வாருங்கள். விரிவாகப் பேசலாம்; இங்கே கலாட்டா ஆகும்."

இதற்குள் செய்தி பரவிவிட்டது. . . ஒன்றுக்குப் பத்தாய் கைகால், வாய், செவி, மூக்கு எல்லாம் முளைத்து.

அப்புசாமி அரெஸ்டாம்! அப்புசாமியைப் போலீஸ் கபாலென்று பிடித்து விலங்கு பூட்டி விட்டார்களாம். . . அவரைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு வேனுக்குப் போகிறார்களாம். . .

பொன்னம்மா டேவிட்டும் இன்னும் சில அதி கௌரவமான கிழவிகளும் கூட்டத்தை விலக்கிக்கொண்டு விரைந்தனர்.

வாசலிலிருந்த போலீஸ்காரர் அனாவசியக் கூட்டத்தை "போங்கம்மா. . . போங்க. . . உங்க நிகழ்ச்சியை நீங்க கவனியுங்க. . இங்க ஒண்ணுமில்லே. . . போங்க. . போங்க." என்று சொல்லி அப்புறப்படுத்திக் கொண்டிருந்தார்.

"நகரப்பா நீ...." பொன்னம்மா டேவிட் கோபமாகப் போலீஸிடம் நகரச் சொல்லிவிட்டு உள்ளே நுழைந்தாள். அப்புசாமி தாயைப் பார்த்த கன்று மாதிரி, "என்னங்க... என்னைப் போய்...." என்றார் பிலாக்கணம் வைக்காத குறையாக.

பொன்னம்மா மிடுக்குடன், "இன்ஸ்பெக்டர் சார்! நீங்கள் செய்திருக்கிற காரியம் எங்களுக்கு ஒன்றுமே புரிய வில்லை. நீங்கள் எங்கேயோ நுழையவேண்டியதற்குத் தப்பா இங்கே எங்கள் கழகத்தில் நுழைஞ்சிட்டீங்க. நாங்க ரொம்ப வருத்தப்படறோம்" என்றாள்.

சப் இன்ஸ்பெக்டர் அமைதியாக, "நீங்க உட்காருங்கம்மா. நீங்க இவருக்கு வேண்டியவரா?" என்றார்.

சுருக்கென்று பொன்னம்மா டேவிட் பதில் சொன்னாள்.

"வேண்டியவரா? எங்களுடைய மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய எங்கள் நெருங்கிய நண்பர்...."

"ஓ! அப்படியா? மன்னியுங்கள்... இன்னும் நான் அரெஸ்ட் செய்யவில்லை... அதற்கு முன் சில கேள்விகளை இவரிடம் கேட்க வேண்டியிருக்கிறது."

பீமாராவுக்கு ரத்தம் கொதித்தது. "ஏனு அக்கிரமா ரசா! எல்லிடா நம்ம அவ்வா...."

"டேய் பொதி மாடு! உங்க சீதா அவ்வாதான் என்னவோ தந்திரம் பண்ணி போலீஸை அனுப்பிச்சிருக்கா! மரமண்டைக்குப் புரியலே?"

"மிஸ்டர்! உங்க பேரு என்ன?" இன்ஸ்பெக்டர் அப்புசாமியிடம் கேட்டார்.

அப்புசாமி திருதிருவென்று விழித்தார். பதட்டத்தில் பெயர் மறந்துவிட்டது. "வந்து வந்து," என்று தடுமாறினார்.

பக்கத்திலிருந்த ரசகுண்டு, "அப்புசாமி மாமா" என்று பதில் சொன்னான்.

"உன்னைக் கேட்கலை... இவரைக் கேட்டேன். மிஸ்டர், உங்க பேர் என்ன?"

அப்புசாமி பெயரை முணுமுணுத்தார்.

"உரக்கச் சொல்லுங்க மிஸ்டர்!"

"அப்புசாமி."

"வேறு பெயர் ஏதாவது உண்டா?"

அப்புசாமி விழித்தார். யோசித்தார் வேறு பெயர்?

சின்னவயதில் 'டபிள் மண்டை', பேரீச்சம்பழம்' இந்த மாதிரி இரண்டு பெயர் உண்டு; அதைக் கேட்கிறாரா?

"மிஸ்டர் ... உங்களுக்கு முதலியாரைத் தெரியுமா?"

"முதலியார்?" அப்புசாமி தடுமாறிப் போனார், "மணவாள முதலியாரையா?"

"கரெக்ட்! அவரைத்தான்."

"ஓ; நல்லாத் தெரியுமே... எனக்கு ரொம்ப தோஸ்த்!"

"உங்களை மாதிரியே அவர் இருப்பாரில்லையா?"

"ஆமாம்."

"உங்களுக்கு சகுந்தலா வரதனை எத்தனை வருஷமாத் தெரியும்?"

"சகுந்தலா வரதன்? யார் அது? நீங்க யாரைக் கேட்கிறீங்க?"

"யோவ் ஆதி! அந்த அம்மாவை மெதுவாக் கையைப் புடிச்சுக் கூட்டிட்டு வாங்கய்யா."

சகுந்தலா வரதனைச் சில விநாடிகளில் கூட்டி வந்தனர்.

"அடடே! இதுவா? பால் பாயசம்! இவங்க வீட்டிலே ஒரு நாள் விருந்து சாப்பிட்டிருக்கேன்."

"எதுக்காக இவங்க வீட்டுக்குப் போனீங்க?"

"அதான் சொன்னேனே... விருந்து சாப்பிடப் போனேன்."

"இந்த அம்மா எதுக்கு உங்களுக்கு விருந்து போடணும்...?"

"அவங்களுக்கு வசதி இருந்தது போட்டாங்க. எனக்கு வயிற்றிலே இடமிருந்தது சாப்பிட்டேன்."

"யோசனை பண்ணிச் சொல்லுங்க."

"யோசிக்க என்ன இருக்கு? என்னவோ போட்டாங்க... சாப்பிட்டேன்."

"உங்களை அப்புசாமின்னு நினைச்சுப் போட்டாரா? மணவாள முதலியார்னு நினைச்சுப் போட்டாங்களா?"

"ஓ! ஓ! அதைக் கேட்கிறீங்களா? அதை ஏன் கேட்கறீங்க! ஒரே தமாஷ்! மணவாள முதலியார் ஒரு சாலஞ்ச்வுட்டார். நீ நல்ல நடிகர்னு சொல்றியே... என்னை மாதிரியே நடிச்சு... இந்த சகுந்தலா வரதன் வீட்டிலே போய் விருந்து சாப்பிட்டு வர முடியுமான்னார். போனேன். தின்றேன். திரும்பினேன்..."

சப்-இன்ஸ்பெக்டர் இளக்காரப் புன்னகையுடன் அப்புசாமியைப் பார்த்தார்.

"சகுந்தலா வரதனிடம் நீங்க மணவாள முதலியார் மாதிரி நடித்து நகைப் பெட்டியை வாங்கிட்டு நழுவலை?"

"அய்யய்யோ!" என்று அலறினார் அப்புசாமி. "நகையாவது பெட்டியாவது?"

"அந்த நகைகளிலிருந்து இதோ இந்தச் சங்கிலியை எய் ஆறு! எங்கய்யா அந்தச் சமையல்காரக் கிழவி?"

"இதோ இங்கே இருக்கு சார்..."

"தள்ளிட்டு வாய்யா..."

"நீங்க இந்தக் கிழவிக்கு இந்தச் சங்கிலியைக் கொடுத்தீங்கல்லே? ஏய் சமையலம்மா... சொல்லு!"

தொப்பாட்டி வயிற்றில் அடித்துக்கொண்டாள். "இன்ச்பெக்டர் சார்! பாவி மனுஷன் ஏதோ சொந்த சங்கிலியைக் கொடுக்கிறாப்பலே கொடுத்தானேன்னு வாங்கிட்டோம். திருட்டுச் சங்கிலின்னு தெரியாது எனக்கு அப்பவே தீசடாப்பா இவ்வளவு பவிஷு திமிர்னு வந்தது. இந்த ஆறு அரைக்காசு சம்பாதிக்கத் துப்பத்தது ஆச்சே. கோட்டும் சூட்டும் மாட்டிட்டு... அங்கே வந்து எங்க எஜமானியம்மா வீட்டிலே இது அடிச்ச லூட்டி... இன்னும் இந்தக் கோட்டானைப் பற்றி எல்லா விபரமும் நான் சொல்றேன். எங்களை ஒண்ணும் பண்ணிடாதீங்க..."

"நீங்க கவலைப்படாதீங்க ஸ்டேஷனுக்கு வந்து நீங்க ஸ்டேட்மெண்ட் கொடுங்க..."

"நான்கூடக் கேட்டேனே, என்னவோ மொதலியார் அல்லவா விருந்துக்கு வரப்போறதா எஜமானியம்மா சொல்லிட்டிருந்தாள். நீங்க ஏன் நாக்கைத் தீட்டிட்டு வந்திருக்கீங்கன்னு அப்பவே கேட்டேன். மொதலியார் என் சிநேகிதராக்கும்... அவர் பின்னாலே வருவாராக்கும் நான் முன்னாலே வந்தேனாக்கும்னு அளந்தது கதையா கெட்டிக்காரன் புளுகு எட்டு நாள்..."

வக்கீல் திருமதி சிங்காரம், பொன்னம்மா டேவிட்டை இளக்காரமாகப் பார்த்தாள். "நான் அப்பவே

சொன்னேன் ஓட்டல் சோழாவில் இந்த ஆளுதான் முதலியாரா நடிச்சிருக்கான் . . எங்க மொதலியார் ஒரு நாள்கூட டிரிங்க் பண்ணமாட்டார்னு சொன்னேன். என்னை நீ கேலியாய் பார்த்தே. உங்க முதலியாரைப்பத்தித் தெரியும்னு சுருக்குனு சொன்னே?"

ரசகுண்டு, பீமாராவ் யாராவது தென்படுகிறார்களா என்று அப்புசாமி பேந்தப் பேந்தப் பார்த்தார். ரசகுண்டுவும் பீமாவும் தலையைக் குனிந்துகொண்டு அவரைப் பார்க்காமல் நின்றனர்.

"ரசம்! ரசம்! பீமா! சொல்லுடா, நானா திருடன்?"

தாத்தா கையில் விலங்கு ஏறும் கண்ணராவிக் காட்சியைப் பார்க்க பீமா ரசத்தின் பின்னால் மறையப் பார்த்தான். ஆனால் அது சாத்தியமில்லாததால் ரசம் பீமா பின்னால் மறைந்து கொண்டான்.

ரசத்துக்கு ஒரே கோபம். பீமாவிடம் கிசுகிசுத்தான் "நகைகளெல்லாம் மோசடி பண்ணியிருக்கார் தாத்தா ஒரு வார்த்தை நம்மகிட்டே நம்பிச் சொல்லலை. இப்ப நம்மளைப் பார்த்து ரசா பீமான்னா. . "

அப்புசாமி கூட்டத்தினரைப் பரிதாபமாகப் பார்த்தார். மைக்கில் ஒரு பழைய சிதம்பரம் ஜெயராமனின் நடுக்கல் பாட்டு. குற்றம் புரிந்தவன் . . வாழ்க்கையில், நிம்மதி . . கொள்வதேது? ஆமாம் குற்றம் செய்தேன். ஆமாம் சிதையைக் காலில் விழ வைக்கிறேன் என்று ஆணவம் மொழிந்தேன். . சீதே! எங்கே என் சீதே . .

அப்புசாமி ஞானம் பெற்றவர் மாதிரி சீதாப்பாட்டியை அப்போதுதான் தேடினார்.

சப்இன்ஸ்பெக்டர் விலங்குடன் அவரை நெருங்கினார்.

போலீஸ்காரர் ஒருத்தர் பரபரப்புடன் ஓடி வந்தார். "சார் வாசலிலே ஒரு அம்மா கோபாவேசமாக வந்திட்டிருக்காங்க உங்களை உடனே பார்க்கணுமாம்."

"யார் அது? எப்படி இருக்காங்க? என்னை ஏன் பார்க்கணும்?" என்றார் சப்இன்ஸ்பெக்டர்.

"அவங்களைப் பார்க்கவே பயமா இருக்குங்க. கண்ணகி மாதிரி இருக்காங்க. வலது கையிலே ஒரு தங்கச் செயினை வெச்சிகிட்டு, தலையெல்லாம் கலைஞ்சு, உடம்பெல்லாம் வியர்த்து... கண்ணெல்லாம் சிவந்து."

சப் இன்ஸ்பெக்டர் பரபரப்புடன் வெளியே வந்தார். அங்கே -

கையில் ஒரு செயினும் கண்களில் கோபத் தீப்பொறியுமாக சீதாப்பாட்டி நின்றிருந்தாள்.



## 30

"டச் ஹிம் நாட்!"

சீதாப்பாட்டியின் அதட்டல் சப் இன்ஸ்பெக்டரின் கையிலிருந்த விலங்கைக் கீழே நழுவி விழும்படி செய்தது.

"மிஸ்டர் இன்ஸ்பெக்டர்!" என்றாள் சீதாப்பாட்டி அதிகாரமாக "மே ஐ நோ... ஆன் வாட் கிரவுண்ட்ஸ் யு ஆர் அரெஸ்டிங் ஹிம்?"

"ஒருத்தர் மாதிரி நடிச்சது, திருடியது, அண்டர் செக்ஷன்... இபிகோ. 416, அப்புறம் இபிகோ. 358."

சீதாப்பாட்டி வெடித்தாள். "டாம் நான்சென்ஸ்! அவர் நடித்தது சகுந்தலா வரதன் வீட்டிலிருந்து நகைகளைத் திருடிச் செல்ல வேண்டும் என்ற டிஸானஸ்ட் இன்டென்ஷனோடு அல்ல. ஜஸ்ட் ஃபார் ஃபன் வேடிக்கையாக நடந்து கொண்டார். ஆகவே அவரை செக்ஷன் 416ல் கைது செய்தது தப்பு. அவர் திருடவே இல்லை. ஆகவே செக்ஷ 358'படி அவரைக் கைது செய்தது தப்பு."

இன்ஸ்பெக்டர் விழித்தார்.

"மிஸ்டர் இன்ஸ்பெக்டர், உங்கள் அவசரக் கண்களில் நீதி மறைந்து விட்டது. மிஸ்டர் அப்புசாமி தந்ததாக நீங்கள் கைப்பற்றிய சங்கிலிக்கு உரியவர் இங்கு இருக்கிறார்களா?"

"இருக்கிறார்கள்." இன்ஸ்பெக்டர் கட்டளையிட சகுந்தலா வாதனை இரண்டு கான்ஸ்டபிள்கள் ஜாக்கிரதையாகப் பிடித்து வந்தனர்.

சீதாப்பாட்டி, தான் கொண்டு வந்த சங்கிலியை சகுந்தலா வாதனிடம் காட்டினாள் "மிஸஸ் சகுந்தலா வாதன், ஜஸ்ட் ஸீ திஸ் செயின். இந்தச் சங்கிலி உங்களுடையதா?"

சகுந்தலா வாதன் சங்கிலியை வாங்கித் தடவி நீவி உற்றுக் கவனித்தாள்.

"ஆம். இது என்னுடையதுதான்."

"மிஸ்டர் இன்ஸ்பெக்டர்!" என்றாள் சீதாப்பாட்டி அமைதியாக "நான் நினைத்தது வெகு கரெக்ட் நகைகளைப் பறிகொடுத்ததிலிருந்து மிஸஸ் சகுந்தலா வாதன் இஸ் இன் எ ஸ்டேட் அஃப் கன்ஃப்யூஷன் என்பதை நிரூபிக்க இந்தச் செயினை நான் இப்போது கொண்டு வந்து அவரிடம் காட்டினேன்; இந்த செயின் என்றில்லை. வேறு எந்த செயினை நான் காட்டியிருந்தாலும், அவருடைய ஆங்க்ஸைடியில் தன்னுடையதுதான் அது என்று அவர் சொல்லியிருப்பார். உண்மையில் இந்த செயினை நான் இதோ இந்தக் காரியதரிசி மிஸஸ் அகல்யா சந்தானத்திடமிருந்து ஜஸ்ட் நௌ வாங்கிக் கொண்டு வந்தேன்."

இன்ஸ்பெக்டர் குழப்பதுடன் அகல்யா சந்தானத்தைப் பார்க்க, அவள் "ஆமாம் இன்ஸ்பெக்டர் என் சங்கிலியைத்தான் பிரஸிடெண்டிடம் சற்று முன் கழற்றிக் கொடுத்தேன்" என்று முன்னே வந்து சொன்னாள்.

இன்ஸ்பெக்டர் அவநம்பிக்கையான கண்களுடன் ஒரு கலக்கல் பார்வை பார்த்தார் - ஏதோ அவரே நகையைப் பறிகொடுத்து விட்டவர் மாதிரி

"மிஸ்டர் இன்ஸ்பெக்டர்!" என்றாள் சீதாப்பாட்டி அமைதியாக "உங்களுக்கு இன்னும் நம்பிக்கை வரவில்லை. தட்ஸ் ஆல் ரைட் என் ஹஸ்பெண்டிடமிருந்து நீங்கள் பறிமுதல் செய்தீர்களல்லவா செயினை? அதைக் கொஞ்சம் இப்படிக் கொடுங்கள்."

இன்ஸ்பெக்டர் ஜாக்கிரதையாகச் சட்டைப் பையில் வைத்துக் கொண்டிருந்த செயினை எடுத்துச் சீதாப்பாட்டியிடம் நீட்டினார்.

சீதாப்பாட்டி அதைக் கையில் வாங்கிக் கொண்டு, "நைஸ் செயின்..." என்று பாராட்டினாள். பிறகு, "மிஸ்டர் இன்ஸ்பெக்டர்!" என்றாள் குறுக்கு விசாரணை தோரணையில், "இது மிஸஸ் சகுந்தலா வரதனுடையது என்பதுதானே உங்கள் கண்டுபிடிப்பு?"

"சந்தர்ப்ப சாட்சியங்களை வைத்து அப்படித்தான் என்று உறுதியாக நம்புகிறோம்." மிடுக்குடன் இன்ஸ்பெக்டர் கூறினார்.

"மிஸ்டர் இன்ஸ்பெக்டர் இந்தச் செயினைப் பற்றி மிஸஸ் சகுந்தலா வரதனிடம் இரண்டொரு கேள்விகள் நான்கேட்க அனுமதிப்பீர்களா?"

இன்ஸ்பெக்டர் தலையசைத்தார்.

"தாங்ஸ் ஃபார் யுவர் கைண்ட் பர்மிஷன்!" என்றவாறு சீதாப்பாட்டி செயினை எடுத்துக் கொண்டு சகுந்தலா வரதன் அமர்ந்திருந்த நாற்காலி அருகே சென்றாள்.

"மிஸஸ் வரதன், குட் ஈவினிங்! இந்தப் பார்ட்டிகுலர் செயினைத்தானே உங்களிடம் போலீஸ் கொண்டு வந்து காட்டியது."

சகுந்தலா வரதன் வாங்கிப் பார்த்தாள். "ஆமாம், இதோ செயின், என் செயின்."

"வெரி சைன்ட் ஆஃப்யூ. ஒரு சின்னக் கேள்வி, இந்த செயினுக்குப் பிரிப்பதற்கு ஹூக் ஏதும் உண்டா? இல்லை, கழுத்து வழியாக அப்படியே மாட்டிக் கொள்வதா?"

"ஏன், கொக்கி இருக்குமே?"

"அயம் ஸாரி மிஸஸ் வரதன்!" இந்த செயினில் கொக்கியே இல்லை ஆனாலும் ஒரு சின்ன ஸ்க்ரூ மாதிரி பட்டன் இருக்கிறது."

"அப்படியா? வந்து வந்து" சகுந்தலா வரதன் தடுமாறினாள். இன்ஸ்பெக்டரின் முகம் சாயம் போகத் தொடங்கியது.

"மிஸ்டர் இன்ஸ்பெக்டர்! நீங்கள் கூட இந்த ஸ்க்ருவை பிரஸ் செய்து பார்க்கலாம்." இன்ஸ்பெக்டரிடம் சங்கிலியை நீட்டினாள் சீதாப்பாட்டி. "மிஸஸ் சகுந்தலா வரதன், இதை உங்கள் செயின் என்கிறீர்களில்லையா? உங்கள் இன்ஷியல் மாதிரி ஏதாவது மார்க் இதில் உண்டா?"

சகுந்தலா வரதனின் ஏற்கெனவே வெளுத்த முகம் இன்னும் வெளுப்பாயிற்று. "ஒரு மார்க்கும் இருக்காது."

"ஸீ திஸ் மிஸ்டர் இன்ஸ்பெக்டர்!"

சீதாப்பாட்டி செயினிலிருந்த ஸ்க்ரூ பட்டனை ஓர் அழுத்து அழுத்திக் காட்டினாள். ஸ்க்ருவை அழுத்தியதும் சங்கிலி அவிழ்ந்து கொண்டது. "ஸ்க்ருவுக்கு அடியில் கொஞ்சம் உற்றுப் பாருங்கள். 'எஸ். எல்.' என்ற லெட்டர்ஸ் இருக்கிறதா?"

இருந்தது.

"எஸ். எல் ஃபார் சீதாலட்சுமி. செயின் என்னுடையது. என் கணவர் சமையல்காரக்

சீதாப்பாட்டிக்கு என் முழுச் சம்மதத்துடன், என் சங்கிலியைத்தான் பிரசென்ட் செய்திருக்கிறார். அவரிடம் நீங்கள் கைப்பற்றியது சகுந்தலா வரதனுடைய நகையே அல்ல."

இன்ஸ்பெக்டருக்கு வியர்த்தது "வந்து வந்து மிஸ்டர் அப்புசாமிக்குத் திடீரென்று அவ்வளவு பணம் பின்னே எப்படி?"

"என் டௌட் என்னவென்றால், மிஸ்டர் மணவாள முதலியார் அவரை உபயோகப்படுத்தித் தன்னுடைய திட்டத்தை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார்! சகுந்தலாவரதன் வீட்டு டின்னருக்கு இவரைப் போகச் சொன்னதுகூட ப்ரீ பிளாண்ட் ஆக இருக்குமென்று எனக்கு இப்போது ஸஸ்பிஷனாக இருக்கிறது. மிஸ்டர் முதலியார், வெளியூர் புறப்படுவதற்குள் அவர் பங்களாவை நீங்கள் செக்செய்தால் நகைகள் உங்களுக்குக் கிடைத்தாலும் கிடைக்கும். எதற்கும் ஏர்போர்ட்டுக்கு நீங்கள் இன்ஃபார்ம் பண்ணிவிடுங்கள்."

போலீஸ் குழு மணவாள முதலியாரைப் பிடிக்க விரைந்தது.

சீதாப்பாட்டி ஒரு வாரமாகவே தனது சொந்த சங்கிலியைப் பீரோவில் தேடிக் கொண்டிருந்தாள், எங்கோ கை மறதியாகத் தான் வைத்திருப்போமோ என்று.

சீதாப்பாட்டியிடமிருந்து சங்கிலியைப் போலீஸ் கைப்பற்றியதும் அது தன் சங்கிலிதான் என்பது தெரிந்து விட்டது. ஆனால் அடுத்த கணம் போலீஸ், அது சகுந்தல வரதன் சங்கிலி என்றும், அதற்காக அப்புசாமியை அவர்கள் கைது செய்யப் போவதாகத் தெரிந்ததும் கணவனின் மதிப்போடு தன் மதிப்பும் பாதிக்கப்படும் என்ற

எண்ணம் ஏற்பட்டு, அவரை எப்படியும் காப்பது என்று காரியத்தில் இறங்கினாள்.

"மிஸஸ் சீதா! உங்களுக்கு எப்படி நான் நன்றி சொல்வேன். உங்கள் கணவர் மீது அநியாயமாகக் குற்றம் சாட்டிவிட்டேன். என்னை ரொம்ப மன்னியுங்கள். நீங்களில்லாவிட்டால் என் நகைகளை நான் மீண்டும் பார்த்தே இருக்கமுடியாது..." சகுந்தலா வரதனின் கைகள் சீதாப்பாட்டியைப் பற்றியவாறு மன்னிப்புக்கோரின.

"தட்ஸ் ஆல்ரைட். என் கணவர் ஒரு சாது... ஹி இஸ் வெரி இன்னொஸண்ட்... அவர் என்ன கேட்கிறார் தெரியுமா? சில மாதங்களுக்கு முன் எங்கள் கிளப்புக்கு நீங்கள் வந்தீர்களே. உங்களுக்கு ஞாபகமிருக்கும் என்று நினைக்கிறேன்..."

"எனக்கு ரொம்ப ஞாபகமறதி..."

"நான் ஞாபகப்படுத்துகிறேன். அன்றைக்குத்தான் ஒரு சின்ன ஆக்ஸிடெண்ட் உங்களுக்கு ஏற்பட்டது. அந்த ஆக்ஸிடெண்ட்டுக்குக் காரணம் ஒரு வகையில் என் ஹஸ்பெண்ட்..., அவர் வீசிய பந்துதான் உங்கள் மீது பட்டு உங்களை அப்ஸெட் பண்ண வைத்து விட்டது..."

சகுந்தலா வரதன் சிரித்தாள். "ஓ! ஓ... அந்த நிகழ்ச்சியைச் சொல்கிறீர்களா?"

"அவர் ரொம்ப வருத்தப்பட்டுக் கொண்டிருந்தார். அவர் மேல் எழுந்த கோபத்தால்தான் நீங்க எங்கள் கழகத்துக்கு டொனேட் பண்ணவில்லை என்று இன்றைக்கு கூட வருந்தினார்."

சகுந்தலா வரதன் புரிந்து கொண்டவளாகச் செக் புத்தகத்தை எடுத்தாள்.

"நான் பிளாங்க் செக்கைக் கொடுத்து விடுகிறேன் நீங்கள் கட்ட நினைத்த ஹாலைக் கட்டி முடியுங்கள். பூராவும் என் செலவு"

சீதாப்பாட்டி இந்த மகிழ்ச்சியான செய்தியை மைக் மூலம் தெரிவித்தபோது அங்கத்தினர்களின் கையொலி அடங்க நெடு நேரமாயிற்று.

பா. மு. கழகத்தில் சகுந்தலா வாதன் நன்கொடையால் கட்டப்பட்ட ஹால் திறப்பு தினம்.

"சீதே! என்னிக்கோ, பதிமூணு, பதிநாலு, பதினைந்து!" அப்புசாமி சிரத்தையுடன் இரண்டு காதுகளையும் பிடித்துக் கொண்டு தோப்புக்கரணம் போட்டுக் கொண்டிருந்தார்.

காதுத் தோட்டின் பளபளப்பைப் பட்டுப் புடவையின் தலைப்பால் துடைத்தவாறு டிரெஸ்ஸிங் டேபிளிலிருந்து திரும்பிய சீதாப்பாட்டி, "சே! சே! சே! வாட் இஸ் ஆல் திஸ்? கதவு திறந்து கிடக்கிறது. நீங்கள் இப்படி என் எதிரில் தோப்புக்..." என்று சொல்லி முடிக்கு முன் அப்புசாமி "இதோ சீதே!" என்று விரைந்து சென்று கதவைத் தாளிட்டு விட்டு வந்து, "பதினாறு, பதினேழு... பதினெட்டு..." என்று தன் தோப்புக்கரணத்தை விட்ட இடத்திலிருந்து போடத் தொடங்கி விட்டார்.

"மை குட்னஸ்! நிறுத்துங்க உங்க தோப்புக்கரணத்தை! யாராவது பார்த்தால் எனக்குத்தான் டிஸ்கிரேஸ்!"

"கிகிக்!" என்று ஒரு சிரிப்பொலி ஜன்னல் பக்கமிருந்து கேட்டது.

ரசகுண்டு!

"அடடே! நான் ஒரு முட்டாள். கதவைச் சாத்தினவன் ஜன்னலைச் சாத்தவில்லை."

"என்ன தாத்தா! உங்க பாடி சோனியாத்தானே இருக்கு... எதற்குப் பாவம் பஸ்கி போடறீங்க?"

''மடையா'' என்றார் அப்புசாமி. ''பஸ்கி போடலையடா! தோப்புக்கரணம் போடறேன். ஆமாண்டா! நான் பண்ணினதெல்லாம் தப்பு, தப்புன்னு தோப்புக்கரணம் போடறேன். சந்தோஷமாப் போடறேன். என் சீதேக்கு நான் இன்னும் ஆயிரம் போடுவேன். நீ யார்டா சிரிக்க..."

"சே! சே! நான் சிரிக்கலியே தாத்தா..."

"ஒண்ணு சொல்றேன் கேட்டுக்கோடா... உறுமி மேளம்! வெறுமே பஸ்கி போட்டா உடம்புக்கு மட்டும் தான் பலம். ஆனால் அதே பஸ்கியை மனைவி முன்னாலே போட்டால், செலவுக்கு ஐந்து பத்து கேட்டாலும் தருவாள்..."

"தாத்தா!" என்றான் ரசம் குரல் தழதழக்க. "கரன்ஸி நோட்டைப் படுக்கைப் பூராப் பரப்பிப் படுத்த நீங்களா தாத்தா இப்படிப் பேசறது. ஐந்து பத்துன்னு..."

"அதெல்லாம் மாயையடா! இதுதான் நிஜம்! நான் நிஜம்! என் சீதை நிஜம்! நான் அவளுக்குப் போடுகிற இந்தத் தோப்புக்கரணம் நிஜம்!"

ரசகுண்டு உதட்டைப் பிதுக்கினான். "ஊஹூம் தாத்தா நீங்க உருப்படியே ஆக மாட்டீங்..."

"செரித்தான் போடா!" அப்புசாமி ஜன்னலைப் படரென்று சாத்திவிட்டு சுதந்திரமாகப் பாடலானார். "பூமியில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம்... என் சீதேக்கே நான் அடிமை செய்வேன்... ஆ... ஆ... ஆ... ஆடுவோமே... ஏ... ஏ..."

"உங்களை இதற்குத்தான் எங்கேயும் கூட்டிப் போக நான் பிரியப்படறதில்லே. . . . இன்னும் நீங்க டிரஸ்ஸை சேஞ்ச் பண்ணிக் கொண்டாகலையா விடிந்தது! நாட் ஈவன் ஷேவிங் கூட முடிச்சுக்கலை."

அப்புசாமி பரபரத்தார். "இதோ சீதே! நீ ஷேவ் பண்ணிட்டே இரு. . நான் இதோ புறப்பட்டுட்டே இருக். . . ஐயையோ. . . நான் புறப்பட்டுட்டே . . இல்லே நீ புறப்பட்டுட்டே இரு இதோ நான் ஷேவ் பண்ணிகிட்டு."

ரேசர் செட்டுடன் ஓடினார் அப்புசாமி.

(முற்றும்)

